# குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம்

சு.கு. பன்னீர்செல்வம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம்

சு.கு. பன்னீர்செல்வம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Kulōttuṅkaṉ pārvaiyil camutāyam |
| Author | : | Dr. S.K. Paneerselvam<br>Assistant Professor<br>Department of Education<br>Bharathidasan University, Trichy - 620 023 |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai - 600 113<br>Ph: 2254 2992 |
| Publication No. | : | 622 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2009 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xviii + 222 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 70/- (Rupees Seventy only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. ✆ : 044-24661807 |
| Subject | : | Poetic Criticism |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

கவிதை தமிழுக்குப் புதியதன்று. ஆயின், அறிவியல் தொழில்நுட்பவியல் அறிஞர்களின் தமிழ்க் கவிதைகளே புதியன. புதுமையானவையும் கூட. ஏனைய தமிழ்க் கவிஞர்களின் பார்வைகளிலிருந்து இக்கவிஞர்கள் அறிவியல் தொழில்நுட்பக் கல்வியியல் கருத்துகளில் மட்டுமே வேறுபட்டு நிற்கின்றனர் எனக் கருதிவிட முடியாது. தமிழ், தமிழ்ச் சமூகம், பெண்ணியம், தமிழ்ச் சாதியக் கோட்பாடுகள் எனும் பாடுபொருள்களிலும் இவர்கள் தனிப்பார்வை கொண்டுள்ளனர்.

அவர்களில் ஒருவராக, மேலானவராக, கவிஞர் குலோத்துங்கன் அமைகிறார் என்பதில் கருத்து வேறுபாடு இருக்காது எனக் கருதுகின்றேன்.

தமிழ்க் கவிஞர்களையும் அவர்தம் பாடுபொருள்களையும் திறனாய்வு செய்யும் தமிழறிஞர்களிலிருந்து வேறுபட்டு, கல்வியியல் அறிஞர் முனைவர் சு.கு. பன்னீர்செல்வம் அவர்கள் குலோத்துங்கன் கவிதைகளை ஆய்வு செய்திருக்கின்றார். கவிதைகள் முன்நிற்கின்றனவா அல்லது பாடுபொருள்கள் தொடர்பான மொத்த இந்திய மற்றும் தமிழ்ச் சிந்தனைகள் முன்நிற்கின்றனவா எனப் பிரித்தறியவியலாத வகையில் இந்த ஆராய்ச்சியாளரின் திறனாய்வு இந்நூலில் அமைந்துள்ளது. இதன்மூலம் தமிழுக்குக் கிடைத்த ஒரு சிறந்த திறனாய்வு நூலாக இது திகழ்கிறது. இது பாராட்டத் தகுந்தது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப் பெற்றுள்ள பல அறக்கட்டளைகளில் காலத்தால் முற்பட்டது டாக்டர் மு. வரதராசனார் பெயரில் பலரால் ஏற்படுத்தப் பெற்றுள்ள இந்த அறக்கட்டளை ஆகும். இதுவரை, பத்துச் சொற்பொழிவுகள் இதில் அரங்கேறியுள்ளன. அவற்றில் ஒன்று தவிர ஏனைய நூல்களாக இந்நிறுவனத்தால் வெளியிடப் பெற்றுள்ளன. பதினோராம் சொற்பொழிவான இச்சொற்பொழிவு சொற்பொழிவு நாளன்றே நூலாக்கம் பெற்று, வெளியிடப்பெறுவதும் பாராட்டுக்குரியது.

சிறந்த கல்வியாளரும் எழுத்தாளரும் தமிழறிஞருமான டாக்டர் மு.வ. அவர்களின் பெயரில் இந்நிறுவனத்தில் அமைந்துள்ள அறக்கட்டளையின் பொறுப்பை ஏற்றுக்கொள்வதில் மிகுந்த மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறேன். இவ் அறக்கட்டளையை நிறுவிய அனைவருக்கும் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன முன்னாள் இயக்குநரும், தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தருமான முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் என் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவைப் பதிப்பித்துச் செம்மைசெய்து மெய்ப்புத் திருத்தமும் செய்த இந்நிறுவனப் பதிப்பு மேற்பார்வையாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

இயக்குநர்



## ஆசிரியர் குறிப்பு

முனைவர் சு. கு. பன்னீர்செல்வம், சேலம் மாவட்டம் வாழப்பாடி சிங்கபுரத்தில் குழந்தைவேல்-மீனாட்சி தம்பதியருக்குப் பிறந்து தனது தொடக்கக் கல்வியை விழுப்புரம் மாவட்டம் பெத்தா சமுத்திரம் கிராமத்திலும் உயர்நிலைப்பள்ளிக் கல்வியை நயனார் பாளையம் கிராமத்திலும் கற்றார். இளங்கலைப் பட்டத்தைச் சென்னைப் பல்கலைக்கழகமும், முதுகலைப் பட்டம், இளங்கலை மற்றும் முதுகலைக் கல்வியியல் கல்விப்பட்டங்களை (B.Ed. & M.Ed.) அண்ணாமலைப் பல்கலைக்கழகமும், ஆய்வியல் நிறைஞர் பட்டத்தை (M.Phil.) மதுரை காமராசர் பல்கலைக்கழகமும், முனைவர் பட்டத்தைக் கோவை பாரதியார் பல்கலைக்கழகமும் அளித்துள்ளன. தனது பள்ளித் தமிழாசிரியர் புலவர் கு.அண்டிரன் அவர்களது வழிகாட்டுதலின்படி ஆசிரியர் பணியைத் தேர்ந்தெடுத்தார். முதன்முதலில் *1990*ல் புதுதில்லி கரோல்பார்க் பள்ளியில் ஆசிரியர் பணியைத் தொடங்கிப் பின்னர் *1992*இல் பெரம்பலூர் ரோவர் மேல்நிலைப் பள்ளியில் *5* ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றினார். *1995*இல் அரசுப் பணியில் விழுப்புரம் மாவட்டம் அத்தியூர்திருக்கை தொடக்கப் பள்ளியில் இடைநிலை ஆசிரியராகவும் பின்னர் *1996*இல் சேலம் மாவட்டம் சிங்கபுரம் அரசினர் மேல்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றியபோது ஈரோடு மாவட்டம் பெருந்துறையிலுள்ள அரசினர் ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனத்தில் *2000*இல் விரிவுரையாளராகச் சேர்ந்தார். அந்நிறுவனத்தின் முதல்வர் முனைவர் க.நா. இளங்கோவன் அவர்களைத் தனது குருவாகக் கொண்டு அவரது வழிகாட்டுதலின்படி செயல்பட்டு *50*க்கும் மேற்பட்ட பல்வேறு தேச மற்றும் சர்வதேசக் கருத்தரங்குகளில் பங்கேற்றுத் தனது ஆராய்ச்சிக் கட்டுரைகளை அங்கு அளித்துள்ளார். இதுவரை தமிழில் *128* கட்டுரைகளையும் ஆங்கிலத்தில் *51* கட்டுரைகளையும் பல்வேறு இதழ்கள் வெளியிட்டுள்ளன. புதுதில்லியிலுள்ள தேசியக்கல்வி நிர்வாகத் திட்டமிடல் மற்றும் மேலாண்மைப் பல்கலைக்கழகத்தில் (NUEPA) பட்டயம் பெற்ற, தமிழகத்தின் *10*ஆவது நபர் இவர். *53* ஆசிரியர்களின் செயலாராய்ச்சிகளுக்கு ஆய்வு நெறியாளராகப் பணியாற்றியுள்ளார். *2007*முதல் திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் கல்வியியல் துறையின் துணைப்பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். இவரை ஆய்வு நெறியாளராகக் கொண்டு*23* பேர் ஆய்வியல் நிறைஞர் (M.Phil.) பட்டம் பெற்றுள்ளனர். மேலும் *8* பேரின் முனைவர் பட்ட ஆய்வுக்கு ஆய்வு நெறியாளராக உள்ளார். தனது துணைவியார் பொன்.அன்புச் செல்வி, மகள் அரியாழினி, மகன் ஆசீலன் இவர்களுடன் தற்போது திருச்சியில் வசிக்கிறார்.

# குலோத்துங்கனின் வாழ்வும் தமிழ்ப் பணியும்

'குலோத்துங்கன்' என்ற புனைபெயரைக் கொண்ட வா.செ. குழந்தைசாமி அவர்கள் 14.07.1929இல் கரூர் மாவட்டம் வாங்கலாம்பாளையத்தில் பிறந்தார். பெற்றோர் பெயர் வே.செல்லப்பக் கவுண்டர்; மாரம்மாள். இவருடன் பிறந்தவர்கள்: தங்கை முத்துலட்சுமி, தம்பி வா.செ.பழனிச்சாமி.

வா.செ.குழந்தைசாமியின் திருமணம் 1965ல் நடைபெற்றது. இவருடைய துணைவியார் டாக்டர் சௌந்தரவல்லி. இத்தம்பதியரின் மகளான கீதாஞ்சலி தனது துணைவர் அனுராக் அவர்களுடன் அமெரிக்காவில் கணிப்பொறி நிறுவனமொன்றில் பணிபுரிகிறார். மகன் செல்வன் கணிப்பொறியியல் நிபுணர். மேலாண்மையிலும் (MBA) பட்டங்கள் பெற்றுள்ளார். மருமகள் காயத்திரி கட்டட வடிவமைப்புக் கலைஞர். இருவரும் இலண்டனில் பணிபுரிகின்றனர்.

**கல்வி கற்றல்**

வா.செ.குழந்தைசாமி தொடக்கக்கல்வியை வாங்கலாம்பாளையம், திண்ணைப்பள்ளியில் தொடங்கினார். அது ஓர் ஆசிரியர் பள்ளியாகும். அப்பள்ளியில், மணல் பரப்பி அதில் அவர் எழுதக் கற்றுக்கொண்டார். அப்பள்ளியின் ஆசிரியர், நடராசப்பிள்ளை தமிழ், கணக்கு ஆகிய பாடங்களில் தனக்குத் தெரிந்த அனைத்தையும் குழந்தைசாமிக்குக் கற்றுக்கொடுத்தார். அதன் காரணமாகக் குழந்தைசாமி எந்த வகுப்பில் படித்தாலும் அவ்வகுப்பின் தகுதிக்கு மீறிய அளவில் திறமை மிக்கவராகத் திகழ்ந்தார். குழந்தைசாமி ஒரு வருடம் படிப்பை நிறுத்திவிட்டு அவர்களுடைய தோட்டத்தில் வேலைசெய்தார். எனினும் மேற்கொண்டு படிக்கவேண்டும் என்ற ஆசைமட்டும் தணியவில்லை. தனது ஆசையை ஆசிரியர் நடராசப் பிள்ளை அவர்களின் மூலம் தந்தையிடம் வற்புறுத்தினார். தந்தையும், குழந்தைசாமியைக் கரூர் நகராண்மைக் கழக உயர்நிலைப்பள்ளியில் சேர்த்தார். நடராசப் பிள்ளையின் உறவினர் இலட்சுமணப்பிள்ளை கரூரில் உணவுவிடுதி நடத்தி வந்தார். குழந்தைசாமி அங்கே உயர்நிலைப் பள்ளிக் கல்வியை ஆறாம் வகுப்பிலிருந்து 11ஆம் வகுப்புவரை முதல் மாணாக்கனாகத் திகழ்ந்தார். படிக்கும்பொழுதே புத்தகம் கட்டுதல், பூப்பந்து மட்டைக்கு நரம்பு கட்டுதல் ஆகியவற்றைச் செய்ததன்மூலம் கிடைக்கும்

வருமானத்தில் பொது அறிவு நூல்களையும், தனக்குத் தேவையான அத்தியாவசியப் பொருள்களையும் தந்தைக்குச் சிரமம் கொடுக்காமல் வாங்கிக் கொண்டார். பள்ளி இறுதி வகுப்புப் பொதுத்தேர்வில் மாவட்டத்தில் முதல் மாணாக்கனாகத் தேர்ச்சி பெற்றார். தமிழின் மீதும் தேவநேயப்பாவாணர் மீதும் வைத்திருந்த மதிப்பின் காரணத்தால், பாவாணர் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்த சேலம் நகராண்மைக் கல்லூரியில் இடைநிலைப் படிப்பில் (Intermediate) சேர்ந்து படித்தார்.

இடைநிலைப் படிப்பு முடிந்து, மேற்படிப்பை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் B.A. (Hons.) ஆங்கில இலக்கியம் அல்லது பொருளாதாரம் படிக்க விரும்பினார். பொருளாதாரப் பேராசிரியர் டாக்டர் போத்வாலிடம் இடம் கேட்டார். அவர், குழந்தைசாமியின் மதிப்பெண் களைப் பார்த்துவிட்டு, அவரை அப்பல்கலைக்கழகத்தில் B.E.படிப்பிற்கு இடம் கிடைக்கும் என்றும், துணைவேந்தரைப் பார்க்கவும் அனுப்பி வைத்தார். B.E.மாணவர் சேர்க்கை முடிந்துவிட்டது எனத் துணைவேந்தர் கூற, மீண்டும் பொருளாதாரப் பேராசிரியரிடம் வந்தார். அவர் அரசுப் பொறியியல் கல்லூரிகளில் இடம் கிடைக்கும் என்று கூறியதுடன், ஒரு வேளை கிடைக்காது போயின் உறுதியாகப் பொருளாதாரத்தில் இடம் கொடுப்பதாக உறுதியளித்தார். அதிக மதிப்பெண்கள் பெற்றிருந்த காரணத்தால் குழந்தைசாமிக்குக் காகிநாடா அரசுப் பொறியியல் கல்லூரியில் இடம் கிடைத்தது. அதில் B.E. படிப்பைக் குழந்தைசாமி முடித்தார். மைய அரசின் உதவித் தொகைத் திட்டத்தின்கீழ்த் தேர்வு பெற்று, ஜெர்மனியில் ஓர் ஆண்டு நீரியல் (Hydrology) துறையில் பயிற்சி பெற்றார். மீண்டும் மைய அரசின் மூலம் அமெரிக்காவிலுள்ள இல்லினாய்ஸ் (Illinois) பல்கலைக்கழகத்தில் நீர்வளத் துறையில் முனைவர் பட்டம் பெற்றார். அவர் படித்துப் பெற்ற பட்டங்களும் அவருக்குக் கொடுக்கப்பட்ட கௌரவப் பட்டங்களின் விபரங்களும் வருமாறு:

| பட்டம் | நிறுவனம் | ஆண்டு |
|---|---|---|
| B.E. (Civil Engg) | ஆந்திரப் பல்கலைக்கழகம் | 1951 |
| D.S.S. (Post-Graduate Diploma in Social Service) | சென்னைப் பல்கலைக்கழகம் | 1955 |
| M.Tech. (Hydraulics) | ஐ.ஐ.டி. - கரக்பூர் | 1956 |
| Ph.D. (Hydrology and Water Resources) | இல்லினாய் பல்கலைக்கழகம், அமெரிக்கா | 1964 |

| பட்டம் | நிறுவனம் | ஆண்டு |
|---|---|---|
| D.Litt. (Honoris Causa) | யாழ்ப்பாணம் பல்கலைக்கழகம், இலங்கை | 1980 |
| D.Sc. (Honoris Causa) | அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி | 1997 |
| D.Litt. (Honoris Causa) | பாண்டிச்சேரி மத்திய பல்கலைக் கழகம், பாண்டிச்சேரி | 1997 |
| Ph.D. (Honoris Causa) | ஜவஹர்லால் நேரு தொழில்நுட்பப் பல்கலைக்கழகம், ஐதராபாத் | 1999 |

பணி புரிதல்

குழந்தைசாமி பொறியியல் பட்டம் பெற்றவுடன், அன்றைய சென்னை மாகாணப் பொதுப்பணித்துறையில் இளநிலைப் பொறியாளராகப் பாபநாசத்தில் ஒன்பது மாதங்கள் பணிபுரிந்தார். அப் பதவி அவருடைய மனப்போக்குக்கு ஏற்றதாக இல்லாததால் அப்பணி யிலிருந்து விடுபட்டார். பின்னர், கோவை நகராண்மைக் கழகத்தில் நகரமைப்பு அதிகாரியாகச் (Town Planning Officer) சேர்ந்தார். இப்பணியும் தனது இயல்புக்கு ஏற்றதாகவும் நிறைவு தருவதாகவும் இல்லாத காரணத்தால், இப்பணியிலிருந்தும் விடுபட்டார்.

குழந்தைசாமியின் எண்ணமும் பார்வையும் கல்வித்துறைமீது இருந்தன. அதனால், பொதுப்பணித் தேர்வுக்குழு மூலம் கல்வித் துறைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். கோவை அரசினர் தொழில்நுட்பக் கல்லூரியில் உதவி விரிவுரையாளராகப் பணியேற்றார். இவ்வாசிரியப் பணி அவர் விரும்பி ஏற்றுக் கொண்ட ஒன்றாகும். அதன் பின்னர்க் கல்வித்துறையின் பணிகள் பலவற்றிலும் பல நிலைகளில் 41 ஆண்டுகள் பணிபுரிந்தார். 1994இல் ஓய்வு பெற்றார். குழந்தைசாமி அவர்கள் பணிபுரிந்த பதவிகளின் விபரங்கள் பின்வருமாறு

| பணிநிலை | நிறுவனம் | ஆண்டு |
|---|---|---|
| இளநிலைப் பொறியாளர் | பொதுப்பணித்துறை, சென்னை மாகாணம் | 1951-52 |
| நகரமைப்பு அதிகாரி | நகராண்மைக் கழகம், கோவை | 1952-53 |
| உதவி விரிவுரையாளர் | அரசு தொழில்நுட்பக் கல்லூரி, கோவை | 1953-57 |

| பணிநிலை | நிறுவனம் | ஆண்டு |
|---|---|---|
| விரிவுரையாளர் (நீரியல் பட்ட மேற்படிப்புத்துறை) | கிண்டி பொறியியல் கல்லூரி, சென்னை | 1957-63 |
| உதவிப் பேராசிரியர் (நீரியல்பட்ட மேற்படிப்புத் துறை) | கிண்டி பொறியியல் கல்லூரி, சென்னை | 1964-65 |
| பேராசிரியர் (நீரியல் பட்ட மேற்படிப்புத் துறை) | கிண்டி பொறியியல் கல்லூரி, சென்னை | 1965-71 |
| டீன் (Dean) (நீரியல் பட்ட மேற்படிப்புத்துறை) மற்றும் ஆராய்ச்சித் துறைகள்) | கிண்டி பொறியியல் கல்லூரி, சென்னை | 1971-74 |
| தொழில்நுட்பக்கல்வி இயக்குநர் | தமிழக அரசு, தமிழ்நாடு | 1974-78 |
| துணைவேந்தர் | மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை | 1978-79 |
| U.N. Expert/Adviser | மொரட்டுவா பல்கலைக்கழகம், இலங்கை UNESCO – பாரீஸ் | 1979-81 |
| துணைவேந்தர் | அண்ணாபல்கலைக்கழகம், சென்னை | 1981-90 |
| துணைவேந்தர் | இந்திராகாந்தி தேசிய திறந்தநிலைப் பல்கலைக்கழகம், புதுடில்லி | 1990-94 |

பெற்ற விருதுகள்

தன்னுடைய பணிக்காலத்தும் அதன் பிறகும் பல விருதுகளைப் பெற்றுள்ளார். அரசின் சாகித்ய அகாதமி வழங்கிய விருது; குடியரசுத் தலைவர் வழங்கிய பத்மஸ்ரீ விருது, கனடாவின் வான்கூவரிலுள்ள காமன் வெல்த் கல்வி நிறுவனம் வழங்கிய காமன்வெல்த் கல்வி நிறுவனத்தின் கௌரவ உறுப்பினர் விருது ஆகியவை குறிப்பிடத் தக்கவைகளாகும். இவர் பெற்ற விருதுகள் வருமாறு:

| விருதுகள் | நிறுவனம் | ஆண்டு |
|---|---|---|
| இந்திய வேளாண்மை அமைச்சகத் தங்கப் பதக்கம் | இந்தியப் பொறியாளர் கழகம் (இந்தியா) | 1973 |
| லிவர் ஹ்யூம் புலமைத் தொகை | மேற்கு ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிப் பேரவை, பெர்த் | 1975 |
| சாகித்ய அகாதமி விருது | 1988ஆம் ஆண்டுக்கான தமிழ் மொழிக்கான சாகித்ய அகாதமி விருது, புதுடில்லி | 1989 |
| இயல்செல்வம் | முத்தமிழ்ப் பேரவை | 1989 |
| இந்திரா காந்தி தேசிய ஒருமைப்பாடு விருது | அகில இந்தியத் தேசிய ஒருமைப்பாட்டு மாநாடு | 1989 |
| இந்தியாவின் மைய வேளாண்மை, மின்சக்திக் கழகத்தின் பவளவிழாத் தங்கப் பதக்கம், பரிசுத் தொகை | மைய வேளாண்மை, மின்சக்தி வாரியம், புதுடில்லி | 1991 |
| பத்மஸ்ரீ | இந்திய அரசு | 1992 |
| Scroll of Honour as one of the Eminent Engineering Personalities of India | இந்தியப் பொறியாளர் கழகம், கல்கத்தா | 1992 |
| பிரணவானந்த சரஸ்வதி விருது | பல்கலைக்கழக மானியக் குழுமம், புதுடில்லி | 1994 |
| தமிழ்ச் செம்மல் | மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை | 1996 |
| செந்தமிழ்ச் செம்மல் | தமிழகப் புலவர் குழு, திருச்சி | 1996 |
| அண்ணா விருது | ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை | 1997 |
| கம்பன்கழக விருது | கம்பன் கழகம், சென்னை | 1998 |
| திருவள்ளுவர் விருது | தமிழக அரசு | 1999 |
| காமன்வெல்த் நாடுகளின் கல்வி நிறுவனக் கௌரவ உறுப்பினர் | காமன்வெல்த் நாடுகளின் கல்வி நிறுவனம், வான்கூவர் | 1999 |

குழுக்களில் அங்கம்

உலக அளவிலும், தேசிய அளவிலும், மாநில அளவிலும் பல குழுக்களின் தலைவராகவும் உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்; தற்போதும் பணியாற்றிக் கொண்டுள்ளார். சர்வதேசியத் தொலைநிலைக் கல்விக் குழுவின் (International Council for Distance Education) ஆசியாவின் துணைத்தலைவர், காமன்வெல்த் நாடுகளின் பல்கலைக் கழகச் சங்கத்தின் (Association of Commonwealth Universities) தலைவர், உலக நீர்வளத் திட்டக்குழு உறுப்பினர் (Member, International Hydrological Programme, UNESCO, Parts) பல்கலைக்கழக மானியக்குழுவின் உறுப்பினர், அகில இந்தியத் தொழில்நுட்பக் கல்விக் கழகத்தின் (AICTE) உறுப்பினர், இந்தியப் பல்கலைக்கழகங்கள் சங்கத்தின் (AIU) தலைவர், இந்தியத் தொழில்நுட்பச் சங்கத்தின் (ISTE) தலைவர் போன்றவை அவற்றுள் முக்கியமானவை.

உலக அளவில் எட்டுக் குழுக்களிலும் தேசிய அளவில் நாற்பது குழுக்களிலும் மாநில அளவில் இருபத்தேழு குழுக்களிலும் அங்கம் வகித்தும், வகித்துக் கொண்டும் இருக்கிறார். அவையாவன:

1. உலக நீர்நிர்வாகச் சங்கம் தொழில் நுட்பக் குழு உறுப்பினர் (Member, Technical Committee – Internal Water Resource Association)

2. உறுப்பினர், நிலம் - நீர்வளக் குழுமம், உலக நீர்வளச் சங்கம், அமெரிக்கா (Member/Commission for Land and water Resources, International water Resources Association U.S.A.)

3. உறுப்பினர், உலக நீர்வளத்திட்டம் UNESCO, பாரீஸ், திட்டக்குழு (International Hydrological for the preparation of the second six year plan, 1978)

4. இந்தியச் செம்மொழி ஆய்வுக்குழுவின் உறுப்பினர் (Member, Classical Language Selection Committee, Govt. of India)

படைப்புகள்

அறிவியலும் கவிதையும் ஒன்றுக்கொன்று வேறானவை; மாறானவை. அறிவியல் உண்மையின் பாற்பட்டது; கவிதை உணர்ச்சியின் பாற்பட்டது. இரண்டும் ஒன்றோடொன்று இணைவது அரிது. ஆனால் வேறாவது எளிது. ஒரு கவிஞர் அறிவியல் அறிஞராக மாறுவது இயல்பானதன்று. நாளும் தன்நோக்குக்கொண்டு, புதியதைப்

படைக்கும் கடினமான கவிதை எழுதுவது மிகமிகக் கடினமானது மட்டுமன்று இயற்கைக்கும் மாறானது ஆகும். ஆண்டு முதிர முதிர ஒருவர்க்கு அழகு குறைவது போன்று அறிவு பெருகப்பெருக உணர்வு குன்றுவது உண்மை நிலையாகும். இஃது உண்மையெனில் ஓர் அறிவியல் அறிஞர் ஒரு கவிஞராக விளங்குவது விந்தையிலும் விந்தையாகும். இவ்விந்தையின் வடிவமாக விளங்குபவர் வா.செ. குழந்தைசாமி. இன்றுவரை கவிஞராக விளங்குவதும் சிறப்புடையதாகும்.

நாடறிந்த கவிஞராக விளங்குவதற்குரிய ஒரு காரணத்தை அவரே,

> *பள்ளிப் பருவத் தொடக்கம் முதல் பொதுவாக எனக்கு மொழிகளில் ஆழ்ந்த ஈடுபாடு இருந்து வந்திருக்கிறது. பள்ளியில் நான் பயின்ற வகுப்புகளின் தகுதிக்கு மேலான நூல்களைத் தேடிப்பெற்றுப் படித்து வந்திருக்கிறேன். நான் படித்த கரூர் நகராண்மை உயர்நிலைப் பள்ளியில் அன்றிருந்த சூழ்நிலை காரணமாகத் தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு, தமிழர் வரலாறு ஆகியவை பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வமும் அவற்றின் மீது பற்றும் பாசமும் கற்கும் விருப்பமும் வளர்ந்தன. தமிழில் கட்டுரை கவிதை எழுதுவதைப் போன்ற பணிகள் இன்பம் பயப்பனவாக இருந்தன. ஆதித்தனார் நடத்திவந்த 'தமிழன்' போன்ற இதழ்கட்குக் கட்டுரை, முக்கியமாக, கவிதை அனுப்புவதுண்டு. எதுவும் ஏற்கப்படடதில்லை. ஆனால் அவ்வப்பொழுது ஏதாவது எழுதுவதையும் நான் நிறுத்துவதில்லை. எழுதுவதும் எதிர்பார்ப்பதுமே நிறைவு தருவனவாக இருந்தன. ஏமாற்றம் இந்த முயற்சியைத் தடுக்கவில்லை*

என்று குலோத்துங்கன் கவிதைகள் முன்னுரையில் கூறுகிறார்.

குழந்தைசாமியின் இளமை தொட்டுத் தமிழில் ஈடுபாடு தோன்றுவதற்கு ஒரு சமூகக் காரணமும் உண்டு. அது, ஆங்கிலேயர்கள் ஆட்சியில் மற்ற இந்திய மொழிகளைப் போல நமது தாய்மொழியும் புறக்கணிக்கப்பட்டு இருந்தது. ஆங்கிலம் மட்டும் ஆட்சிமொழியாக இருந்ததால், தமிழர்களே தமிழைப் புறக்கணிக்கத் தொடங்கினர். இந்நிலையில் வடமொழி ஏற்றம் பெற்றுக் கொண்டிருந்தது. மறைமலையடிகள் தனித் தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

மேற்போக்காக நோக்கினால் அது மொழிக் காப்பு இயக்கமாக மட்டும் தோன்றும். ஆழ்ந்து நோக்கினால் பிறமொழிகளின் செல்வாக்கால் பின்னுக்குத் தள்ளப்பட்டிருந்த தமிழ்க் கலை, இலக்கியம், சமயம், பண்பாடு ஆகியவற்றை மீட்டு எடுக்கத் தோன்றியது புலப்படும். இதனைத் திராவிட இயக்கத்தினர் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டனர். தமிழ் உணர்வை, சமூக – அரசியல் இயக்கத்துடன் இணைத்து வளர்த்தனர். இதன் காரணமாகத் தமிழகம் முழுவதும் தமிழ் எழுச்சி தோன்றியது. இதனுடைய தாக்கம் கல்விக்கூடங்களிலும் நிலை கொண்டது. மாணாக்கர்கள் தமிழ் உணர்வினைப் பெறத் தொடங்கினார்கள். குழந்தைசாமியும் இதற்கு ஆட்பட்டார். இவ்வுணர்வின் காரணத்தால்தான்

*கோரிக்கை ஒன்றை எழுப்பிவிட்டேன் அது*
*கூடும் வரை மனம் ஓய்வதிலேன்*

என்றும் ‘என்பணி மானிடன் ஏற்றம்’ என்ற கவிதை நூலில் முன்னுரையில் கூறுகிறார்.

கவிஞர்கள் சொற்களில் வாழ்கிறார்கள். அவர்தம் உயிரும் உயர்வும் அவர்களுடைய படைப்புகளில் பதித்து வைக்கப்படுகின்றன. எப்பயணத்திற்கும் ஆயத்தம் தேவை. வாழ்க்கைப் பயணம் ஒரு திசைப் பாதையில் அமைந்துள்ளதால் மிகுந்த எச்சரிக்கையுடனும் தகுந்த ஏற்பாடுகளுடனும் உரிய காலத்தில் செய்வது இன்றியமையாதது ஆகிறது. வா.செ.கு. அவர்கள் ஆர்வமும் துடிப்பும் ஆற்றலும், தெளிந்த கல்வியும் மானிடம் கடந்த ஆசையும் செல்வமும் பொங்கும் வாழ்வும் புகழும் மனத்தில் கொண்டு தன்னைத் தயார் செய்து கொண்டவர். தானே பாதையும் சமைத்துப் பயணமும் செய்பவர். தான் கண்ட இன்பத்தை மற்றவர்களும் காணவேண்டுமென்பது அவரது ஆசை.

மனிதன் இன்று மாபெரும் வளர்ச்சியைக் கண்டுள்ளான். வேளாண்மை யுகம் தொடங்கி, தொழில்யுகம் தாண்டி, கல்வியறிவு யுகத்தில் கால் வைத்திருக்கும் மானுடம் மண்ணையும் வென்றது. விண்ணையும் வென்று வெளியையும் வென்று வேண்டுவ படைக்கும் ஆற்றலும் பெற்றுள்ளது. நமது சமுதாயம் பரிணாம வளர்ச்சியில் தன் போக்கில் வளர்வதன்று. அது நம்மால் வடிவமைக்கத்தக்கது. வருகின்ற சமுதாயத்தின் வடிவமைப்பிற்கு ஆசைகளும் குறிக்கோளுமாகும். இக்குறிக்கோளுடன் இவரது படைப்புகள் ஆறு கவிதைத் தொகுதிகளாக 1970 – 1988ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வெளிவந்தன.

இந்த ஆறு தொகுதிகளின் கவிதைகளையும் புதியதாக எழுதிய சில கவிதைகளையும் சேர்த்து ஜூலை–2002இல் "குலோத்துங்கன் கவிதைகள்" என்ற பெயரில் ஒரு பெரும் தொகுதியாக வெளியிட்டார். இவர் தனது கவிதைகள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து "Earth is Paradise is Paradise Enough" என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய "வாழும் வள்ளுவர்" என்ற நூல் சாகித்ய அகாதமி பரிசினைப் பெற்றது. அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு "The Immortal Kural" என்ற தலைப்பில் சாகித்ய அகாடமியால் வெளியிடப்பட்டுள்ளது.

வா.செ.குழந்தைசாமி அவர்கள் படைத்துள்ள படைப்புகள்

**I.** தமிழ்

அ. கவிதை

1. வளர்க தமிழ்
2. வாயில் திறக்கட்டும்
3. விண்சமைப்போர் வருக
4. கதவுகள் காப்பதில்லை
5. விதியே விதியே தமிழச்சாதியே ....?
6. அணையாதீபம்

இவை ஆறினையும் ஒரே தொகுதியாக, 2002 சூலையில், "குலோத்துங்கன் கவிதைகள்" என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

ஆ. உரைநடை

1. பாரதியின் அறிவியல் பார்வை (1983)
2. அறிவியல் தமிழ் (1985)
3. இது கல்வியுகம் (2001)
4. வாழும் வள்ளுவம் (1987)
5. தாய்மொழி பெறாததைச் சமுதாயம் பெறாது (1996)
6. மதிவளம் நமது செல்வம் (1998)
7. சமுதாயச் சிந்தனைகள் (1999)
8. செவ்வியல் மொழி முதல் சேதுசமுத்திரம் வரை (2003)

II. ஆங்கிலம்

1. கவிதை

Earth is Paradise Enough

2. உரைநடை

The Immortal Kural

இன்றைய தேவைக்கேற்பத் தமிழில் பலதுறை இலக்கியங்களைக் குறிப்பாக அறிவியல் தொழில் நுட்ப இலக்கியங்களை உருவாக்குதலும், தமிழ்மொழிக்குப் புதுமை ஆக்கம் (modernization) தேடுதலும், தமிழ் மொழியை எளிதாகக் கற்கத் துணைசெய்தலும் ஆகியவற்றில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். கலைச் சொல்லாக்கம் பற்றியும், புதிய சொற்களை உருவாக்குவதற்கான உத்திகள் பற்றியும் பல கருத்துக்களை நூல் வடிவிலும் கட்டுரை வடிவிலும் எழுதியுள்ளார். இலத்தீன், கிரேக்கம், வடமொழி போன்ற செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழும் இடம்பெறுவதற்கு இடையறாது உழைத்தவர். தமிழ் எழுத்துச்சீரமைப்பு அவருடைய முக்கியமான குறிக்கோளாகும். கடந்த 25 ஆண்டுகளாக வரிவடிவச் சீரமைப்புப் பற்றி ஒலியெழுத்துக்களைக் குறிப்பிட்ட 39 குறியீடுகளுக்கு மேல் தேவையில்லை

நின்னடி வளர்ந்தால் நீள் நிலம் வளரும்
உன்னடி தளர்ந்தால் உலகம் தேங்கும்

என்று கூறி,

மாறுவதும் எங்களினம் நிமிடந் தோறும்
வளர்வதும் எங்களினம் படிஒவ் வொன்றாய்
ஏறுவதும் எங்களினம் எம்மைப் பாட
எவருள்ளார்? காவியம் யாம் கவியும்யாம்

என்கிறார்.

# பொருளடக்கம்

## நூலைப்பற்றிய ஆசிரியர் உரை

குலோத்துங்கன் (வா.செ.குழந்தைசாமி) அவர்களின் கவிதைத் திரட்டு சமூக இலக்கிய ஆய்வுக்குத் தகுதியானது. பிறந்து வளர்ந்து, பெற்று வளர்த்து, வாழ்ந்து மறைபவன் தனிமனிதன். ஒரு தனிமனிதனின் வாழ்வு சக்கரம் போல் தோன்றும். ஆனால் மானுட வாழ்வு என்பது இறுதியில்லாதது. அது முடிவில்லாத முன்னேற்றப்பயணம். மனித சமுதாயம் ஆண் - பெண் என்ற இருபாலரைக் கொண்டது. இவர்கள் உறுப்புகளில் மட்டும் வேறுபட்டவர்களல்லர். இவர்கள் மானுடம் என்னும் நாணயத்தின் இரண்டு வெவ்வேறு பக்கங்கள், இணையானவர்கள், சமமானவர்கள். ஆனால் ஒரே பதிப்பு அல்லர் என்ற கொள்கையாளர். அதனால் தமிழர்கள் சமூக வரலாற்றிலும் அவர்தம் இலக்கிய வரலாற்றிலும் இக்கவிதைத் திரட்டு சமூக வரலாற்று உண்மைகளுக்கும் நெறிகளுக்கும் ஒரு சாட்சியமாகவும் அவற்றின் பேராகவும் அமைகிறது.

கவிதையின் பொருள் கூறுகள்

தமிழ் இலக்கியத்துறையில் தொழில்முறை நிபுணத்துவம் உடையவர் மிகச் சிலர். குலோத்துங்கனைப் போல் பெயரும் புகழும் உள்ள வேறெந்த அறிவியலாரும் தமிழிலக்கியத் துறையில் தொழிற் படவில்லை. சமூக நிலைத் தளத்திலும் சரி, வர்க்க அடிப்படையிலும் சரி இவர் சராசரி தமிழ் எழுத்தாளர்களிடமிருந்து வேறுபட்டவர். காரணம். ஏழ்மையில் பிறந்து இருண்மையில் வளர்ந்து, வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்தவர் வறுமையை அன்றாட வாழ்வில் அனுபவித்தவர். அதனால் இவரிடத்து ஆழ்ந்த சமுதாய உணர்வும் சமுதாய நீதி பற்றிய அக்கறையும் ஏற்பட்டுள்ளன. குலோத்துங்கன் நினைவுகளில் பாரதி, பாரதிதாசன், பெரியார் போன்ற சமூகப் பார்வையாளர்கள் இடம்பெற்ற காரணத்தால் தமிழ்ப்புலமை வட்டத்துக்கு வெளியே தமிழனின் முக்கியத்துவத்தை வற்புறுத்திய - அறிவுறுத்திய அறிவியல் புலமையாளராக அமைகின்றார். தமிழார்வம் என்பது இவருக்குக் கைவிட்டுப்போன ஒரு பொற்காலத்தின் மீட்டெடுப்பு அல்ல. அது உலகு தழுவிய தமிழ் முனைப்புக்கான திட்டமிட்ட ஒரு செயற்பாடாகும். இதனை,

*சமுதாயம் என்ற அமைப்பின் அடிப்படை மொழி சமுதாயச் சக்கரத்தின் அச்சு. ஓர் இனத்தை நாட்டு எல்லைகளோ சமயமோ அடையாளம் காட்டுவதில்லை. அடையாளம் காட்டுவது மொழிதான். ஓர் இனம் தனது*

*மொழியை இழந்தால் தனது அடையாளத்தை இழந்துவிடும*

என்கிறார்.

குலோத்துங்கன், உருவகப்படுத்தி நிற்கும் இந்தத் தமிழ்நிலை மேலெழுப்புகையின் மற்றொரு முனைப்பு அறிவியல் பற்றியதாகும். இது பகுத்தறிவு நோக்கின் தவிர்க்கமுடியாத தாக்கம். தமிழகத்தின் வளர்ச்சிக்கு அறிவியலைப் பயன்படுத்துவது, தமிழை ஓர் அறிவியல் மொழி ஆக்குவது, தமிழன் வளர்ச்சியை அறிவியல் பாா஀வயில் சொல்வது இவரது நோக்கமாகும்.

தமிழர்கள் ஒரு மொழியினர், பலநாட்டினர், எல்லாநாட்டிலும் சிறுபான்மையினர். கல் தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய தமிழ்க் குடிக்கு 'மூத்த குடிமக்கள்' என்ற பெருமை முன்பே உண்டு. ஐம்பதுக்கும் மேற்பட்ட நாடுகளில் பரவி வாழும் தமிழர்கட்கு 'உலகக் குடிமக்கள்' என்ற பெருமை இன்று உண்டு. இந்தத் தகுதி தானாக என்றென்றும் தொடரும் ஒன்றன்று; தமிழர்கள் தக்கவைத்துக்கொள்ள வேண்டிய ஒன்று. உலகம் ஒரு குவலயக் கிராமமாக (Global Village) மாறிவரும் பின்னணியில் தமிழர்கள் ஒரு குவலயக் குடும்பமாக (Global family) உருப்பெற வேண்டும். இது நிறைவேற உலகனைத்திலும் பரவி வாழும் தமிழர்கள் பல நாடுகளில் குடிமக்கள். ஆனால் ஒரு குடும்பத்தின் உறுப்பினர்கள் (Citizens of many countries but members of one family) என்ற சூழ்நிலையை நாம் உருவாக்க வேண்டும். இந்த ஆசையின் தாக்கம் இவரது கவிதைகளில் ஊடுருவி நிற்கின்றது.

படைப்பிலக்கியப்பணி

தமிழ் இலக்கியப் பாரம்பரியத்துடன் படைப்பிலக்கியத்தின் பணிக்கடன்களை நோக்கும் பொழுது சமூக விமர்சிப்புகளாக (Critiques) அமையும் தன்மை பல்லவர் காலத்துக்கு முன்னர்ப் பேணப் பட்டுள்ளது. புறத்திணை மரபினுள் ஒன்றான 'செவியறிவு'- மன்னன் செவியில் நன்கு விழும்படியாகப் பாணனோ புலவனோ அறிவுறுத்திக் கூறல் ஒரு சமூகப் பணியாக இருந்தது. பல்லவர் காலத்துக்குப் பின்னர் சோழர் காலம்வரை சமூக அரசியல் விமர்சிப்பு முதன்மை பெறவில்லை.

ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராகக் கிளம்பிய அரசியல் எதிர்ப்பின் பொழுது அந்த நிலை மாறியது. தமிழில் பாரதி இந்நெறியைத் தொடங்கி, பலமுள்ள ஒன்றாக நிலைநிறுத்திச் சென்றார். "நமக்குத் தொழில் கவிதை; நாட்டிற்கு உழைத்தல்; இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்ற வரிகள் சமூக நோக்குள்ள படைப்பாளிகளுக்கான

கொள்கை அறிக்கையாக அமைகின்றன. தெரிவறிவு நிலையில் அனைந்திந்தியப் பாரம்பரியத்தை உள்வாங்கியவராகவும். உணர்வுரிமை நிலையில் தமிழ் - தமிழரின் அவலங்களை இனங்கண்டு கொண்டவராகவும் வெளிக்கிளம்பும் குலோத்துங்கன், பாரதியின் தேசிய தரிசனத்துடன் பாரதிதாசனின் பாட்டையில் மேலே நடைபோடத் தொடங்குகிறார். நவீன தமிழ் இலக்கியத்தில் அரசியல், சமூக விமரிசனத்தில் இறங்கும் கவிஞர்கள் தமது கவிதைகளில், இந்த அற எடுத்துரைப்பினைப் போற்றுவது எந்த வகையிலும் இலக்கியப் பாரம்பரியத்துக்கு ஊறு செய்வதாகக் கருதப்படவில்லை. அந்தக் கவித்துவ நிலைப்பாடே குலோத்துங்கனின் பிரதான கவிதைகளில் பாலில் நெய்யாகப் போற்றிக் கிடக்கிறது.

கவிதைப் பொருள் இயல்புகள்

வா.செ.குழந்தைசாமியைப் பலரும் அறிந்திருக்கும் பொறியியல் வல்லுநர், உயர்கல்வித் திட்டமிடலின் தளமாக, தமிழனின் உள்ளத்து உணர்வுகளையும், தமிழினத்தைப் பற்றியும் கொண்டிருந்த எண்ணங்களை எடுத்துக் கூறுவதற்குக் குலோத்துங்கன் நாவாகிறார். இம்முறையில் குலோத்துங்கன் கவிதைகளில் முதற்பொருளாக அமைவது தமிழ்ச் சமூகத்தின் சமனற்ற தன்மை பற்றிய ஆதங்கம். தமிழகத்தின் சமூக, அரசியல் மட்டங்களில் கோலோச்சுகின்ற, தமிழனை மனிதனாக வைத்திருப்பதற்கு எதிராகத் தொழிற்படுகின்ற சமூக அரசியல் குறைபாடுகள், அவற்றினுள் 1. சாதிப்பிளவுகள், 2. ஏழ்மை ஆகிய இரண்டை முக்கியப்படுத்தலாம். சாதி வேறுபாட்டுக்குக் காரணமாகவும், இவற்றை வளர்ப்பனவாகவும் அமையும் அரசியலையும் அரசியல் வாதிகளையும் சாடுகின்றார். இந்த இழிவுகளைப் போக்குவது இவரது இலட்சியமாகிறது.

இன்றைய உலகில் வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் இருக்கும் இடத்தில் நிலைத்து நிற்பதற்கே மக்களாயினும் நாடுகளாயினும் தங்கள் வலிமையை ஒன்று திரட்ட வேண்டிய தேவை உருவாகியிருக்கிறது. தங்களுக்குள் இதுநாள்வரை போட்டி போட்டுக் கொண்டிருந்த சர்வதேச தொழில்நிறுவனங்கள் ஒன்று சேருகின்றன. ஐரோப்பிய நாடுகள் பொருளாதாரத் துறையில் சில ஏற்கப்பட்ட விதிமுறைகளுடன் இணைந்து செயல்படுகின்றன. ஆனால் தமிழ்நாடு, பல அடிப்படைகளில் பிரிந்து பொலிவிழந்து நிற்கிறது. சாதித்தலைவர்கள் என்னும் நிலை உருவாகியது. இதனை மாற்றும் வழியைக் காண்கிறார். ஒரு மண்ணின்வளம் அதன் மக்கள் வளத்தைப் பொருத்து இருக்கிறது. ஒரு நாட்டின்வளம். அது புகழ் மிக்க மக்களை உருவாக்குவதைப் பொறுத்தே அமைகிறது. பொதுவாக ஒரு சமுதாயம் திறமையுள்ளவர்களை உருவாக்க வேண்டும். அவ்வாறு திறமையுள்ளவர்களை ஆற்றுப்படுத்த அவர்களது முயற்சியை,

ஆற்றலை ஒருமுகப்படுத்த நல்ல தலைமை தேவை. அது நிகழ இளைய தலைமுறையை ஊக்குவிக்க வேண்டும் என்கிறார்.

குலோத்துங்கனின் மானுடம் இந்திய (திராவிட) மரபினுள் வேர்விட்டு நிற்பது பெண்மை. பெண்ணியம் (பெண் நிலைவாதம்) பற்றிய கருத்துக்களில் நன்கு தெரிகிறது. பெண் விடுதலையின் அவசியத்தை உணர்கின்ற அவர் அதற்கான மாதிரியாக (Model) மேலை நாட்டுப் பெண் விடுதலைச் சின்ன நடைமுறைகளை மேற்கொள்வதைக் கண்டிக்கிறார். மதச்சார்பற்ற புலமை வளர்த்தெடுப்பு காரணமாக வாழும் உலகத்திலேயே இலட்சியங்களை எய்திடல் வேண்டும். அந்த மாற்றங்களை நிலைநிறுத்த வேண்டும் என்ற அவா அவரிடத்துக் காணப்படுகிறது.

வையத்தைத் துன்பங்களற்ற பூமியாக மாற்றுவதென்பது, ஒரு மெய்யியல் இலட்சியமாக இருந்து வந்துள்ளது. உண்மையில் அது ஓர் அரசியல் இலக்கே. தான் வாழும் சூழலில் அரசியல் வீழ்ந்து போயிருந்த அதலபாதாளங்களைச் சாடும் குலோத்துங்கன் அதை மாற்றுவதற்கு அந்த மாற்றத்தின் மீது அபரிமிதமான நம்பிக்கை வைக்கும் பித்துநிலையாளராக அமைகிறார்.

குலோத்துங்கன் கவிதை நிலையிலும் சரி, கவித்துவ ஆளுமை நிலையிலும் சரி பொது நீரோட்டத்துக்குள் வரமுடியாதவர். இவரது கவிதைத் தளம் வேறு. குழந்தைகளுக்கான தேவை என்று இவர் கொள்ளும் பொருளும் வேறு. இவரது எழுத்துக்கள் சமூக, சமனற்ற நிலைகளைப் பாடிய பாரதிதாசன் பரம்பரைக்குக் கூட இவரது கவிதை அப்பாற்பட்டது; வந்த பாதையைவிடச் செல்ல வேண்டிய இடம் பற்றி அதிக சிரத்தை கொண்டது. சாதி சண்டைகள் பற்றிப் பேசுவார். ஆனால் சாதிப்பெயர்களைச் சந்திக்கு இழுக்கமாட்டார். நவீன காலத் தமிழிலக்கிய உலகம் இந்தக் கவித்துவக் குரலைக் கேட்கத் தவறக்கூடாது. இது தமிழின் எதிர்கால உயர்ச்சிக்கான குரலாகும். அந்த வகையில் குலோத்துங்கன் எண்ணிக்கையில் தனிமரமாக ஆனால் சிந்தனையில் ஒரு தோப்பாக நிற்கிறார்.

# அறிமுகம்

கவிதை வாழ்வில் விளைவது; உணர்வில் முகிழ்வது; காலந்தோறும் புதுப்புதுக் கோலம் புனைந்து அழகில் நிலைப்பது. எனவேதான், எந்த இலக்கியமாக இருந்தாலும் அந்தக் காலச் சமுதாயத்தைத் தழுவியதாக அவ்விலக்கியம் இருக்கவேண்டும் என்பது உண்மையாகும். கவிதைகள், சமுதாயத்தின் பல்வேறு கூறுகளையும் எடுத்தியம்புகின்றன. சமுதாயச் சிக்கல்களைக் கூறுவதுடன், தீர்வுகளைக் காணும் வகையிலும் அமைந்துள்ளன.

சங்ககாலந்தொட்டு இன்றுவரை கவிதைகள் வளர்ச்சியுற்று வருகின்றன. 1946இல் வா.செ. குழந்தைசாமி கவிதை எழுதத் தொடங்கினார். அப்பொழுது அவருக்கு வயது பதினேழு. அன்றுமுதல் இன்றுவரை, 'குலோத்துங்கன்' என்ற புனைபெயரில் கவிதைகளை எழுதிக் கொண்டிருக்கிறார். இவருடைய கவிதைகளில் மிகுதியான சமுதாயக் கூறுகள் பொதிந்துள்ளன. இவருடைய கவிதைகளை எல்லைகளாகக் கொண்டு, 'குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம்' என்ற பெயரில் இச்சொற்பொழிவு நூல் அமைகிறது.

வெவ்வேறு காலப்பகுதிகளில், 'குலோத்துங்கன்' எழுதிய கவிதைகள்:

1. குலோத்துங்கன் கவிதைகள்
2. வளர்க தமிழ்
3. வாயில் திறக்கட்டும்
4. விண்சமைப்போர் வருக
5. கதவுகள் காப்பதில்லை
6. விதியே விதியே தமிழ்ச் சாதியே.....?
7. அணையா தீபம்

என ஏழு நூல்களாக வெளியிடப்பட்டுள்ளன. 'குலோத்துங்கன் கவிதைகள்' என்ற நூலில் இடம்பெற்றிருந்த கவிதைகள், பின்னர் வளர்க தமிழ், வாயில் திறக்கட்டும் என்ற தொகுப்பு நூல்களில் சேர்க்கப் பட்டன. இத்தொகுப்பு நூல்களையும், திங்கள் இதழ்களில் வெளிவந்து நூல் வடிவம் பெறாத சில கவிதைகளையும் ஒன்றுசேர்த்து, சூலை 2002இல், குலோத்துங்கன் கவிதைகள் என்ற பெயரில் முழுமைபெற்ற கவிதைத் தொகுப்பு வெளியிடப்பட்டது.

குலோத்துங்கன் கவிதைகள், அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியைப் படம்பிடித்துக் காட்டுவதுடன், வருங்காலத்தில் அறிவியலே மனித வாழ்க்கையில் பெரும்பங்கு வகிக்கும் என்பதையும், வாழ்க்கையின் ஓர் அங்கமாக அறிவியலும் தொழில்நுட்பமும் அமைந்துவிட்டன என்பதையும் விவரித்துச் செல்வதைக் காணமுடிகிறது. அறிவியல் தொழில்நுட்பக் கல்வி, பெண்ணியம், தமிழுணர்வுச் சிந்தனைகள், சாதியக் கோட்பாடுகள், சமுதாய நோக்கு என்ற பிரிவுகளில் இந்நூல் அமைகிறது.

# 1. அறிவியல் தொழில்நுட்பக் கல்வி

அறிவியல் (Science), தொழில்நுட்பம் (Technology), அறிவியல் தொழில்நுட்பம் (Science and Technology) போன்ற சொற்கள் ஆங்கிலத்தில் பரவலாக வழக்கில் உள்ளன. ஒரு காலத்தில், நாம் கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல் போன்ற துறைகட்கு மட்டும் பயன்படுத்தி வந்த 'அறிவியல்' (Science) என்ற சொல், இன்று சமூக அறிவியல் (Social Science), அரசியல் அறிவியல் (Political Science), மனையியல் (Home Science) என்று பலதுறைகட்கும் பயன்படுத்தப்படுகிறது.

அதே போன்று, பொறியியலுக்கும் அதனைச் சார்ந்த தொழில் நுட்பங்களுக்கும் பயன்படுத்தப்பட்டு வந்த 'தொழில்நுட்பம்' (Technology) என்ற சொல்லிற்கு,

> *The study or use of the mechanical, arts and applied sciences*[1]

என்று அகராதி பொருள் கூறுகிறது. இதனையொட்டி இன்றைய அளவில், கண் (Opthalmology), இதயம் (Cordiology), உணவு வகைகள் (Catering Technology), ஆடை வடிவமைப்பு (Fashion Technology), நெசவு (Textile Technology), தகவல் தொழில்நுட்பம் (Information Technology), மண்பொருள் தொழில்நுட்பம் (Ceramic Technology), தோல் தொழில்நுட்பம் (Leather Technology), அச்சுத்தொழில்நுட்பம் (Printing Technology) போன்ற பல்துறைசார்ந்த நுட்பங்களை நாம் பெற்றுள்ளோம். அறிவுத்துறைகளைப் பயன்படுத்திச் செயலாற்றும் தொழில்முறைகள் அனைத்திற்கும் 'Technology' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. வேளாண்மை தொழில்நுட்பம் (Agricultural Technology), உயிரிதொழில் நுட்பம் (Bio - Technology), மருத்துவம் போன்ற துறைகளிலும் இச்சொல் பரவலாகப் பழக்கத்தில் உள்ளது. 'அறிவியல்' என்ற சொல் பரந்த அளவில் - விரிந்தபொருளில் ஆளப்பட்டதைப் போலவே 'தொழில்நுட்பம்' என்ற சொல்லும் இன்று விரிந்த அளவில் செறிவான பொருளை வெளிப்படுத்துவதாய் அமைகிறது. இது,

1. இலக்கியங்களில் அறிவியல்,
2. அறிவியல் பார்வையும் அணுகுமுறையும்,
3. அறிவியல் கல்வியின் தேவைகள்,
4. அறிவியல் கல்வியின் வளர்ச்சி நிலைகள்,
5. அறிவியல் தொழில்நுட்பப் பயன்பாடு,
6. கல்வியறிவே பெருஞ்செல்வம்,

7. மதிவலிமை,
8. வாழ்வியலில் அறிவியல்,
9. மதிவளம் மனித செல்வம்,
10. வறுமையும் வளமையும்,
11. வளர்ச்சிப் பணிகளில் ஆசிரியர்களும் அறிவியலும்

என்ற பிரிவுகளில் விளக்கப்படுகிறது.

**1. இலக்கியங்களில் அறிவியல்**

அறிவியல், நம் நாட்டில் பண்டுதொட்டுப் பயன்பாட்டிலிருந்ததைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் சான்று பகரும். பழந்தமிழர் வியத்தகு வானநூலறிவுடையராகக் காணப்பட்டனர். வானவெளியில் கதிரவனின் இயக்கம் ஈர்ப்பாற்றலும் கதிர்மண்டிலமும் காற்று இயங்கும் திசையும் ஒன்றுமில்லாதிருக்கின்ற ஆகாயமும் பற்றி முதுகண்ணன் சாத்தனார் பாடிய,

*செஞ்ஞாயிற்றுச் செலவும்*
*அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்*
*பரிப்புச் சூழ்ந்த மண்புலமும்*
*வளிதிரிதரு திசையும்*
*வறிது நிலைஇய காயமும் என்றிவை*
*சென்று அளந்து அறிந்தோர் போல என்றும்*
*இனைத்து என்போரும் உயிரே*[2]

என்ற ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு கூறப்பட்ட அறிவியலுண்மையினை உலகறியச் செய்கிறது இப்பாடல்,

*எண்ணிய நூலோர் இயல்பினின் வழாஅது*
*மண்ணகம் ஒருவழி வகுத்தனர் கொண்டு*
*புண்ணிய நெடுவரை போகிய நெடுங்கழைக்*
*கண்ணிடை ஒருசாண் வளர்ந்தது கொண்டு*
*நூல்நெறி மரபின் அரங்கம் அளக்கும்*
*கோல்அள இருபத்து நால் விரல்ஆக*
*எழுகோல் அகலத் எண்கோல் நீள*
*ஒருகோல் உயர்ந்த உறுப்பின தாகி*
*உத்தரப் பலகையோடு அரங்கின் பலகை*
*வைத்த இடைவெளி நாற்கோல் ஆக*
*ஏற்ற வாயில் இரண்டுடன் பொலியத்*
*தோற்றிய அரங்கில் ...*[3]

என்ற வரிகளில் கட்டடக்கலையில் நிலம் தேர்ந்தெடுப்பும், அளவீடுகளும் தெளிவாகப் பதிவாகி இருக்கின்றன. மேலும் அரங்கு கட்ட உகந்த

மண்ணகம் என்பது எலும்பு, உமி, கூர்ங்கல், களிமண், உவர்மண், ஈளைமண், பொல்லாச்சாம்பல், துகள் போன்றவை அற்றதாகவும், தேர் ஓடும் தெருவுக்கு எதிர்முகமாகவும் நகர்நடுவே அமைய வேண்டும் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. இது கட்டடக் கலையின் தொழில்நுட்பத்தைப் பகர்கிறது.

கோள்களின் இயக்கத்தினால் உலகில் நன்மை தீமைகள் நிகழ்வதாக ஒரு நம்பிக்கை அந்நாளில் நிலவிற்று. இன்றும்கூட அந்த நம்பிக்கை பரவலாக உண்டு. மணிமேகலை மீது மையல் கொண்டு ஏங்கிய உதயகுமாரனின் முன் மணிமேகலா தெய்வம் வந்து 'மன்னவன் செங்கோல் நிலைபிறழ்ந்தால் வானில் கோள்களும் நிலைபிறளும். அவ்விதம் கோள்கள் நிலைபிறண்டால் மழைவளம் குன்றும். மழை இல்லாது போனால் உயிர்கள் இறந்து போகும்' என்று கூறுகிறது. இதை,

*கோன்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்;*
*கோள்நிலை திரிந்திடின் மாரிஅறம் கூரும்;*
*மாரி அறங்கூரின் மண்ணுயிர் இல்லை*[4]

என்ற மணிமேகலை வரிகள் உணர்த்தும். இது நியூட்டனின் சார்பியல் தத்துவத்தின்படி (Theory of relativity) அமைகிறது. மேலும் இக்காப்பியம் வைதீகவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி, பௌத்தவாதி எனச் சமயக்கொள்கை பரப்புவோர் பலரைக் குறிக்கிறது. அவருள், ஆசீவகவாதியின் கொள்கைப்படி - வண்மையுடைய நிலஅணு, நிலம் சேர்ந்து ஆழும் நீர்அணு, குறுக்கிட்டு அசைதலை உண்டாக்கும் காற்றுஅணு, எரிந்து மேல்நோக்கி எழும் நெருப்புஅணு ஆகிய நான்கும் இணைந்து ஒருவித ஆதியும் அந்தமும் அற்று விளங்கும் 'பரமாணுக்களாக' விளங்கும் என்பதை,

*….. யாவதும் சிதைவுத செய்யா;*
*புதிதாய்ப் பிறந்த ஒன்றில் ஒன்றில்புகா;*
*முதுநீ ரணுநில அணுவாய்த் திரியா;*
*ஒன்றி ரண்டாகிப் பிளப்பதும் செய்யா;*
*உலாவும், தாழும் உயர்வதும் செய்யும்….*[5]

என்று இந்த நூற்றாண்டின் வியத்தகு சாதனையான அணு குறித்த சிந்தனையை மணிமேகலை கொண்டிலங்குவதைக் காணமுடிகிறது. மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர் தனது நெடுநல்வாடையில்,

*விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்*
*இருகோள் குறிநிலை வழுக்காது குடக்கேர்*
*பொருதிறஞ் சாரா அரைநாள் அமயத்து,*
*நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டு*

*தேளங் கொண்டு தெய்வம் நோக்கிப்*
*பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து*[7]

என்ற வரிகளில் இரண்டு குச்சிகள் நட்டுச் சூரியன் உதயம்முதல் மறைகின்றவரை விழும்நிழல் ஒரே நேர்க்கோட்டில் அமையும்படி சூரியவீதி (Ecliptic) சார்ந்து கிழக்கு மேற்காகக் குறித்து மன்னவருக்கு மனைவகுக்கவேண்டும் என்று அன்றே அறிவியல்சார்ந்த கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். காலத்தைக் கணித்துத் தங்களது வாழ்க்கைக்குப் பயன்படுத்தியதை,

*பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்*[7]

என்றும்,

*நாழிகை இசைப்ப*[8]

என்றும் பண்டைய நாளில் காலக்கணிதர் இருந்தமையை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

நாம் இன்று பயன்படுத்தும் அறிவியல் தொழில்நுட்பம் நமது மண்ணுக்குப் புதியது, மேலைநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. அலோபதி (Allopathic System) எனும் ஆங்கில மருத்துவமுறையும் புதியது. அதில் நமக்கு எந்தப் பாரம்பரியமும் அனுபவத் தொடர்பும் இல்லை. இன்று நாம் பயன்படுத்தும் அறிவியல் தொழில்நுட்பம், அலோபதி மருத்துவமுறை போன்று, நமக்கு முழுவதும் புதியதாகும். என்றாலும் நம்முடைய முன்னோர்கள், மருத்துவத்துறையில் நல்ல முன்னேற்றம் கண்டவர்கள். நமது நாட்டில் ஆயுர்வேதம் நீண்டப் பாரம்பரியமுடையது.

*ஆயுளைப் பற்றியும், நீண்ட பிணியற்ற ஆயுளைப் பற்றியும் விளக்குவதால் இதற்கு ஆயுர்வேதமெனப் பெயர் வந்தது.''*[9]

பிணியைப் போக்குதல், உடலுறுதி உள்ளவர்களின் ஆரோக்கியத்தைக் காத்தல் ஆகியவை ஆயுர்வேதத்தின் முக்கியக் குறிக்கோள்களாகும்.

*மருத்துவ அறிவியல் வளர்ந்துள்ள இன்று கையாளப்படும் உடற்கூறு விளக்கம்; காது-மூக்கு அறுவை சிகிச்சை; மகப்பேறு அறுவை சிகிச்சை, சிறுநீரகக் குழாயிலிருந்து கல்லை அகற்றுதல்; கண்புரை நோயை அறுவையால் நீக்குதல்; மூலநோயை அறுவையால் அகற்றுதல் போன்றவையும் அவற்றுக்கான கருவிகளும் அன்றே சரகசம்கிதையில் கூறப்பட்டு உள்ளன.*[10]

அதேபோன்று சித்த மருத்துவமும் தமிழகத்தில் வளர்ந்திருந்தது.

*சித்தமருத்துவம் என்றைக்கு மனிதஇனம் உலகில் தோன்றியதோ அன்றைக்கே தோன்றிவிட்டது. இம் மருத்துவம் எல்லா விதமான நோயையும் தீர்க்கவல்லது. இம்மருத்துவம் இயற்கையானது, எளிமையானது*[11]

என்று சித்த மருத்துவச் சிறப்புப் பற்றிச் சித்த மருத்துவர் சுந்தரராசன் குறிப்பிடுகிறார். உலகச் செயல்பாடுகளான ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் இன்றைய 'அறிவியல்' ஒன்றே செய்து வருகிறது என்பதை,

*ஆக்குவை, அழிப்பாய், காப்பாய்;*
*அயன், அரி சிவனார் தம்முள்*
*தேக்கிய செயல்கள் மூன்றும்*
*சர்த்து நீ எழுந்தாய்* (ப. 219)

என்று குலோத்துங்கன் விளக்குகிறார்.

அறிவியலும் தொழில்நுட்பமும் கோலோச்சும் காலமிது. இன்று, இவற்றின்தாக்கம் இன்றைய வாழ்விற்கு ஒரு புதிய பரிமாணத்தையும், பொலிவையும், சக்தியையும் தருகிறது.

*இன்றைய அறிவியல் தொழில்நுட்பம் பதினாறாம் நூற்றாண்டில் இருந்து தொடங்கியது. அறிவியல் முறைக்கு (Scientific method) வித்திட்டவர் கலிலியோ. அவர் காலத்திலிருந்து தொடங்கி இன்று கற்பனைக்கும் எட்டாத வளர்ச்சியைக் கண்டிருக்கிறது. முன்னேறிய நாடுகளில், வாழ்க்கையின் ஒரு அங்கமாகவே அறிவியல் உருவாகியிருக்கிறது. அன்றாட வாழ்வினின்றும் பிரித்துப்பார்க்க இயலாத அளவிற்கு ஒன்றிநிற்கிறது.*[12]

தமிழில் அறிவியல் தொழில்நுட்பத்தின் ஆதிக்கம் பற்றிய கருத்துக்கள், கதைகளிலும் கட்டுரைகளிலும் இடம்பெற்ற அளவிற்குத் தமிழ்க் கவிதைகளிலும் இடம்பெற்றிருக்கின்றன. கவிஞர் குலோத்துங்கன் கவிதைகளிலும், அறிவியல் தொழில்நுட்பக்கூறுகள், குறிப்பிடத்தக்க அளவில் உள்ளன. இவை, 'அறிவியல்', 'கல்வி', 'மதிவளம்' என்ற பிரிவுகளில் ஆராயப்படுகின்றன.

## 2. அறிவியல் பார்வையும் அணுகுமுறையும்

மனிதன் உணர்வுகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் பற்றுகள் பலவற்றுக்கும் அடிமைப்படுபவன். இதில் அளவும் தரமும் மாறுபடுவதைத் தவிர, அடிப்படையில் இவை பெரும்பாலும் அனைவருக்கும் பொது வானவை. சமயப்பற்று, தேசப்பற்று, மொழிப்பற்று ஆகிய அனைத்தும் உயர்ந்த பண்புகள். எனினும், இவை, பற்றின் காரணத்தால், உண்மையைக்

காணும் பணியில், சிறிய அளவிலோ பெரிய அளவிலோ சமுதாயத்திற்குத் தடைகளாக அமையும். குலோத்துங்கன் இதனை,

*தான்கண்ட பாதைதான்*
*சரியென்ற மூடரால் சமுதாயம் நைந்ததம்மா!* (ப. 183)

என்று வேதனைப்படுகிறார். மேலும்,

*பாசமோர் உலகம்; அங்கு*
*பகுத்தறி(வு) ஆள்வ தில்லை;*
*நேசமோர் உறவு; நட்பு*
*நிறை, குறை கணிப்ப தில்லை* (ப. 265)

என்றும் தெளிவுபடுத்துகிறார். எனவே, ஆய்வில் உண்மையைத் தேடும் பணியில் ஈடுபடும் பொழுது, திரையென நிற்கும் தம் உணர்வுகளை ஒதுக்கிவைத்து, ஊடுருவி நோக்கும் திறமே அறிவியல் பார்வையாகும் என்பது புலப்படுகிறது. ஆதியில் மனிதன், தன்கருத்தைப் பிறர்க்கு வெளியிட விரும்பிச் சைகைகள் (Guester) செய்தான். பின்னர், ஒலிக்குறிப்பைக் கையாண்டான். ஒலிக்குறிப்பு மேலும் வளர்ச்சியடைந்து ஒலிவடிவமாக உருப்பெற்றது. பல ஒலிவடிவங்கள் ஒன்றிணைந்து கருத்துத் தொடர்ச்சியை வெளியிட மொழிவடிவமானது. மொழியின் ஒலிவடிவம், வ்ரிவடிவம் பெற்று எழுத்துமொழி உருவானது. எழுத்துமொழி கல்விக்கு வழிவகுத்து, அறிவைச் சேர்த்து வைக்கும் களஞ்சியமாகப் பயன்பட்டது. கருத்துச்சேமிப்பு வளர்ச்சி பெற்று, அறிவு வளர்ந்தது. அறிவு, அறிவியலைப்பெற்றது.

பாவேந்தர் கல்வியே அறிவுக்கு அடிப்படை என்பதை வலியுறுத்தி,

*கல்வியே அறிவாகும், அறிவே கல்வி*[13]

என்கிறார். இருபதாம் நூற்றாண்டினைத் தொடர்ந்து, இனிவரும் நூற்றாண்டுகளில், அறிவியலே மனிதவாழ்க்கையில் பெரும்பங்கு வகிக்கும். ஆகையால் இலக்கியப்படைப்பாளி, அறிவியலைப் புறக்கணிக்க இயலாது. குலோத்துங்கன், அறிவியலையும் பொறியியலையும் கற்றதுடன் அதிலேயே தன்னுடைய சிந்தனையனைத்தையும் செலுத்தி,

*மாறுவதும் எங்களினம்; நிமிடந் தோறும்*
*வளர்வதும் எங்களினம்; படிஒவ் வொன்றாய்*
*ஏறுவதும் எங்களினம்; எம்மைப் பாட*
*எவருள்ளார் ? காவியம்யாம்; கவியும் யாமே!* (ப.130)

என்று கவிதை படைக்கிறார்.

*அறிவியல்அறிவு வேறு; அறிவியல்பார்வை வேறு. அறிவியல் துறையினர் அனைவரும் அறிவியல் அணுகுமுறை கொண்டவர்களல்ல. சமயம், பக்தி ஆகிய துறைகளில் ஈடுபாடுகொண்டோர், நம்பிக்கையின் அடிப்படையில் இயங்கவேண்டி இருப்பதாலேயே, அவர்கள் அனைவரும் அறிவியல் அணுகுமுறை இல்லாதவர்களும் அல்ல. அறிவியல் பார்வை என்பது ஒன்றை நம்புவதையோ நம்பாததையோ பொறுத்தது மட்டும் இல்லை.அது, ஒரு தனிமனிதன், தனது அன்றாட வாழ்க்கையின் ஈடுபாடுகளில், செய்யும் முடிவுகளில், ஆய்ந்து பகுத்தறியும் திறன்வாய்ந்த தனது சிந்தனைக்கு எவ்வளவு இடமளிக்கிறான்; அதன் முடிவுக்கு எவ்வளவு மதிப்பளிக்கிறான் என்பதைப் பொறுத்தது ஆகும்*[14]

என்று கைலாசபதி அவர்கள், மக்கள் சமயம் சார்ந்தவர்களாக வாழ்ந்த போதிலும் அவர்களிடத்தும் அறிவியல் உணர்வு இருந்தது என்பதைப் போற்றுகிறார்.

*அறிவியல் உலகம் நம்பிக்கையின் அடிப்படையில் எதனையும் ஏற்காத மரபுடையது. எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும், எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவியல் உலகின் அடிப்படை கொள்கையாயினும், கோட்பாடாயினும், அவை முறையான வாதங்கட்கும், சோதனைகட்கும், உட்படுத்தப்படவேண்டும். அவற்றின் அடிப்படையில் ஒப்புக்கொள்ளப் படவேண்டும். இது அறிவியல் உலகின் மரபு.*[15]

என்கிறார் குலோத்துங்கன். இதனை,

*கேள்விகள் ஆயிரம்: கேட்பவன் மானிடன்*
*கேட்டவை யாவினுக்கும் - தேடி*
*வாழ்வினில் பதில்சொல மானிட ரல்லாது*
*மற்றவர் யாருமிலை* (ப. 87)

என்று குலோத்துங்கன் கவிதை குறிப்பிடுகிறது. அறிவியல் பார்வை, மனிதனுடைய முயற்சியை வளர்க்கும்; செயலைத் தூண்டும்; துணையாகவும் நிற்கும். இத்தன்மையை,

*சோதனைத் தீயினில் வெந்து நிமிர்ந்தவர்*
*தோல்வியை ஏற்பதில்லை - அட*
*சாதனைப் பாதையில் முன்னடி வைத்தவர்*
*தாகம் தணிந்ததில்லை* (ப. 74)

என்று குலோத்துங்கன் பிரகடனப்படுத்துகிறார்.

*ஒரு சமுதாயத்தின் வளர்ச்சிக்கு அணுகுமுறையே முக்கியமானது ஆகும். கடந்த முந்நூறு ஆண்டுகளில் மேலைநாட்டினர் அடைந்த உயர்வுக்கும் வளர்ச்சிக்கும் அவர்களது அணுகுமுறையே இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. வளர்ச்சிப் பாதையின் கதவுகள் அடைபடுவதும் திறப்பதும் (பல சூழ்நிலைகளில்) நமது அணுகுமுறையைப் பொறுத்தது*[16]

என்கிறார் வா.செ.குழந்தைசாமி. ஓர் இனத்தின் வளர்ச்சியும் தாழ்வும் அவ்வினத்தின் அணுகுமுறையைப் பொறுத்தே அமையும். காலத்திற்கேற்ற மாற்றங்களை - வளர்ச்சிப்போக்குகளை ஏற்று வாழும் நிலையில்தான் அவ்வினத்தின் முன்னேற்றம் அமையும். இதனை,

*மாற்றத்தை எதிர்கொள்ள மனமில் லாதவர்*
*வளர்கின்ற வழிதேடார்; அவர்தம் பாதை*
*ஏற்றத்திற்(கு) ஏணியல; சங்கம் கண்ட*
*எங்கள்தமிழ் புதுமைகளோ(டு)*
*இணைய வேண்டும்* (ப.404)

என்று கூறுவதன் மூலம் மாற்றங்களை வரவேற்கும் மனம் வேண்டும். அத்தகு மனமுடையோரின் செயல்களனைத்தும் வளர்ச்சிக்கு வழிவகுப்பதாகவும் முன்னேற்றத்திற்கு ஏணியாகவும் அமையும். ஆகவே, தமிழர்கள் முன்னேறுவதற்குப் புதுமை உணர்வுவேண்டும் என்று ஆசைப்படுகிறார் குலோத்துங்கன்.

வரலாற்றுக் காலம் முதல் மனித சமுதாயத்தின் வளர்ச்சியை ஆராய்ந்தால் முன்னேற்றப்பாதையில் எடுத்துவைக்கப்பட்ட ஒவ்வொரு அடியும், அறிவியல் அணுகுமுறை, அறிவியல் பார்வை ஆகியவற்றின் துணைகொண்டு அமைந்ததாகவே உள்ளது.

*அறிவியல் - தொழில்நுட்பம்-பயன்பாடு (Applied) இந்த மூன்றில் ஒன்று தளர்ந்தாலும் அறிவியல் வாழ்க்கைக்கு உதவாது. தத்துவார்த்தமான 'அறம்' போன்றது அறிவியல். 'பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும்' - இது வள்ளுவ அறிவியல். 'ஒவ்வொரு வினைக்கும் நேர் சமமான எதிர்வினை உண்டு' என்பது நியூட்டன் விதி. இந்த அளவில் உண்மையை விளக்க முற்படுவோம். எடுத்துக்காட்டாக - காற்றடைத்த பலூன்வாயைப் பிடிதளர்த்தினால் காற்று பீச்சும் திசைக்கு நேர் எதிர்திசையில் பலூன் சீறிப் பாயும். ஏவுகணை என்ற தொழில்நுட்பம் முளைவிடுகிறது. ஆக-அறிவியல் சிந்தனை ஒரு தொழில்நுட்பமாக இயல்*

*மாறுகிறது. தொழில்நுட்பம் 'பொருள்' சார்ந்தது. அந்த ஏவுகணைக்குள் அணுகுண்டு வைத்து எதிரி முகாம்மீது வீசினால் அது அழிவுப் பயன்பாடு. அன்றி - அதனுள் * அனைவருக்கும் உதவும் செயற்கைக்கோளினை வைத்து விண்ணில் செலுத்தினால் அது ஆக்கப்பயன்பாடு. ஆக்கமும், அழிவும் அவரவர் கையில், அன்றிக் கருவியில் இல்லை. அதனால் அறிவியல் புனிதமானது என்று வலியுறுத்துகிறோம். தொழில்நுட்பப் பயன்பாடு 'இன்பம்' தருவதாக அமைதல், அறிவியல் அறம்.*[17]

தனிமனிதனுடைய உரிமையும் உணர்வும் பற்றிய எண்ணங்கள்; சமுதாய நீதிபற்றிய தத்துவங்கள், சமவாய்ப்பு, சமத்துவம் (Equality) போன்ற சிந்தனைகள் உருவாகி வளரவும் அறிவியல் அணுகுமுறை துணையாகின்றது. இதனைக் குலோத்துங்கன் அவர்கள், தனிமனித உரிமையும் உணர்வும் குறித்த எண்ணங்களால் சிலர் செய்கின்ற சாதனைகள், மானிட சமுதாயம் முன்னேறுவதற்குரிய தூண்டுதல்களாக அமையும் என்பதை,

*பெரியன பெறஒரு*
*பித்தனும் வேண்டும்*
*தத்துவம் சொல்வேன்;*
*தனிச்சிலர் சாதனை*
*தவழும் மானிடம்*
*தாவிட விசை தரும்* (ப. 83)

என்கிறார். இன்று நம் அரசாங்கம் 'தரிசுநில மேம்பாட்டுத் திட்டம்' என்ற பெயரில், விளைச்சலுக்கு தகுதியற்றது என்று கருதப்பட்ட தமிழகத்து நிலங்களை வளம்கொழிக்கும் பூமியாக மாற்றிக்கொண்டு வருகின்றது. இதனால் விளைச்சல் பெருகி, குடிகள் மகிழ்ந்து, நாட்டுநிலை உயர்ந்து, வளம் கொழித்து, அமைதி குடிகொள்ளும் நிலை உருவாகும். இக்கருத்துக்கள் அனைத்தையும் முன்னரே நினைத்துப் பார்த்தார் கவிஞர். தமிழகத்தில் வயலும் காடும் தோட்டமும் உள்ளன. பயிர்செய்வதற்குரிய நீரில்லை என்று தமிழர்கள் சோம்பித் திரிகிறார்கள். தமிழகம் மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டுள்ளது. முயற்சி செய்தால் கடல் நீரைத் திருத்திப் பயிர்செய்வதற்குரிய நீராக மாற்ற முடியும். அவ்வகைப்பட்ட முயற்சியால் தமிழகம் முழுவதும் பயிர்த் தொழிலால் சிறப்புறும். சமுதாய வளம்பற்றிய கருத்துக்களை,

*.................. சமுதா யத்தில்*
*வயலுண்டு; காடுண்டு; தோட்டம் மற்றும்*
*வனமுண்டு; கடலுண்டு; சமனாய் நிற்கும்*
*பயனுண்டு; முறை கண்டு பதம் செய்வோமேல்*
*பார் முழுவதும் வேளாண்மை; பாலை இல்லை* (ப. 329)

என்று, அனைவரும் அனைத்தும் பெற்று அமைதியாக வாழவேண்டும் என்பதை வற்புறுத்துகிறார். வாழ்க்கையில், வளங்களைப் பெருக்கவும், வறுமையை ஒழிக்கவும் இயலாதபோது, அதனால் உருவாகும் வாட்டங்களைக் குறைத்தல், பிணிகளைத் தீர்த்தல், மனிதர்களின் சராசரி ஆயுட்காலத்தை நீட்டித்தல் போன்ற எண்ணற்ற சாதனைகளும் இவ்வறிவியல் அணுகுமுறையின் விளைவுகளால் ஏற்பட்டதாகும் என்பதைச் சமுதாயம் உணரவேண்டும்.

*மாறாத பொருளெதுவும்;*
*வளர்வதில்லை;*
*வையத்தின் விதியிதற்கு*
*மாற்ற மில்லை* (ப. 193)

என்பது குலோத்துங்கன் வாக்கு. ஆகையால், மரபுகளைக் காப்பதிலும் கழிப்பதிலும், புதியன புகுவதை ஏற்பதிலும் எதிர்ப்பதிலும் ஒரு முதிர்ச்சியான நடைமுறையைக் கையாள்வதே ஒரு சமுதாயத்தின் முதிர்ச்சியாகும். நமது பார்வையில் மாற்றங்களை உருவாக்கிக் கொள்வதற்கு, நம் பண்பாட்டில் சில புதிய கூறுகளை ஏற்றுக் கொள்ளலாம். முதிர்ந்த தெளிவோடும் முறையான வழியோடும் இம்மாற்றத்தை உருவாக்குவது அறிவியல் கல்வியாகும் என்று குலோத்துங்கன் கூறுவதை,

*கல்லாய் மரமாய்க் காடுமே டாக*
*மாற திருக்கயான் வனவிலங் கல்ல*
*மாற்றம் எனது மானிடத் தத்துவம்*
*மாறும் உலகின் மகத்துவம் அறிவேன்*[18]

என்ற கண்ணதாசனின் மாற்றம் குறித்த சிந்தனை வரிகளோடு இங்கு நாம் ஒப்பு நோக்கலாம்.

கடந்த முந்நூறு ஆண்டுகளில் மனித சமுதாயத்தில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு எல்லாம் சோதனைச் சாலைகளே கருவறையாக அமைந்தன. கருவறை அமைவதற்கு அணுகுமுறையில் ஏற்பட்ட மாற்றமே அதாவது ‘அறிவியல்முறை’யே காரணமாக அமைந்தது. சோதனைச் சாலைகளைப் பற்றி லூயிபாஸ்டர் (Louis Pasteur),

*‘சோதனைச் சாலைகள்’ என்று குறிப்பிடப்படும் அந்தப் ‘புனித இல்லங்கள்’ மீது அக்கறை காட்டுங்கள்; அவை பெருகவேண்டும்; வளம்பெற வேண்டும் எனக் கோரிக்கை எழுப்புங்கள்; அவை வருங் காலத்தின் திருத்தலங்கள்; மனித நலத்தின், மகிழ்ச்சியின் கோயில்கள்; அங்குதான் மானிடம் தன் மாண்பில் உயர்கிறது; சக்தியில் வளர்கிறது; தரத்தில் உயர்கிறது*[19]

*(Take interest, I improve you, in those sacred dwellings which one designates by the expressive term: Laboratories - Demand that they be multiplied, that they be adorned. Those are the temples of the future temples of well-being and of happiness. There it is, that humanity grows greater, stronger, better - Louis Paster)*

என்ற கூற்று மாற்றத்தின் வழியே ஏற்படும் அறிவுவளர்ச்சியின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. மாற்றமென்பது மனித சமுதாயத்தின் தத்துவமாவதுடன், மாறிக்கொண்டே இருக்கும் உலகின் மகத்துவமும் ஆகும். இது வளர்ச்சியின் வாயிற்படி என்பதை இங்கு நுணுகிப்பார்ப்பது சாலச்சிறந்ததாக அமையும்.

### 3. அறிவியல் கல்வியின் தேவைகள்

உலக உயிர்களில், கல்வி கற்கும் பேற்றினை மனிதர்கள் மட்டுமே பெற்றுள்ளனர். பிற எவ்வுயிர்க்கும் அவ்வாய்ப்பில்லை. கல்வி என்ற சொல்லை

> *கல் + வி என்று பிரிக்கலாம். 'கல்' என்றால் தோண்டுதல் ஆய்தல் என்று பொருள்படும். வெறும் எழுத்தறிவு மட்டும் கல்வியன்று. ஒரு மனிதனை முழுமை பெற்ற மனிதனாக மாற்றுவதே கல்வியாகும். இந்தக் கல்வி என்ற சொல் பழமையானது. நம் தமிழ் இலக்கியங்கள் எவ்வளவு தொன்மையானவையோ அவ்வளவு தொன்மையானது. மனித நாகரிகத் தொடக்கத்திலிருந்து, வழக்கத்திலிருந்து வரும் ஒரு சொல். எப்பொழுதுமே கல்வி எல்லாச் சமுதாயத்திலும் மரியாதைக்குரிய பொருளாக மதிக்கப்பட்டு வந்தது.*[20]

கல்வியின் இன்றியமையாமையை நீதி நூல்களும் சமய நூல்களும் காப்பியங்களும் கூறுகின்றன. ஆயினும் பழங்காலத்தில், 'அனைவருக்கும் கல்வி' என்ற தத்துவத்தை ஒருவரும் வலியுறுத்த வில்லை. அன்றைய நாளில் கல்வி, அரச குடும்பத்தினருக்கும் மேன்மக்களுக்கும் உரியதாகமட்டும் இருந்தது.

> *பண்பாடு, ஒழுக்கம், சமயம், தத்துவம், பற்றிய விசாரணை கட்கும், கவிதை, காவியம், போன்ற இலக்கிய ஈடுபாட்டிற்கும் மட்டுமே கல்வி தேவைப்பட்டது. இவை பெரும்பாலும் அரண்மனைகளில், அரசவைகளில் நடைபெறும் நிகழ்ச்சிகளாக இருந்தன. எனவே, கல்வி முந்தைய நாளில் ஓர் அரண்மனைப் பொருள்; அலங்காரப்பொருள். அரசர்களேகூட யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வில்வித்தை போன்றன கற்கவேண்டிய*

*அளவிற்கு, ஏட்டுக்கல்வி கற்க வேண்டுவது வற்புறுத்தப் பட்டதில்லை. உலகப்பேரரசர் வரிசையில் இடம் பெற்ற மன்னர் சிலருள் அக்பருக்கு உறுதியாக ஓர் இடம் உண்டு: உயர்ந்த இடம் உண்டு. ஆனால் அக்பர் ஒரு தற்குறி; எழுதப்படிக்கத் தெரியாதவர். அவர் வாழ்ந்த காலத்தில் அதாவது பதினாறாவது நூற்றாண்டில்கூடத் தற்குறித்தன்மை ஒரு பெருங்குறையாகக் கருதப்பட வில்லை. அரசரின் நிலையே அதுவெனின், சாதாரணக் குடிமகனைப்பற்றிக் கூறத் தேவையில்லை. பண்டைய சூழ்நிலையில் எழுதப்படிக்கத் தெரிந்தவர் மிகச் சிலரேயாவர். அன்றாட வாழ்க்கையின் தவிர்க்க முடியாத தேவைகளில் அன்று கல்வி ஒன்றாக இருக்கவில்லை.*[21]

ஆனால் இன்று, கல்வி சமுதாயத்தில் முதன்மையான இடத்தைப் பெற்றுச் சமூக வளர்ச்சிக்கும், சமூக மாறுதலுக்கும் மிகவும் இன்றியமையாததாக விளங்கி வருகிறது. இருப்பினும், நமது கிராமப்புறப் பள்ளிகள் பல இன்னும் கரும்பலகை, நூலகம், கழிப்பிடம் என அடிப்படை வசதிகளுக்காகத் தவமிருக்கின்றன.

உயர் கல்வி மேம்பட இத்தகைய அடிப்படை வசதிகளை அளித்து ஆரம்பக் கல்வியை வலுவடையச் செய்யவேண்டும்.

*மாணவர் சமுதாயம் மகத்தான ஆற்றல் பொருந்திய சமுதாயமாக மாறிட, படிப்புடன் பண்பை வளர்க்கும் கலைக்கூடங்களாகப் பள்ளிகள் அமைய வேண்டும். இதனின் தொடர்பணியாகக் கல்வியறிவு பெற்றவர்களின் கணக்கைப் பார்ப்பதைவிட, கல்வியறிவு கொடுப்பதற்காக மேற்கொள்ளப் பட்ட முயற்சிகளையும் அதனால் ஏற்பட்ட பலன்களையும் ஆராய்ந்து, எதிர்பார்த்த பலன் ஏற்படாத நிலையில் உடனுக்குடன் மாற்று வழிகளைக் கண்டறிதல் அவசியம். கல்வி என்பது எழுத்தறிவு, தொழிலறிவு என்ற நிலையோடு நின்றுவிடாது ஒழுக்கவுணர்வு, நீதியுணர்வு, பரிவுணர்வு ஆகியவற்றை ஊட்டுவதாகப் பாடமும், பயிற்சியும் அமைந்ததாக இருக்க வேண்டும். இத்தகைய பண்பை வளர்த்தால் பொருளாதார முன்னேற்றம் உள்ளிட்ட ஒட்டுமொத்த சமுதாய முன்னேற்றத்தை உருவாக்கமுடியும்.*[22]

'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்பதை ஏழ்மையில் இருப்போர்க்குப் புரியவைத்துச் சமுதாயத்தில் தங்களை உயர்த்திக் கொள்வதன்மூலம் சமுதாய மாற்றத்தைக் கல்வியால் ஏற்படுத்திட முடியும். கல்லாமை இருக்குமிடத்தில் இல்லாமையும், அறியாமையுமிருக்கும்.

*வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும் - இங்கு*
*வாழும் மனிதருக் கெல்லாம்,*
*பயிற்றிப் பலகல்வி தந்து - இந்தப்*
*பாரினை உயர்த்திடல் வேண்டும்*[23]

என்பதையும் பாடமாகக் கொள்ளவேண்டும்.

*மனிதன் மனிதனாக வாழவேண்டுமானால் அவன் பகுத்து அறியும் திறனும், அதன் மூலம் ஒழுக்கத்தையும் கல்வி மூலமாக மட்டுமே பெறமுடியும். மனிதன் பகுத்தறிவுள்ள உயிரி; அதனால் அவன் பகுத்தறிவுடன் செயலாற்றும் பொழுதுதான் உண்மையான மனிதனாகிறான். பகுத்தறிவின் துணை கொண்டு நல்லொழுக்கத்தை முடிவு செய்யவேண்டும்.*[24]

'சமூக இணக்கம் (Socialisation) என்பதுதான் உண்மையான கல்வி' எனச் சமூகவியலார் குறிப்பிடுகின்றனர். ஏனெனில் எவ்வளவு கற்றவராயினும் தம்மை, தாம்வாழும் சமூகத்தில் சரியாகப் பொருத்திக் கொள்ள இயலாதநிலை இருந்தால் அது கல்வியாகாது. இதையே வள்ளுவர் 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்று குறிப்பிடுகிறார். மனித சமுதாயத்தின் நாகரிக வரலாறு தோன்றிய காலத்திலிருந்து, மனித வாழ்க்கையில் இடம்பெற்றுவருவது கல்வி.

4. அறிவியல் கல்வியின் வளர்ச்சி நிலைகள்

கல்வி ஓர் உயிருள்ள பொருள். அது காலந்தோறும் வளர்ந்து, விரிந்து, சூழ்நிலைக்கேற்ப மாறி, தொடர்ந்து பரிணாமவளர்ச்சி பெற்று மூன்று நிலைகளைக் கொண்டிருக்கிறது. அவையாவன:

1. குருகுலக்கல்வி,
2. வகுப்பறைக்கல்வி,
3. தொலைநிலைக்கல்வி.

கல்வி கற்கவென வரையறுக்கப்பட்ட இடமின்றி அரசன்முதல் ஆண்டிவரை, 'குரு'வென ஏற்றுக்கொள்ளப்பட்டவரின் இல்லத்தில் காலைமுதல் மாலைவரை தொடர்ந்து வாய்மொழி மூலம் வழங்கப்படும் கருத்துக்களைப் பெற்றனர். இதில் உயரளவாக 12 மாணாக்கர்கள் மட்டும் குருவின் கட்டளைகளை ஏற்று, அவருடைய அனைத்துத் தேவை களையும் பணிவிடை செய்து நிறைவேற்றுவதே அவர்கள் பெற்ற கல்விக்குக் காணிக்கையாகும். இதனை,

*உற்றுழி உதவியும் உறு பொருள் கொடுத்தும்,*
*பிற்றைநிலை முனியாது, கற்றல் நன்றே''*[25]

என்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழிய பாண்டியனின் புறநானூற்றுப் பாடலின் மூலம் உணரலாம். குருவின் குணங்கள் அனைத்தும் அவரது மாணாக்கருக்கு வரவேண்டும். தீயவை ஏதேனும் ஏற்பட்டால் அதற்கு குரு அளித்த கல்வியையே குறைகூறுவர். இக்குருகுலத்தில் மொழி, வானசாஸ்திரம், சோதிடம், கணிதம் போன்றவையே முதன்மையாக இருந்தன. அறிவியல் கல்விக்கு அங்கு இடமில்லை.

வாழ்க்கையின் பலதுறைகளிலும் கற்றவர்கள் பங்கேற்கும்நிலை வளர்ந்தபின் - குறிப்பாகத் தொழிற்புரட்சி இடம்பெற்றபின் - தேவையான அளவு கல்விப் பயிற்சி பெற்றவர்களைக் குருகுலக்கல்வி முறையால் உருவாக்க இயலாத நிலை ஏற்பட்டது. இதைவிட அதிக உற்பத்தித்திறன் கொண்ட ஒரு கல்விமுறை தேவைப்பட்டது. இப்பின்னணியில்தான் இன்றைய வகுப்பறைக்கல்வி உருவாகி, வளர்ந்து, விரிந்துள்ளது. நவீன அறிவியல் சாதனங்களான செயற்கைக்கோளின் துணைகொண்டு நாட்டின் தொலைத்தொடர்பு சாதனங்களின் வழியே கொடுக்கப்படுகிறது. இதனால் வட்டாரத்தன்மை நீங்கி, பொதுவானதொரு பாடத்திட்டம் தேசம் முழுவதிற்கும் சென்றடைகிறது. ஏறத்தாழ அண்மைக்காலம் வரை, கைத்தொழில் செயல்முறைகளைப் பயன்படுத்திய நமது கல்வி, இப்பொழுது தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டது. முதலில் அச்சிடப்பட்ட பாடங்களை அஞ்சல்வழியாகக் கற்பித்த தொலை நிலைக்கல்வி, அடுத்து வானொலி, தொலைக்காட்சி, ஒலிப்பேழை, ஒளிப் பேழை என விரிந்தபின் செயற்கைக்கோள்வழியே தொலைநிலை உரையாடல் (Tele Conferenceing) வகுப்புக்கு வழிவகுத்தது. அதன்பின், இணையம் (Internet), இணைய வகுப்பு (Virtual Classess), இணையப் பல்கலைக்கழகம் (Virtual university) எனக் கடந்த முப்பதாண்டுகளுக்குள் இம்மாற்றங்கள் இடம் பெற்றுள்ளன.

தகவல்தொழில்நுட்பம் (Information Technology), தொலைத் தொடர்புத் தொழில்நுட்பம் (Tele Communication Technology) ஆகியவை கல்வித்துறையில் பெருமளவில் பயன்படுத்தப்படும் கருவிகளாகி விட்டதால் புதியவிளைவுகள், மாற்றங்கள் ஏற்பட்டு மனிதவள மேம்பாட்டுக்கு வழிவகுக்கிறது. இது தொழில் துறையில் தனியார் ஈடுபாட்டை ஈர்த்து, போட்டிக்கு இடமளித்து, ஏற்றுமதி இறக்குமதி வாய்ப்புகளைப் பெருக்குகிறது. இதனால் ஆய்வுகளுக்கும் புதிய கண்டுபிடிப்புகளுக்கும் உதவியாக அமைகிறது.

5. அறிவியல் தொழில்நுட்பப் பயன்பாடு

கடந்த இருபதாம் நூற்றாண்டில் எண்ணற்ற மாற்றங்களை மனித இனம் கண்டது. மின்னணு, கணிப்பொறி, அணுசக்தி, விண்வெளி அறிவியல், உயிரியல் ஆகிய துறைகளில் ஏற்பட்ட புரட்சிகளின் விளைவாக, ஒரு நாட்டின் வளமும் வாழ்வும், அறிவியலையும்

தொழில்நுட்பத்தையும் பயன்படுத்துவதன் மூலமே வளர்ச்சி காணும்நிலை உருவாகியது. விண்வெளித் தொழில் நுணுக்கத்தை நாட்டின் தேசிய வளர்ச்சிப் பணிகளுக்குப் பயன்படுத்துவதற்கு இந்திய விண்வெளித் திட்டம் முக்கியத்துவம் அளிக்கிறது. வளர்ந்துவரும் நாடுகளின் விண்வெளித்திட்டங்களில் இருந்து இந்தியாவின் விண்வெளித்திட்டத்தை வித்தியாசப்படுத்துவது இதுதான்.

> *எட்டமுடியாத பல பகுதிகளையும், இன்னும் ஆய்வு செய்யப்படாத விரிவான இயற்கை ஆதாரங்களையும் கொண்ட பெரிய நாடு ஒன்றுக்கு விண்வெளித் தொகுப்புகள் சிறப்பாகப் பயன்பட முடியும் என்பது நிரூப்பிக்கப்பட்டால், அதனை அங்கீகரித்த இந்தியா சுயசார்பான விண்வெளித் தொகுப்புகளை ஏற்படுத்த உறுதிபூண்டது.*[26]

விண்வெளியைச் சார்ந்த தொலையுணர்வுத் தொழில்நுணுக்கத்தை மேம்படுத்துவதிலும் இந்தியா குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைந்து உள்ளது.

கடல்வள ஆய்வு, தேசப்படத் தயாரிப்பு, இயற்கைவள ஆதாரங்கள் (National Resources), முக்கியப் பயிர் வகைகளான கோதுமை, அரிசி, சோளம், எண்ணெய் வித்துக்கள், கரும்பு போன்றவை பயிரிடப்பட்டுள்ள நிலத்தின் அளவு, விளைச்சல் மதிப்பீடு ஆகியவற்றைப்பெற இந்தியத் தொலையுணர்வுச் செயற்கைக்கோள்களின் புள்ளி விபரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. உணவு உற்பத்திக்கும் வேளாண் வளர்ச்சிக்கும் நமது வேளாண் விஞ்ஞானிகள் மிகப்பெரிய பங்களிப்பை அளித்து வருகின்றனர். மேலும் விசவாயிகளின் கடும் உழைப்பும், விஞ்ஞானிகளின் ஆக்கப்பூர்வமான பங்களிப்பும் பசுமைப் புரட்சிக்குக் காரணமாக இருந்தன.

> *இன்றைய சூழ்நிலையில் போதுமான உணவு உற்பத்தி மற்றும் முறையான விநியோகம் மிகப்பெரிய கவலையாக இருந்துவருகிறது. சீரான வேளாண் உற்பத்தி என்பது இயற்கை வளங்களை ஏற்கத்தக்க தொழில்நுட்பங்களைப் பயன்படுத்துவதைச் சார்ந்து இருக்கிறது.*[27]

உயிரித் தொழில் நுட்பத்துறையில் மேற்கொள்ளப்படும் அறிவியல் புரட்சி, துல்லிய பண்ணைத் தொழில் நுட்பங்கள், வேளாண் கட்டமைப்புகளின் சீரமைப்பு ஆகியவற்றால் வேளாண்வளர்ச்சி அபரித நிலையை அடையும் என்பதில் சந்தேக மிருக்காது.

வளர்ச்சிப் பணிகளுக்கு விண்வெளித் தொழில்நுணுக்கத்தைப் பயன்படுத்துவதைத் தன்னுடைய முதல்நோக்கமாக இந்தியாகொண்டுள்ள

போதிலும், இத்திறனை ஓரளவு வர்த்தக வாய்ப்புகளுக்காவும் பயன்படுத்தி உள்ளது.

> *சமூகத்தின் அடித்தள மக்களுக்குப் பலன்கள் கிட்டும் வகையில் விண்வெளிச் சாதனைத் தொகுப்புகளின் அடி முதல் நுனிவரை வடிவமைப்பதிலும், அவற்றை உருவாக்குவதிலும், இயக்குவதிலும் இந்தியா திறன் பெற்றுள்ளது. வரும் ஆண்டுகளில் இத்தொகுப்புகளை மேலும் மேம்படுத்த இந்தியா திட்டமிட்டுள்ளது. தேசியப் பணிகளில், குறிப்பாக, தொலைத்தகவல் தொடர்பு, பயிற்சி மற்றும் கல்விக்கான ஒளிபரப்பு, வானிலையியல், பேரழிவுத் தடுப்பு, இயற்கை ஆதாரங்களைக் கண்காணிப்பது, அவற்றைச் சிறப்பானவகையில் கையாளுவது ஆகியவற்றில் இத்தொகுப்புகளின் பங்குபணியை அதிகரிக்கவும் திட்டமிடப்பட்டு உள்ளது*[28]

என்கிறார் கஸ்தூரிரங்கன்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர், அறிவியல் வல்லுநரும், தொழில் மேதையுமான ஜிடி.நாயுடு அவர்களை அணுகிக் கல்லூரி கட்டுவதற்கு நன்கொடை கேட்டபொழுது 'கல்லூரி கட்டுவதற்கு ஒருகாசு கூட கொடுக்கமாட்டேன்; ஆனால் தமிழகத்திலுள்ள எல்லாக் கல்லூரி களையும் இடிப்பதற்குரிய முழுத்தொகையையும் நான் ஒருவனே தருகிறேன்' என்று கூறினார். மொழியை முதன்மையாகக் கொண்ட கல்வியைக் கல்லூரிகளில் கற்பிக்கப்பட்டதே இதற்குரிய காரணமாகும்.. வெறும் மொழிக்கல்வி வாழ்க்கைக்கு உதவாது; தொழிற்கல்வியே நமது நாட்டிற்குத் தேவை என்பதை கூறியதோடு நின்றுவிடாது கோவையிலுள்ள அரசினர் தொழில்நுட்பக் கல்லூரியை விரிவுபடுத்துவதற்கு நிறையப் பொருளுதவி செய்தார். இவ்வாறு சமுதாய வளர்ச்சிக்கான உற்பத்தியைப் பெருக்க, நமது சமுதாயம் அறிவியலையும் தொழில்நுட்பத்தையும் பயன்படுத்துவதற்குப் படிப்பறிவு வேண்டியதாகிறது. அதன் காரணமாக 'அனைவருக்கும் கல்வி' (Education for all) என்ற குறிக்கோள் எழுந்துள்ளது. இதனைப் பாரதிதாசன் "எல்லோர்க்கும் கல்வி, சுகாதாரம் வாய்த்திடுக"[29] என்றார்.

## 6. கல்வியறிவே பெருஞ்செல்வம்

பதினெட்டாம் நூற்றாண்டு தொடங்கி, கடந்த 250 ஆண்டு களுக்கும்மேலாக வளர்ந்துவரும் தொழில்யுகத்தில் கல்வி பொருளாதாரத் தேவையாகிப் படிப்படியாக வளர்ந்தது. கைத்தொழில் பழக்கத்தால் வருவது; பயிற்சி மட்டும் அதற்குத் தேவை. ஆயினும் தொழில் நாகரிகம், அறிவியல் தொழில்நுட்பத்தினைக்கொண்டு அமைந்தது. அறிவியலையும்

தொழில்நுட்பத்தையும் பயன்படுத்தக் கல்வி தேவை. தற்குறிச் சமுதாயம் தொழில்நுட்பப்புதுமைக் கருவிகளைப் பயன்படுத்த முடியாது. ஆகவே,

*………… வளம் எதுவும்*
*வருங்காலத்தில்*
*கல்லாத சமுதாயம்*
*காண்பதில்லை;*
*கல்வியுகம் மலர்கிறது;*
*காண வாரீர்!* (ப. 194)

என்று குலோத்துங்கன் புதிய கல்வியுகத்திற்கு அனைவரையும் அழைக்கிறார். ஆகவே கல்வி ஒரு பொருளாதாரத் தேவையாகமாறித் தொழில் நாகரிகத்தின் சிறப்பானதொரு கூறாகிறது. இதனை வா. செ. குழந்தைசாமியின் கீழ்க்கண்டகூற்று மெய்ப்பிக்கும்.

*இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், அமெரிக்காவில், தொழில்செய்த இருபது பேரில் பதினெட்டுப்பேர் உடல் உழைப்பாளர்கள்; கைத்தொழிலாளர் (Handworkers) இருவர் மட்டுமே கல்வியடிப்படையில் பணிசெய்தவர்கள், கல்வித்தொழிலர்; (Knowledge workers). ஆனால் அதே அமெரிக்காவில் 1965ல் 20 பேரில் 15 பேர் கல்வித் தொழிலாளர். மற்ற ஐவருங்கூட தற்குறிகள் அல்லர். கணிசமான கல்வி பெற்றவர்கள்.''*[30]

ஆகவே, அமெரிக்காவும் சில ஐரோப்பிய நாடுகளும் 1950க்குப் பிறகு தொழில்யுகத்தைத் கடந்து, கல்வியுகம் என்று கூறக்கூடிய புதுயுகத்தில் கால்வைத்திருக்கின்றன. இக்கல்வியுகத்தின் தத்துவம், கல்வியறிவே பெரியவளம்; இயற்கை வளங்கள் அனைத்திலும் ஏற்றமிக்க ஒன்று. கடந்த 50 ஆண்டுகளில் இந்நாடுகளின் பொருளாதார வளர்ச்சி புதிய இயற்கை வளங்களைத் கண்டதால் புதிய தொழில்நுட்பம், புதிய செய்முறை ஆகியவற்றின் அடிப்படையில் புதிய பொருள்கள் அமைந்திருக்கின்றன. இன்றைய நிலையில், கல்வி பெற்ற நாடுகள்தான் இனிச் செல்வம் பெறமுடியும் என்ற சூழ்நிலை உருவாகியுள்ளது.

கல்வி, சமுதாயத்தேவைகளைத் தீர்ப்பதாக அமையவேண்டும் என்பது தொழில்யுகத் தேவைகளின் அடிப்படையில் உருவான தத்துவம். இலக்கிய இலக்கணத்தை மட்டும் கற்பதற்காக இருந்தபொழுது, கல்வியால் சமுதாயத்திற்கு என்ன பலன் என்று நினையாது, இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றைப் படித்ததோடு சமுதாயத்திற்கு அதன் பொருளாதார முக்கியத்துவம் என்னவென்று எதிர்காலத்துடன் இணைத்துப்பார்க்க தவறிவிட்டது. இதனை,

*......கல்வியும், அன்பும் எம்*
*கருவி என்பது கண்டநாள்முதல்*
*பெருமை யாவுமே பெறுதல் கூடினம்* (ப. 126)

என்று குலோத்துங்கன் குறிப்பிடுகின்றார். இன்றைய கல்வியுகத்தில் உயர்ந்த இடம்பெறுவன

1) சிந்தனை,
2) சிந்தனையடிப்படையில் உருவாகும் புதிய கருத்துக்கள்,
3) கருத்துக்களைச் செல்வமாக மாற்றும் திறம்கொண்ட சமுதாயம் ஆகியவை ஆகும்.

ராக்பெல்லர், ஃபோர்ட் (Rackfeller, Ford), போன்றவர்கள் நிலம்தரும் இயற்கை வளங்களைக்கொண்டு பெரிய தொழிற்சாலைகளை அமைத்து, பணக்காரர்கள் ஆனார்கள். ஆனால், இன்று உலகின் பெரும் பணக்காரராகக் கருதப்படும் வில்லியம் பில்கேட்ஸ் தன்னுடைய புதிய கருத்தைப் பொருளாக வைத்துக் கணிப்பொறி உலகில் மாபெரும் புரட்சியை உருவாக்கிக் கோடீசுவரர் ஆனார்.

இன்று அமெரிக்கா, ஜப்பான், ஜெர்மனி, போன்ற நாடுகளில் மரபுவழி நில்லாது, மாற்றத்தை நாடும் வழிகளில் சிந்திக்கும் திறனுடையவர்களைத்தேடி, அடையாளம் கண்டு அவர்களுடைய புதிய சிந்தனைகளையும், கருத்துக்களையும் விலைக்கு வாங்கி, அதனை ஒரு சொத்து போல் தம்பெயரில் உரிமைப் பதிவு செய்கிறார்கள். அதை வைத்து, மாபெரும்விளைவுகளை உருவாக்கும் தொழில்நுட்பங்களைப் படைத்து உலகச்சந்தையில் இடம் பெறுகிறார்கள். இதனைக் கல்வியறிவுத் தொழிலுக்கு ஒரு கருவி என்று கூறலாம்.

மனித இனம் அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகிய துறைகளில் கடந்த நூற்றாண்டில் கண்ட மாற்றங்களின் காரணமாக, நாட்டை மேம்படுத்தும் கருவியாக(Tool)வும் வளர்ச்சிக்கு ஊக்கி (Motive) யாகவும், சிறந்த வளமாகவும் (Resource) கல்வி அமைந்துள்ளது. இத்தகைய

*கல்வியால் சிறந்த அறிவையும் (Knowledge), ஞானத்தையும் (Wisdom) பெறமுடியும். இன்றைய யுகத்தில் நின்று எதிர்வரும் புதிய யுகத்தை, அறிவுயுகத்தை, கல்வி யுகத்தைப் பற்றிய தொலைநோக்குச் சிந்தனைகள் வளரும்*[31]

இதனை,

*ஏடன்று கல்வி; சிலர் எழுதும் பேசும்*
*இயலன்று கல்வி; பலர்க் கெட்டா தென்னும்*
*வீடன்று கல்வி; ஒரு தேர்வு தந்த*
*விளைவன்று கல்வி; அது வளர்ச்சி வாயில்* (ப. 202)

*என்று* குலோத்துங்கன் போற்றுகிறார். கல்விவளம் இல்லாதநாடு, மற்றவளங்கள் இருந்தாலும் அவற்றை முழுமையாக முறையாகப் பயன்படுத்த முடியாது. மாறாகக் கல்விவளம் உள்ளநாட்டில் மற்ற செல்வங்கள் குறைந்தாலும், செல்வங்களை அறிவின் துணைகொண்டு உருவாக்க முடியும்.

> *பண்டைய நாட்களில் செல்வம் படைத்த நாடுதான் கல்விபெற முடியும் என்ற நிலை இருந்தது. அது முற்றிலும் மாறி, இன்று கல்விபெற்ற நாடுதான் செல்வம்பெற்ற நாடாக இருக்கமுடியும் என்ற நிலை ஏற்பட்டு இருக்கிறது*[32]

என்ற கூற்றினை இங்கு நாம் சிந்தித்து அதன்வழி செயல்பட வேண்டியதாகிறது.

> *இன்றைய நிலையில் ஒரு நாட்டின் வளர்ச்சியில் இயற்கை வளங்களின் பங்கு 20 சதவிகிதம். கட்டிடம் தளவாடங்கள் மற்ற கட்டமைப்பு வசதிகளின் பங்கு 16 சதவிகிதம். மீதி 64 சதவிகிதம் மனிதவளம், சமுதாயச்சூழ்நிலை ஆகியவற்றின் பங்களிப்பாகும்.*[33]

என்பதிலிருந்து கல்வியின் தேவையைத் தெரிந்துகொள்ளலாம். இது உலகவங்கி, 192 நாடுகளின் வளர்ச்சியை ஆராய்ந்தபின் கண்ட உண்மை யாகும். 1950-51ஆம் ஆண்டுகளில் கணிப்பொறி கண்டுபிடிக்கப்பட்டு, இன்றைய உயர் தொழில்நுட்பயுகம் உருவாகிய பின்னரே இயற்கை வளங்கள் அனைத்திலும் உயர்வுடைய வளமாகக் கல்வி உயர்ந்து மனிதவளம் என்ற புதிய சித்தாந்தமாக உருப்பெற்றது. மனித அறிவின் சிகரமாகக் கணிப்பொறி உருவாகியுள்ளது. இமைப்பொழுதில் எண்ணற்ற வித்தைகளைச் செய்யும் இவ்வியந்திரம் மனிதகுல அறிவு வளர்ச்சியின் உச்சமாக- சிந்தாந்தமாகத் திகழ்கிறது.

*... ... ....நாழிதோறும்*
*மின்னணுத் துறையர் செய்யும்*
*விந்தையில், இமைக்கணத்தில் சின்னவை எண்ணத்தக்க*
*செயல்களாம், கழித்தல், கூட்டல்*
*முன்னுள பிரிவில் ஒன்றை*
*முடிவெனத் தெரிதல் என்ப*
*எண்ணில செய்யும்; இந்த*
*எளியசெய் முறைகள் மூலம்*
*சிக்கல்கள் கோடி தீர்க்கும்*
*திறனுடைக் கருவி; மண்ணில்*
*மக்களின் மதி படைத்த*

*மற்றொரு மதி யென்கின்ற*
*அதிசயம்; புது யுகத்தின்*
*அடிப்படை; நாளும் நாளும்*
*புதிதெனும் பிறவி; கண்ட*
*பொறிகளுள் தலைய தென்னும்*
*கணிப்பொறி* (ப. 560)

என்கிறார் குலோத்துங்கன். அறிவியல் வளர்ச்சிக்கு மனிதவளம் ஓர் ஊக்கியாகவும் கருவியாகவுமிருந்து வருகின்ற காரணங்களினால், வளமை பெற்ற ஏனைய துறைகளைவிடவும் கூடுதலான வளமையை அறிவியல் தொழில்நுட்பத்துறை பெற்று யாவற்றையும் தன்னகத்தே கொண்டு அதனதன் தொடர்வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்குகிறது.

7. மதிவலிமை

மனித சமுதாய வரலாற்றில் முக்கியமான இடம்பெற்றிருக்கும் சக்திகள் மூன்றாகும். அவை,

- தசை வலிமை (Muscle Power)
- பணவலிமை (Money Power)
- மதிவலிமை (Power of Mind)

மனிதவரலாற்றின் ஆரம்பத்தில் தசைவலிமை மூலமே எதையும் சாதிக்கமுடிந்தது. இந்நிலை, பல உருவங்களிலும் பலபெயர்களிலும் தோற்றமளித்தது. நிலச்சுவான்தாரர்களின் செல்வாக்காயினும், அரசர்களின் ஆட்சியாயினும், வல்லரசுகளின் வலிமையாயினும் அவற்றின் பின்புலத்தில் நின்றது ஆட்பலம் (தசைவலிமை). ஆட்சிசெய்த மன்னர்களனைவரும், படைவலிமையால்தான் ஆண்டனர். அரசனுடைய மணிமுடி அவன் கையகத்திருந்த செங்கோலைவிட, இடையிலிருந்த வாளினையே நம்பியிருந்தது. பணபலம், மதிவலிமை இவற்றைவிட 'ஆள்வலிமைதான்' அடிப்படையாக இருந்தது.

இரண்டாம் உலகப்போரின் இறுதி வெற்றிக்கு அணுகுண்டு காரணமாயிற்று. ஆனால், சமீபகால வளைகுடாப் போரில் மின்பொறியியலையும் கணிப்பொறியையும் அவர்கள் கையாண்ட கல்வித்திறனே, அவர்களுடைய வெற்றியை நிலை நிறுத்தியது. எனவே, இருபதாம் நூற்றாண்டின் இடையிலிருந்து படிப்படியாகக் கல்வியின் திறனாகிய மதிவளம் ஏற்றம்பெற்றது. மதிவளம் இருப்பின் தசை வலிமையும் பொருள்வலிமையும் பெற இயலும் என்ற நிலை உருவாகி வளர்ந்து முழுமை பெற்றுள்ளதை,

*தசைவலி ஆண்டது தளர்ந்து, செல்வர்தம்*
*விசையும் வேகமும் மெலிந்து, மானிடர்*

*மதிவள மொன்றே வையக வாழ்வின்*
*நிதியென நிறையென நிறுவிய 'கல்விப்*
*புதுயுகம்' வானில் புலர்வது காணீர்* (ப. 394)

எனப் பெருமையாகக் கூறுகிறார் குலோத்துங்கன். தொலைநோக்குள்ள திருவள்ளுவரும்,

*அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்*
*என்னுடைய ரேனும் இலர்*[34]

என்று தீர்க்கதரிசனமாக அன்று கூறியது, இன்று நடைமுறை உண்மையாக விளங்குகிறது. வழிவழி வந்த நமது 'மதிநுட்பம்' ஆற்றல் வாய்ந்த விதை போன்றது. மேலை நாடுகள், உலகின் பல பகுதிகளில் இருக்கும் உயர்தர வித்தினையொத்த இளைஞர்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்துத் தங்கள் நாட்டிற்குச் செல்வம் சேர்க்க அவர்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். நம் நாட்டில் உருப்பெற்ற 'உயர்தர வித்துக்கள்' போன்ற பலர், மேலைநாடுகளில் தங்கள் சிந்தனையையும் கருத்தினையும் முளைவிட்டு நாற்றாகி, தருவாகிப் பூவும் கனியுமாகப் பொலியும் வாய்ப்பினைப் பெறுகிறார்கள்.

*நாம், வித்துக்களை விலையின்றி ஏற்றுமதி செய்து, அவற்றின் விளைவுகளை விலை கொடுத்து இறக்குமதி செய்து கொண்டிருக்கிறோம்..*[35]

1955 முதல் 1970 வரையிலான ஆண்டுகளில் அமெரிக்காவில் தனிநபர் ஆண்டு வருமானம் 7500 டாலரிலிருந்து 11500 டாலராக உயர்ந்தது. இக்காலக்கட்டத்தில் புதிய இயற்கை வளங்களை அதிக அளவில் கண்டுபிடிக்காமல் போனாலும் மதிவளமாகிய அறிவியல் தொழில்நுட்ப அறிவு இந்த வளர்ச்சியை வழங்கியது. பொதுவாக மனித வளமும் மதிவளமும் அனைத்து நாடுகளுக்கும் முக்கியமென்றாலும், இயற்கை வளங்களில் சற்று வறியதாகவுள்ள நமக்கு மதிவளந்தான் முதலீடும் கருவூலமும் ஆகும் என்பதை,

*மண்வளம் நிறைந்த தென்று*
*மகிழ்வதற் கில்லை; மண்ணின்*
*பொன்வளம் கணித்த தில்லை;*
*பொய்கையும் நதியும் கொண்ட*
*தண்புனல் மிகுதி யில்லை* (ப. 177)

என்ற சிந்தனையைக் குலோத்துங்கனின் கவிதை நமக்கு உணர்த்துகிறது. இந்திய நாடு, 1960இல் உணவுப்பஞ்சத்தை எதிர்நோக்கியபோது, பசுமைப்புரட்சி அதைத் தவிர்த்தது. பசுமைப்புரட்சிக்கு அடிப்படையாக அமைந்தவை அறிவியலும் தொழில் நுட்பமுமாகும். இத்துறையில்

கண்டுபிடிக்கப்பட்ட புதிய நுட்பங்களும் அவற்றைப் பயன்படுத்துவதில் நாம் காட்டிய திறமையும், வலிமையுமே உணவுப் பஞ்சத்தைப் போக்கி, மதிவளத்தின் சாதனைக்கு ஒரு பொருத்தமான சான்றாக விளங்கின. நிலமும் நீரும்தான் வளங்கள் என்றிருந்த நிலையிலிருந்து கனிம (Minerals) வளங்களும், எண்ணெய் வளங்களும் அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு உதவும் கருவி என்பதை மனிதன் இன்று அடைந்து கொண்டிருக்கிறான்.

**8. வாழ்வியலில் அறிவியல்**

மனிதநேய மேம்பாட்டிற்குத் துணைநிற்கும் சக்தியாகவும் அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி இருக்கிறது. இதனுடைய தாக்கம் இடம்பெறாத வாழ்க்கைக்கூறுகள் எதுவுமில்லை. பொருளாதார வாழ்வு மட்டுமின்றி நமது பழக்க வழக்கங்கள், மரபுகள், இசை, நாடகம், இலக்கியம் போன்ற கலைப்பகுதிகளனைத்தும் அறிவியல் தொழில் நுட்பத்தின் தாக்கத்திற்குட்பட்டவை. சுருங்கச் சொல்வதெனில், சமுதாய, அரசியல், பொருளாதார முன்னேற்றம் உள்ளிட்டவைகளில் அறிவியல் தொழிலநுட்பத்தின் பங்களிப்பு மிகுதியாக உண்டு. மனிதனுக்கு அளவிறந்த ஆற்றலை அறிவியல் உருவாக்கி இருக்கிறது.

*கனவுகள் கனவுகளாகவே இருந்த காலகட்டம்மாறிக் கனவென காண்பவையும் கைப்படல் இயலும் என்ற சூழ்நிலை உருவாகி வருகிறது.*[36]

இத்தகைய இன்றைய நிலையை, அறிவியல் அறிஞர் ஆர்தர்கிளார்க் (Arthur C. Clarke) கீழ்க்கண்டவாறு கூறுகிறார் :

*எதுவுமே கருத்தியல் மூலமாக இயலும். அதைப் பயிற்சி மூலமாகவும் அடைய இயலும். அத்தகைய செயலை ஆர்வத்துடன் செய்யும் போது நுட்பவியல் என்பதில் கடினம் ஒரு காரணமல்ல. அவ்வாறு அடையும் ஒரு செயலை மிகைப்படுத்திக் கூறுவதில் விவாதம் என்பது வேலையில்லை.*[37]

*(Anything that is theoretically possible, will be achieved in practice, no matter what the technical difficulties, if it is desired greatly enough. It is no argument against any project to say that the idea is fantastic.)*

இந்தியாவின் எதிர்காலத் தேவைகள் பற்றி எண்ணிய நமது குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல் கலாம் அவர்கள்,

*நாம் இந்தியாவைத் தொழில்நுட்பம் எனும் ஆயுதம் தாங்கிய நாடாக்க ஆயத்தம் செய்ய வேண்டும்*[38]

என்றார். இப்பின்னணியில் ஜப்பானியரின் தொழில்நுட்ப அனுபவங்களும் முயற்சிகளும் நமக்கு வருங்காலத் தேவையை உணர்த்துவதற்கு வழிகாட்டியாக அமையும். இதற்கு உயர் கல்வி நிலையங்கள் மனிதனின் அனைத்துவிதமான வளர்ச்சிகளுக்கும் உறுதுணையாக உள்ளன. வளர்ந்துவரும் நாடு என்ற முறையில் நமக்கு நிறையச் சமூக விஞ்ஞானிகளும் பண்பான மனிதர்களும், கலைஞர்களும் விஞ்ஞானிகளும் மொழி வல்லுநர்களும் தேவைப்படுகின்றனர். இந்தத் துறைகளுக்கான இளைஞர்களை இனம்கண்டு வளர்க்க வேண்டிய பொறுப்பு கல்லூரிகளுக்கு உண்டு.

> *மனித வள முன்னேற்றத்திற்கு உலகம் முழுவதும் உயர் கல்வி மிக முக்கியத் தூணாக விளங்குகிறது. தொடர்ந்து கற்பதென்பது, அனைத்துத் துறையினருக்கும் முக்கியமானது. உயர்கல்வியானது மனிதவளர்ச்சிக்குத் தேவையான துறைகளில் அறிவுப் பெருக்கத்தையும் அடிப்படைக் கட்டமைப்பையும் உருவாக்குகிறது. கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் தங்களுடைய கல்வித்திட்டம் மற்றும் ஆராய்ச்சி விரிவாக்கத்திட்டத்தின் மூலம் ஒரு சமுதாயத்ததை வளர்ச்சிப்பாதையை நோக்கி விரிவுபடுத்துகின்றன*[39]

என்ற கூற்றினை யாவரும் ஏற்கக்கூடியதே.

ஜப்பான் தனது எதிர்கால முன்னேற்றத்திற்குக் கல்வியை (உயர்கல்வியை) விரிவாக்கியது போல

> *நம் நாட்டிலும் விடுதலை பெற்றபின்னர் உயர்கல்வியானது பெருமளவில் விரிவடைந்திருக்கிறது. 1950-51 இல் 695 கல்லூரிகள் இருந்தன. இப்பொழுது 9700க்கும் அதிகமான கல்லூரிகள் இருக்கின்றன. 1.74 லட்சம் மாணவர்கள் இருந்த இடத்தில் 67.5 லட்சத்திற்கும் அதிகமான மாணவர்கள் இருக்கிறார்கள். ஆனால், உயர் கல்வியானது முறையாகத் திட்டமிடப்பட்டு விரிவாக்கப் படவில்லை. இந்தியாவில் பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப் பட்ட காலத்திலிருந்து 1984-85 வரை 125 ஆண்டுகளுக்கும் மேலாக உத்திரப்பிரதேச மாநிலத்தில் ஆரம்பிக்கப்பட்ட கல்லூரிகள் 562. ஆனால் 1985-86 ஓராண்டில் மட்டும் 402 கல்லூரிகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.*[40]

இது எந்தவிதமான மாநில மற்றும் தேசியத்திட்டத்தின் கீழும் இடம் பெற்றிருக்க வாய்ப்புகள் குறைவு. இவ்வாறு தன்னிச்சையாகவும் அரசியல் நிர்ப்பந்தங்களுக்காகவும் கல்லூரிகளை அமைத்தால் கல்வியின்

தரம் குறையக்கூடும் என்பதை, சீனாவின் ஷாங்காய் ஜியாவ்டோங் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த உயர்கல்விக் கழகம் வெளியிட்டுள்ள

> *உலகின் தலைசிறந்த 100 பல்கலைக்கழகங்கள் பட்டியலில் இந்தியாவுக்கு இடமில்லை. அமெரிக்காவின் ஹார்வார்டு பல்கலைக் கழகமும் ஸ்டான்ஃபோர்ட் பல்கலைக்கழகமும் முதலிரண்டு இடங்களையும் இங்கிலாந்தின் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் மூன்றாமிடத்திலும் உள்ளன*[41]

என்ற செய்தியிலிருந்து அறியலாம். உலகமக்கள் தொகையில் இரண்டாம் இடத்திலிருக்கும் நமக்கு மனிதவள மேம்பாட்டில் முன்னேறியுள்ள நமக்கு ஏற்பட்டுள்ள நிலையை இனியாவது மாற்றிடத் தகுந்த முயற்சி எடுக்க வேண்டியது நமது அரசின் பொறுப்பு.

தமிழகக் கல்வித்துறையின் தகுதி சரிந்து வருவதாகச் சிலர் கூறுவதற்குப் பொதுப் பல்கலைக்கழகங்களின் எதிர்காலம் நோக்கமற்றுக் காணப்படுவதாகக்கூட இருக்கலாம். இந்த நிலை நீடித்தால் வருங்காலத் தலைமுறையினருக்குப் பெருந்தீங்காக அமையும். தமிழக உயர் கல்வியின் நலத்தையும் நலிவையும் ஆராய்ந்து, சரிவைத் தடுத்திடவும் சாய்ந்ததை நேர்நிறுத்தவும் திட்டம் வகுத்துச் செயல்படுத்த வேண்டியது அவசியம். இதனால் அறிவு, செல்வமாக மாறுவதன் மூலம் பல வளங்களை, சோதனைச்சாலைகளிலேயே உருவாக்க முடியும். உடம்பில் பழுதுபட்ட பாகங்களை எடுத்துவிட்டு, செயற்கை உறுப்புகளை அங்குப் பொருத்துகிறார்கள். அச்செயற்கை உறுப்புகள், உண்மை உடலுறுப்பினை ஒத்ததாகவும் மனித உடல் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இவற்றைக் கனிமங்களிலிருந்து நேரடியாக நாம் பெறாமல் இயற்கைப் பொருளைச் சோதனைக்கு உட்படுத்தி மதிநுட்ப அடிப்படையில் உருவாக்குகிறோம். இதனை,

*நீரிலா வளமும்; நன்செய்*
*நிலமிலா விளைவும், நூற்ற*
*நாரிலா உடையும், பல்பொன்*
*நலமிலாத் தொழிற் படைப்பும்*
*வேரிலா நாற்றும், நெஞ்சம்*
*விழைவன யாவும் சேர்ப்பர்,*
*கூரிய மதியும், ஆய்வும்*
*கொள்கையும் கொண்ட வல்லோர்* (ப. 178)

என்று அறிவுத்துறை வல்லுநர்தம் சிறப்பினைப் போற்றுகின்றார்.

கடந்த நூற்றாண்டின் அறிவுவளர்ச்சி மனித வாழ்க்கையில் அனைத்து நிலையிலும் கல்வி வளர்ச்சிக்கு அடிகோலியது. வேளாண்மைக் கல்வி, தொழில்யுகத்தில் பொருளாதார வளர்ச்சிக் கருவியாக மாறியதுடன் மனித இனத்தின் ஆதார சக்தியாக

உருவெடுத்துவிட்டது. கல்வி, சமுதாயச் தேவையாகவும் கல்விக்காக ஒதுக்கப்பட்ட நிதி செலவினமாகவும் கருதப்பட்ட நிலைமாறி, உலக வாழ்வின் நிதியாகக் கருதப்படுகிறது.

**9. மதிவளம் மனிதசெல்வம்**

மனித வளர்ச்சி என்பது சித்தாந்தமும் செயலும் சேர்ந்தது. இதனை,

*சிந்தையும் தோளும் சேர்ந்தது மனிதம்* (ப. 175)

என்கிறார் குலோத்துங்கன். கலப்பை, இயந்திரங்கள், கணிப்பொறி ஆகியவற்றின் வளர்ச்சியோடு சிந்தனையின் அடிப்படையில் அமைந்த அறிவுலகிலும் இணையான கருவிகளின் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வள்ளுவர், மனித வாழ்வில், கருவியின் முக்கியத்துவத்தை,

*அருவினை என்ப உளவோ கருவியான்*
*கால மறிந்து செயின்*[42]

என வலியுறுத்தியுள்ளார். எந்த வினைக்கும் அதற்கேற்ற கருவி தேவை. உயிர்வாழும் இனங்களில், மனிதன் மட்டுமே கருவிகளைப் படைக்கும் திறனுள்ளவன். தான்படைத்த கருவிகளை வைத்து முன்னேறுபவனும் அவனே.

*ஏணி படைப்பவர்; ஏறுபவர்* (ப. 72)

என்று இதனைக் குலோத்துங்கன் கூறுகிறார். ஒரு கருவி திடப்பொருளால் ஆனதாகவும், சிந்தனையில் விளைந்த தத்துவமாகவும் இருக்கலாம். கணினியும், கம்யூனிசத் தத்துவமும் கருவிதான். ஒரு தொழில் நுட்பத்தினைப் பெறவேண்டுமென்றால், அதனைப் பயன்படுத்தும் திறனைப் பெற்றிருக்க வேண்டும். அதன் பின், பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுவதற்கு மக்கள் அதனை அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்த வேண்டும்.

கல்வியறிவு முழுமைபெறாத ஒரு நாட்டில் உயர் தொழில்நுட்பக் கருவியைப் பயன்படுத்துவது எளிதானதல்ல. ஒரு தொழில்நுட்பம் மக்களிடையே பரவ, அதைப் பயன்படுத்துவதற்குத் தேவையான அறிவினை அவர்கள் தங்களுடைய தாய்மொழியில் பெற்றிருக்க வேண்டும். ஒரு நாடு முன்னேறவேண்டுமெனில் வேளாண்மைத்துறை கல்வி வளர்ச்சி சுகாதார வளர்ச்சி தகவல் தொழில்நுட்பத்துறை வளர்ச்சி, உள்கட்டமைப்பு பெற்றிருப்பது அவசியம்.,

*நாட்டின் தொழில் வளர்ச்சி, தொழில்நுட்ப வளர்ச்சி, கல்வியறிவினை மேம்படுத்த வேண்டும். ஐந்து ஆயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த நமது இந்தியாவில்*

> *மனிதவளமும், அறிவுத்திறனும் ஏராளம். இதனை நாட்டின் வளர்ச்சிக்குப் பயன்படுத்த வேண்டும்.*[43]

இக்குறிக்கோளை நிறைவேற்றியபின் தொழில்நுட்பத்தின் மூலம் பெற்ற பொருளை மக்களுக்கு அறிமுகப்படுத்தினால்

> *அறிவியல் பார்வை மனிதமுயற்சியை வளர்ப்பது; நம்மைச் செயலுக்குத் தூண்டுவது; துணைநிற்பது.*[44]

என்ற கருத்து உண்மையாகும்.

கல்வியறிவு நிறைவுபெறாத நாட்டில், மக்கள், எளிதில் அறிவியலை நோக்கியும், அறிவியலைத் தேடியும் போகமாட்டார்கள். நாம்தான் அறிவியலை அவர்களிடம் எடுத்துச் செல்ல வேண்டும். ஆகவே, கல்வி நிலையங்கள், சமுதாய மேம்பாட்டு மையங்களாகச் (Community Development Centers) செயல்பட வேண்டும். ஒவ்வொரு கல்வி நிலையமும், ஆண்டுதோறும் சில நாட்களுக்காவது பள்ளியில் அறிவியல் கண்காட்சியை நடத்தி, அதனைப் பொது மக்களும், மாணவர்களும் கண்டு பயிலும் வகையில் பயனுள்ள பாடத்தின் மூலம் அறிவியல் அறிவினை வழங்கும் சாதனமாக்கி அனைவருக்கும் திறந்திருக்கும் வகுப்பறையாக மாற்றலாம்.

அறிவியலும் தொழில்நுட்பமும் தலையாய மேம்பாட்டுச் சக்திகளாகிவிட்டதென்றாலும் அசாதாரண ஆக்கத்திறன் பெற்ற தனிமனிதனின் பங்களிப்பு மானிடத்தின் முன்னேற்றப் பயணத்தில், புதிய சகாப்தங்களை உருவாக்கி வருகின்றது. அவ்வப்பொழுது மேதைகள் தந்த பங்களிப்புகளும் மானிடவாழ்வில் சிறியதும் பெரியதுமாகிய புதுயுகங்களை உருவாக்கியிருக்கிறது. வித்து தானே மரமாகி விடுவதில்லை என்றாலும், வித்தின்றி வித்துக்கு இணையான 'கரு'வின்றி மரமில்லை. எனவே இன்று தனிமனிதனின் பங்களிப்பு இன்றியமையாத இடத்தைப் பெற்றிருக்கிறது. அவ்வகையில் காலம் கடந்து நிற்கும் கருத்துகளுக்குச் சொந்தக்காரரான சிந்தனைச் சிற்பிதான் ஓர் இனத்தை உலகுக்கு அடையாளங்காட்டி

> *காலத்திற்கேற்ற வளர்ச்சி; வளர்ச்சிக்கு உதவும் மாற்றங்கள்; மாற்றங்களை வரவேற்கும் மனப்பான்மை; அது மலர்வதற்கேற்ற பார்வை; அந்தப் பார்வையின் அடைப்படையில் அமைந்த அணுகுமுறை ஒரு சமுதாயத்தின் முக்கியமான தேவையாகும்*[45]

எனச் சுட்டிக்காட்டுகிறார்.

2500 ஆண்டுகளுக்கு முன்பு கிரீசில் இருந்த சிறிய நகரமான ஏதென்ஸ் (Athens) அன்றே உலக வரலாற்றில் இடம்பெற்றதற்குக் காரணம் சாக்ரடீசும், பிளேட்டோவும், அரிஸ்ட்டாட்டிலும் அங்கு

வாழ்ந்ததே ஆகும். தனிமனித மேதைகள் தாமாக உருவாகி விடுவதில்லை. வித்து இருந்தாலும் விளைநிலம் தேவை. எருவும் நீரும் பராமாரிப்பும் தேவை. கணிதத்துறை கண்ட அசாதாரணக் கணித மேதைகளில் ஒருவர், சீனிவாச இராமானுஜர். ஆனால், அவரை ஒரு ஹார்டி (G.H.Hardy) அடையாளம் கண்டு ஆதரித்து உலகத்துக்கு அறிமுகப்படுத்தியிராவிட்டால் துறைமுகத்தில் சாதாரண அலுவலராகப் பணியாற்றி மறைந்திருப்பார். அதே போல் மைய நிதித்துறையின் பதவியிலிருந்த டாக்டர் சிவி இராமனை அன்றைய கல்கத்தா பல்கலைக் கழகத் துணைவேந்தரான அசுடோஷ்முகர்ஜி அடையாளம் கண்டு, இயற்பியல் துறையின் உயர்நிலை ஆய்வுக்கான வசதியும் வாய்ப்பும் அளித்ததால்தான் நோபல் பரிசு பெற்ற முதல் இந்திய அறிவியலார் என்ற உயர் புகழினைப் பெற்றார். பொதுவாக, இருக்கின்ற வளங்களை எடுத்துப் பயன்படுத்திட ஒரு அமைப்பு (System), ஒரு நிறுவனம் (Organisation) தேவை. இவற்றின்மூலம் ஒரு சமுதாயம் முன்னேற்றம் காணப் பொறுப்பான நிர்வாகம் (Administration), மேலாண்மை அமைப்பு (Management) முதலானவை வேண்டும். இவற்றின் துணைகொண்டு செய்யும் பணிகளை ஆற்றுப்படுத்தித் திசையை நிர்ணயிப்பதற்குக் குறிக்கோள் வேண்டும். அப்படிப்பட்ட குறிக்கோள், வெறுமையிலிருந்து (Vaccum) உருவாக இயலாது. அதற்கொரு கொள்கை வகுக்கப்பட வேண்டும்.

ஒரு கொள்கையின் அடிப்படையில் குறிக்கோளையும் நிர்வாக அமைப்புகளையும் உருவாக்கிச் செயலாற்றுவதற்கு ஒரு சமுதாயம், சட்டத்தின் அடிப்படையில் (Legal Base) அமைந்ததாக இருக்கவேண்டும்; அவ்வாறு சட்டங்களை இயற்றிச் செயலாற்றும் சமுதாயத்திற்குச் சில மதிப்பீடுகள், விழுமியங்கள் வேண்டும். இவை அனைத்திற்கும் அடிப்படையாக இருப்பது கல்வி. இக்கூறுகள் அனைத்தையும் உள்ளடக்கிக் கல்வியால் எல்லா வல்லமையையும் கொண்ட சமுதாயமாக என்று கூறுகிறோமோ அன்றுதான் அக்கல்வியின் பயன் எல்லா மக்களுக்கும் கிட்டும் என்ற எண்ணமுடையவர் கவிஞர் குலோத்துங்கன். எனவே, தன்னுடைய கருத்துக்களை,

*அறிவி யற்கலை யாவும் படைத்ததும்,*
*அயர்தல் உண்ணல் மறந்தங் குழைத்ததும்,*
*பொறியி யற்கலை ஊர்தி சமைத்ததும்,*
*புறங்கள் ஊடறுத் தெங்கும் பறந்திடும்,*
*நெறிமு யன்றதும், ஒன்றுபின் ஒன்றென*
*நிறைந்த பல்திரை நீக்கிமுன் னேறிடும்,*
*வெறியி லின்பம் விழைந்த எம்மினம்:*
*வீட்டின் வாயில் திறக்கட்டும் தேவியே! (ப. 109)*

என்ற கவிதையின் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

*இந்தியாவில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் தொகை கி.பி. 2001 கணக்கின்படி 65.4 சதவிகிதம்தான். எல்லோருக்கும் உயர்நிலைப் பள்ளிக் கல்வி என்ற நிலையைக்கூட நாம் எட்டவில்லை. ஏறத்தாழ 298 பல்கலைக்கழகங்களும் 13000 கல்லூரிகளும் இருந்தாலும் இன்று கல்லூரிக்குச் செல்லும் வயதுடைய 100 பேரில் பல்கலைக்கழகக் கல்வி பெறுபவர்கள் 7 பேர்தான். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து ஏழாவது ஐந்தாண்டுத் திட்டம் வரை, கல்விக்கு ஒதுக்கிய மொத்த நிதியில் சராசரி 17.3 சதவிகிதம் உயர்கல்விக்கு ஒதுக்கப்பட்டது. ஆனால் எட்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உயர்கல்விக்கான ஒதுக்கீடு, கல்விக்கான மொத்த ஒதுக்கீட்டில் 8 சதவிகிதம் தான்*[16]

வாழ்க்கைத் தரத்தில் வளர்ந்த நாட்டினைப் போல் நம் நாடும் அடைய வேண்டுமென்றால், குறைந்தது 40 சதவிகிதத்தினராவது உயர்கல்வியில் இடம்பெறவேண்டும்.

இன்று உயர்கல்வியானது சமுதாயத் தேவையாக அமைகிறது. வளரும் நாடுகள் உயர்கல்விக்குச் செலவு செய்வதைக் குறைக்கலாம் என்ற கருத்தை நீண்டகாலமாகவே உலக வங்கி தெரிவித்து வருகிறது. நமது நிதித்துறையினரும் இக்கருத்திற்கேற்ப உயர்கல்விக்குரிய நிதியை ஆண்டுக்காண்டு குறைப்பதால் புதியன காணும் நிலை முடங்கி, அயலது காணும் நிலை உருவெடுக்கிறது. ‘வல்லரசு’ என்ற நிலையை அடையும் குறிக்கோளை நோக்கிப் பயணம் கொண்டிருக்கும் இந்தியாவைப் போன்ற நாடு, அயலதான கடன் வாங்கிய தொழில் நுட்பத்தையோ, விலைகொடுத்துப் பெற்ற தொழில் நுட்பத்தையோ நம்பி இருக்க இயலாது. இதனை,

*..... அறிவியல்*
*பிச்சை இரந்தும்*
*பிழைக்கும் எளிமையின்*
*எச்சம் தாளவோ* (ப. 229)

என்று குலோத்துங்கன் குறிப்பிட்டு வேதனையுறுகிறார். நாம் அறிவியல் தொழில்நுட்பத்துறையில் வலிமையும் திறனும் கொண்டவராக இருக்க வேண்டுமெனில், எல்லோருக்கும் தொடக்கக்கல்வி என்ற நிலையில் ஒரு சிலராவது உயர்கல்வியைப் பெறமுடியும். தொழில் நாகரிகம், பொருளாதாரம், அறிவியல் தொழில்நுட்பம் என்ற அடிப்படையில் அமைந்த சமுதாயம், நாளடைவில் அனைவரும் உயர்கல்வி என்ற இலக்கை அடையத் துணைபுரியும்.

**10. வறுமையும் வளமையும்**

வரலாற்றுக் காலந்தொட்டு, உலகின் அனைத்து நாடுகளிலும் ஏழைகளும் பணக்காரர்களும் இருந்து வருகிறார்கள். பிற்காலத்தில் உருவான சமதர்ம நாடுகளுக்கும் இது பொருந்தும். ஏழையின் வறுமைக்கும் பணக்காரனின் வளமைக்கும் இடையேயுள்ள தூரம் நாட்டுக்கு நாடு மாறிக்கொண்டே வந்திருக்கிறது. இன்றைய உலகு, வளமிக்க நாடுகள், வறுமை நாடுகள் என்று இரண்டு பிரிவாக உள்ளது. இக்கருத்தைப் பீட்டர் ட்ருக்கர் (Peter Drucker),

*1910இல் மிகச் செல்வம் வாய்ந்ததெனக் கருதப்படும் நாட்டின் சராசரி வருமானம், மிகவும் ஏழ்மையானது என்று கருதப்படும் நாட்டின் சராசரி வருமானத்தைப் போல் மூன்று மடங்கு அதிகமிருந்தது. ஆனால் இன்று இருபதிலிருந்து நாற்பது மடங்கு அதிகமாக இருக்கிறது*[17]

என்கிறார்.

உலக மக்கள் தொகையில் 23 சதவிகிதத்தினர் வளமிக்க நாடுகளில் வாழ்கின்றனர். உலகின் இயற்கை வளங்களில் 80 சதவிகிதத்தை அனுபவிக்கும் இவர்கள், பூமியின் 40 சதவிகிதப் பரப்பில் வாழ்கிறார்கள். மீதமுள்ள 77 சதவிகிதத்தினர் அனுபவிப்பது 20 சதவிகித இயற்கை வளங்களை மட்டுமே. இதனை, கவிஞர் குலோத்துங்கன் அவர்கள்,

*எண்பது சதம் வரை வரவினை நுகர்பவர்*
*இருபது சதத்தரடா – வாழும்*
*மன்பதை மீதினில் மற்றுள எண்பதின்*
*வரவே இருபதடா!* (ப. 311)

என்று கவிதையில் வெளிப்படுத்துகிறார்.

வளம்பெற்ற நாடுகளின் வாழ்வுக்கும் வறிய நாடுகளின் ஏழ்மைக்கும் காரணம் என்ன என்ற கேள்வி எழுகிறது. இயற்கை வளங்கள் காரணமெனில், பெரும்பகுதியைப் பாலைவனமாகக் கொண்ட இஸ்ரேல் வளமான வலிமையுள்ள நாடாக வளர்ந்திருக்க இயலாது. நிலப்பரப்பு காரணமெனில், ஒரு நகர நாடாக உள்ள (City state) சிங்கப்பூரோ, ஹாங்காங்கோ இவ்வளவு செழிப்புள்ளதாக இருக்க இயலாது. மக்கள் தொகை காரணமெனில் இந்தியாவும் சீனாவும் உலக நாடுகள் அனைத்திலும் வளம்பெற்றதாக விளங்கவேண்டும். மொழியோ, மதமோ, அரசியல் பொருளாதார அமைப்போகூட வளர்ச்சிக்குக் காரணமாக அமையவில்லை. இவை ஒவ்வொன்றும் ஓரளவிற்கு மட்டும் உதவலாம். ஆனால் அடிப்படை இதுவன்று.

*ஒருங்கிணைந்த தொழில்நுட்பத்தைக் கையாண்டால், 2020ல் இந்தியா வளர்ந்த நாடாக உருவாகிவிடும். பொருளாதார வளர்ச்சிக்கான அனைத்துத் துறைகளிலும் ஒருங்கிணைந்த தொழில்நுட்பத்தைப் பயன்படுத்திட வேண்டும். அதுவே அனைத்துத்துறைகளிலும் நமது சமுதாயம் முன்னேற அடிப்படையாக அமையும்.*

என்ற நமது குடியரசுத் தலைவரின் கருத்தினைக் கவனத்தில் கொண்டு சர்வதேச அளவுக்குப் போட்டியிடக்கூடிய தொழில்நுட்பத்தைப் பயன்படுத்திட வேண்டும். இதற்கு,

*அறிவியல் தொழில்நுட்பத்துறையில் முன்னேறிய நாட்டினர் அடைந்திருக்கும் உச்சநிலையும், அறிவியல் தொழில்நுட்பத் துறையில் அவர்கள் பெற்றிருக்கும் புதியன படைக்கும் ஆற்றலும், அறிவியலையும் தொழில் நுட்பத்தையும் பயன்படுத்திக் கொள்ள அம்மக்களுக்கு இருந்த திறனுமே காரணங்களாகும்.*[48]

என்கிறார் அப்துல் கலாம். இதனை,

*அறிவிய லென ஒரு தேர்கண்டீர் - அதில்*
*அமர்ந்தீர்; பறந்தீர்; மேற்சென்றீர்* (ப. 249)

என்று அறிவியல் வளத்தால் பெறும் சிறப்பை வெளிப்படுத்துகிறார் கவிஞர் குலோத்துங்கன்.

**11.** வளர்ச்சிப் பணியில் ஆசிரியர்களும் அறிவியலும்

நமது வேளாண்சமுதாயத்தைத் தொழில் நாகரிக சமுதாயமாக மாற்ற வேண்டும். அரசின் ஆணையாலோ, தனிப்பட்ட நபரின் மூலமாகவோ இதனைச் செய்யஇயலாது. இதில் மக்களே ஈடுபட வேண்டும். ஆகவே, கிராமமக்களுடன் தொடர்புள்ள பள்ளி ஆசிரியர்களின் துணையைக் கொண்டு சமுதாய மாற்றத்திற்கோர் தொடக்கத்தை ஏற்படுத்தலாம். இந்தப் பெரிய மாற்றத்தை உருவாக்கும் வலிமையும் கல்வித் திறனும் நமது ஆசிரியர்களுக்கு இருக்கிறது. வகுப்பறைக்கு வெளியிலும் தமது கடமை பரவியிருக்கிறது என்பதை ஆசிரியர் சமுதாயம் உணரவேண்டும். ஒவ்வொரு பள்ளியும் எழுத்தறிவிக்கும் இடமட்டுமின்றிச் சமுதாயமேம்பாட்டு மையமாகவும் விளங்க வேண்டும். இதற்கு ஆசிரியர்கள் சமுதாய மாற்றத்தின் சிற்பிகளாகத் தங்களை வரையறுத்துக் கொள்ளவேண்டும்.

வருங்காலத்தில் நமது பொருளாதார வளர்ச்சிக்கு, பரவுதல் (Diffusion), பரப்பல் (Dissemination) ஆகியவை முக்கியத் தேவை களாகும். அதற்கு, கல்வி நிலையங்கள் பயிலும், பயிற்றுவிக்கும் நிலையமாக மட்டும் செயல்படாது அறிவு வளர்ச்சி பெற்ற வாழ்வோடு

தொடர்புடையதாகச் செய்யவேண்டும். அதன் வழியாக எல்லைகளைக் கடந்து மக்கள் மன்றில் அறிவுபரப்பும் மையமாகக் கல்வி நிலையங்கள் மாறவேண்டும்.

நமது எதிர்கால வளர்ச்சி உயர்கல்வி தொழில்நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கிறது. உலக நாடுகளின் அணுகுமுறையும் இத்திசையை நோக்கித்தான் இருக்கிறது.

*அறிவியல் கல்வியும், அறிவியல் வகுத்த*
*நெறிவழி வளர்ந்து நிறைந்த துறைகளும்*
*எத்திசை நோக்கினும், எத்துறை யாயினும்*
*மத்திய ஆட்சியே வளர்ந்து நின்றிடும்* (ப. 392)

என்ற நிலையில், நமது அரசின் பயணமும் அப்பாதையில் அமைய வேண்டுமென்று விரும்புகிறார் கவிஞர் குலோத்துங்கன். பல்கலைக் கழகங்கள் உயர்கல்வியின் தலைமையிடம்; புதிய கருத்துக்கள் புலருமிடம்; புலர்ந்த கருத்துக்கள் பொருளாக மாற்றம் பெறுமிடம். இதிலிருந்து

*சிறந்த மதிப்பெண்கள் பெற்றுத் தேர்ச்சி அடையும் மாணவமணிகள், அயல்நாட்டுத் தூதரகங்களின்முன் கியூவில் நிற்கிறார்கள். இவர்களை எல்லாம் நாட்டுப்பற்று அற்றவர்கள் என்று நாம் குறைகூற முடியாது. அவர்களது படிப்புக்கும் திறமைக்கும் ஏற்ற பணிகளை இந் நாட்டில் நாம் உண்டாக்கிடத் தவறிவிட்டோம். அமெரிக்காவில் சான் பிரான்சிஸ்கோ நகருக்கு அருகிலுள்ள சிலிக்கான் வேலி என்னும் மிகப்பெரிய தொழிற்பேட்டையில் தொழில் நடத்துபவர்களும் பணி புரிபவர்களும் பெரும்பான்மையோர் தமிழர்களாகவும், தெலுங்கர் களாகவும், மலையாளிகளாகவும் இருக்கிறார்கள். நம்நாட்டு அறிவு வளர்ச்சி அமெரிக்காவின் வளர்ச்சிக்குப் பயன்படுகிறது. நமது மாணவர்களின் அறிவு வளம் மற்ற நாட்டிலிருந்து வருபவர்களின் அறிவு வளத்தைவிட மிக உயர்வாகவே இருக்கிறது. எனினும் நாம் இதனைப் பயன்படுத்தத் தவறிவிட்டோம்.*[49]

நில, நீர், கனிம வளங்களில் தமிழகம் வறியதாகவே உள்ளது. இவற்றை ஈடுசெய்ய நமக்கிருப்பது மதிவளம்தான். அறிவியல் தொழில்நுட்பத்தின் அடிப்படையில்தான் நாம் நமது பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு வளர்ச்சியடைய வேண்டும். இதனை,

*அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்*
*சிறந்தா னென்று ஏவற்பாற்றன்று*[50]

என்கிறார் வள்ளுவர். முதலில் அறிதல் வேண்டும்; இரண்டாவதாக ஆற்றுதல் வேண்டும். இதனைத்தான் குலோத்துங்கன்,

*மலையென்னின் ஏறுபவர் ;*
*அடர்ந்த காட்டு*
*வழியென்னின் நடப்பவர் ;*
*பேர் ஆற்று வெள்ள*
*அலையென்னின் நீந்துபவர்;*
*தடைகள் கண்டும் அயராதவர்* (பக். 246 - 247)

என்று வினைமுடிக்க வல்லாரின் இலக்கணம் கூறி அத்தகையோர் உருவாக்கப்படவேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

கருத்துக்களின் முடிவு

- கடந்த 50 ஆண்டுகளில் நாம் கண்ட வளர்ச்சி, அறிவியில் தொழில்நுட்பத்தைப் பின்பற்றியதால் தான் ஏற்பட்டது.
- அறிவியல் நுட்பங்கள் பண்டைக்காலந்தொட்டே தமிழகத்தில் இருந்து வந்ததை இலக்கியங்களிலிருந்து அறியமுடிகிறது. ஆனால், இன்று நாம் பயன்படுத்திவரும் அறிவியல் தொழில்நுட்பம் முற்றிலும் புதியது.
- இன்றைய மனித வாழ்விற்கு அறிவியல் தொழில்நுட்பம் புதிய பொலிவையும் பரிமாணத்தையும் சக்தியையும் தருகிறது. இனிவரும் நூற்றாண்டுகளில், அறிவியலே மனித வாழ்க்கையில் பெரும் பங்கு வகிக்கும்.
- அறிவியல் உலகம், எதனையும் நம்பிக்கையினடிப்படையில் ஏற்காது; அதனை முறையான வாதங்கட்கும், சோதனைகட்கும் உட்படுத்தி அவற்றினடிப்படையில் ஏற்பது மரபாகும்.
- ஓர் இனத்தின் அல்லது சமுதாயத்தின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவர்கள் பின்பற்றும் அணுகுமுறையே காரணமாக அமைகிறது.
- தனிமனிதனின் உணர்வும், உரிமையும் சமத்துவமும் அறிவியல் அணுகுமுறையில் வளர்கின்றன. வாழ்க்கையில் வளங்களைப் பெருக்கவும், வறுமையை அகற்றவும் அறிவியல் அணுகு முறையே ஏற்றதாக அமைகிறது.
- சமுதாயத்தின் முதன்மையான இடத்தைப் பெற்றுச் சமுதாய வளர்ச்சிக்கும் மாறுதலுக்கும் கல்வியே காரணமாக அமைந்துள்ளது. கல்வி பெற்ற சமுதாயம் இனி, செல்வம் பெற்ற சமுதாயமாக அமையும்.

- நவீனத் தொழில்நுட்பத்தினைப் பயன்படுத்தி இந்தியா, விண்வெளி தொடர்பான செயல்பாடுகளில் மகத்தான சாதனை படைத்து நாட்டின் வளர்ச்சிக்கு அடித்தளம் அமைத்துத் தருகிறது. தகவல் தொழில்நுட்பத்தில் உயர்ந்ததொரு இலக்கை அடைந்துள்ளது.
- இனி மனிதவளர்ச்சிக்கு, இயற்கைவளங்கள் (Natural Resources) அடிப்படையாகயிருந்தாலும் மனிதவளத்தால்தான் (Human Resources) நிறைவான வளர்ச்சியை அடையமுடியும்.
- ஒரு சமுதாயத்திற்கு மதிப்பீடுகளையும், விழுமியங்களையும் பெற்றுத் தருவது அறிவியல்நுட்பம் சார்ந்த கல்வியால் மட்டுமே முடியும். இதற்குத் தொடக்கக்கல்வி முதல் உயர்கல்வி வரையில் புதிய அணுகுமுறைகளைப் பின்பற்றிட வேண்டும். இத்தகைய கல்வியைத் தாய்மொழியின் மூலம் வழங்கிட வேண்டும்.
- மக்களின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் வறுமைக்கும் வளமைக்கும் காரணமாகயிருப்பது அவர்கள் பின்பற்றப்படும் கல்விமுறையும், அதனடிப்படையில் அமையும் தொழில்நுட்பமும் ஆகும். எனவே, சமுதாய வளர்ச்சிக்குப் புதிய அணுகுமுறை உதவுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. The Concise Oxford Dictionary - p. 1252.
2. முதுகண்ணன் சாத்தனார், புறநானூறு 30.
3. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், 3 : 95 - 107.
4. சீத்தலை சாத்தனார், மணிமேகலை, 7 : 8 - 10.
5. மேலது, 27 : 127 - 132.
6. நக்கீரர், நெடுநல்வாடை, 73 - 78.
7. முல்லைப்பாட்டு, வரி 55.
8. மதுரைக் காஞ்சி, வரி 671.
9. அக்னிவேசர், சரகசம்கிதை - முன்னுரை.
10. ராமதேசிகன், அறிவியலின் முன்னோடி ஆயுர்வேதம், தினமணி கட்டுரை, 28.01.2000.
11. சுந்தரராஜன், மரு.அ., சித்தமருத்துவ கைமுறை வைத்தியம் - அணிந்துரை.

12. குழந்தைசாமி, வா. செ., அறிவியல் பார்வை, தினமணி தீபாவளி மலர், 1996. ப. 55.

13. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 467.

14. கைலாசபதி, க., குலோத்துங்கன் கவிதைகள், முன்னுரை, ப. 670.

15. குழந்தைசாமி வா.செ., அறிவியல் பார்வை, தினமணி தீபாவளி மலர், 1996. ப. 56.

16. குழந்தைசாமி வா.செ., பாரதியின் அறிவியல் பார்வை, ப. 23.

17. முத்து சு.நெல்லை., முக்கோணத்தமிழ் வளரட்டும், தினமணி கட்டுரை, 04.02.2000

18. கண்ணதாசன், கண்ணதாசன் கவிதைகள் (தொ-5), பக்.53 - 54.

19. குழந்தைசாமி, வா.செ., பாரதியின் அறிவியல் பார்வை, ப. 41.

20. மேலது, ப. 47.

21. மேலது, ப. 48.

22. பாரதிதாசன், குடும்ப விளக்கு - முன்னுரை.

23. பாரதியார், பாரதியார் கவிதைகள்.

24. இளம்வழுதி, க.பெ., தினமணி கட்டுரை, 10.12.2000.

25. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், புறநானூறு, 183 : 1-2.

26. சுர்ஜித்சிங் பர்னாலா, கோவை வேளாண் பல்கலைக்கழக 64ஆம் ஆண்டு பட்டமளிப்பு உரை, தினமணி நாளிதழ், 16.12.2004.

27. வாழ்வியல் களஞ்சியம், (தொ. 2) ப. 799.

28. கஸ்தூரிரங்கன், கே., விண்வெளியில் இந்தியச் சாதனைகள், தினமணி - சுதந்திரதின விழா மலர், 1997. ப. 61.

29. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் - வீரத்தாய், ப. 9.

30. குழந்தைசாமி, வா.செ., தமிழ்நாடு ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் வருடாந்திர மாநாடு - காரைக்குடி - உரை, 3.5.1998.

31. சுபாசு சந்திரபோசு, பெ., தினமணி நாளிதழ், 16.10.1999.

32. "Learning to Be", UNESCO publication, 1972

33. குழந்தைசாமி, வா.செ., தினமணி கட்டுரை, 1.12.1998.

34. திருவள்ளுவர், திருக்குறள், எண் 430.

35. குழந்தைசாமி, வா.செ., தினமணி கட்டுரை, 05.10.1999.
36. இராஜசேகரன்பிள்ளை, வி. என்., தினமணி நாளிதழ், 12.12..2004.
37. குழந்தைசாமி, வா.செ., பாரதியின் அறிவியல் பார்வை, ப. 113.
38. செட்டி, என்.ஆர்., தினமணி நாளிதழ், 16.12..2004.
39. டாக்டர் அப்துல் கலாம், இந்து (The Hindu) நாளிதழ், 6.9.2000.
40. குழந்தைசாமி, வா.செ., தினமணி கட்டுரை, 5, 6.04.2002.
41. தினமணி நாளிதழ், 23.12..2004.
42. திருவள்ளுவர், திருக்குறள் , எண் 483.
43. குழந்தைசாமி, வா.செ., பாரதியின் அறிவியல் பார்வை, ப. 24.
44. மேலது, ப, 26.
45. குழந்தைசாமி, வா.செ., தினமணி கட்டுரை, 1.12.1998.
46. டாக்டர் அப்துல் கலாம், தினமணி நாளிதழ், 15.11.2004.
47. Peter F. Drucker, Managing of Feature Tata MC Graw Hill, New Delhi. Chap. 13, p. 94.
48. Abdul Kalam, A.P.J. Dr., Notes on Science (1992) Technology and Science Education in the Development of South the third world Academy of Science....... Trieste Italy 1989.
49. குப்புராஜ், சி. எஸ்., தினமணி கட்டுரை, 25.04.2004
50. திருவள்ளுவர், திருக்குறள், எண் 515.

# 2. பெண்ணியச் சிந்தனைகள்

அறிவும் அறிவியலும் வளர்ந்த சென்ற நூற்றாண்டில்தான் பெண்ணியம் பேசப்பட்டது. இது ஆணுக்கு எதிரானதோ, ஆணை ஒதுக்கியதோ அன்று; அதற்கு மாறாக ஆணும் பெண்ணும் சம உரிமையுடன் இணைந்து வாழும் கோட்பாடாகும். பெண்ணுக்கான உரிமையும் கடமையும் கலந்து இயங்கும் பண்பே பெண்ணியம் எனலாம். குலோத்துங்கனின் கவிதைகளிலிருந்து பெண்ணியம் குறித்தான செய்திகளை,

1. பெண்ணியம் - விளக்கம்,
2. பெண்ணின் மேன்மை,
3. தமிழ் இலக்கியங்களில் பெண்ணிழிவு,
4. தமிழ் இலக்கியங்களில் பெண் உயர்வும் தாய்த்தலைமையும்,
5. தாய்த்தலைமை சரிவு,
6. குலோத்துங்கன் படைப்பில் பெண்கள்,
7. பெண்களின் முன்னேற்றப்படிகள்,
8. கல்வியும் பொருளாதார வளர்ச்சியும்,
9. கடமைகளும் இயற்கை நியதியும்,
10. பெண்மையின் வலிமை,
11. இன்றைய இழிநிலை

ஆகிய தலைப்புகளில் விளக்கப்படுகிறது.

**1. பெண்ணியம் - விளக்கம்**

'பெண்ணியம்' என்ற சொல்லானது **'Feminism'** என்ற ஆங்கிலச் சொல்லைக் குறிப்பதாகும். இதற்கு,

> *The advocacy of women's rights on the ground of the equality of the sexes"*[1]

என்று கூறுகிறது அகராதி. பெண்களின் தாழ்நிலைகளை ஆராய்ந்து, அதனை மாற்றுவதற்கு மேற்கொள்ளும் வழிமுறையே பெண்ணியம். இது அறிவுத்துறை சார்ந்த ஒரு சமூக விஞ்ஞானமாகும். இச்சொல் தமிழில் பெண்ணியம் என்று வழங்கப்படுகிறது. பெண்ணியத்திற்குப்

பெண்ணிலைவாதம், பெண்ணிலை ஏற்பு, மகளிரியல், பெண்நலக் கொள்கை என்று பல சொற்களைக் கூறலாம். எனவே,

> *தற்காலத்தில் விரைந்து வளர்ந்து வரும் ஒரு சமூக அறிவியலே பெண்ணியம்*[2]

என்பதற்கு உலகச்சமுதாயம் அனைத்திற்கும் முக்காலத்திற்கும் ஏற்றதொரு விளக்கத்தைக் கொடுக்கமுடியாது. இது சமுதாயத்தின் வரலாற்றையும், பண்பாட்டையும், உணர்வையும், செயலையும் பொறுத்து மாறுபடுவதென்றாலும், பெண்ணியம் என்ற சொல்லுக்கு,

> *பெண்கள், சமூகத்திலும் அலுவலகங்களிலும் வீட்டினுள்ளேயும் நசுக்கப்படுவதைப் பற்றிய விழிப்புணர்ச்சியும் அந்நிலையை மாற்றியமைக்க ஆண்களும் பெண்களும் ஒருவரையொருவர் புரிந்துகொண்டு செயற்படும் முயற்சிகளும்*[3]

என்று விளக்கமளிக்கிறார் ச.முத்துச்சிதம்பரம். இதன்படி, பாலின அடிப்படையில், சமூகத்தின் வழக்கத்திலிருக்கும் ஏற்றத்தாழ்வுகளை மாற்றுவதற்கு முயல்வோர் பெண்ணியவாதிகளாவர். பெண்ணியம், பெண்களுக்கு மட்டும் சமத்துவம் வேண்டுமென்று கேட்கவில்லை. சமத்துவச் சமுதாயம் உருவாக வேண்டுமென்பதே அதன் அணுகு முறையாகும். சமுதாயத்தில், ஆணும் பெண்ணும் பாலினப்பாகுபாடின்றி மனிதர்களாக மதிக்கப்பட வேண்டும்; மனிதமேம்பாடே பெண்ணியத்தின் நோக்கம் என்பது இதன்மூலம் புலப்படுகிறது. மக்கள் அடிமைகளாக வாழும் சமுதாயத்தில், பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் அடிமைகளே. அங்கு ஆண் - பெண் சம உரிமை வேண்டும் என்று கேட்பதில் பொருளில்லை. இருவருக்கும் பொதுவான, நேர்மையான சமுதாயம் உருவாகவேண்டும் என்று பெண்ணியம் விரும்புவதால், இதுவரை உருவாகாதவொரு சமத்துவச் சமுதாயத்தை உருவாக்குவதையே, குறிக்கோளாகக் கொண்டுள்ளதை உணரமுடிகிறது.

## 2. பெண்ணின் மேன்மை

உலகில் மானிடராய்ப் பிறந்தோர் வாழ்க்கையின் பயனைத் துய்த்தற்கு இல்லறம், துறவறம் என்னும் இருவழிகள் உள்ளன. அவற்றுள் முன்னையது

> *கணவனும் மனைவியுமாய் இருவர் சேர்ந்து நடத்தும் அறம், அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை*[4]

'இல்லறமல்லது நல்லறமன்று' போன்றவை இவற்றை வலியுறுத்தும்.

*நல்லறம் செழுமையாகவும் சிறப்பாகவும் சீர்பெற, கணவன் மனைவி இருவருமே ஒழுக்கசீலர்களாகவும் உயர்ந்த விழுமியர்களாகவும் இருக்க வேண்டும். கணவன் உடலென்றால் மனைவி உயிர். உடலில் எந்த உறுப்பு பழுதுபட்டாலும் உடல் இருக்கும். ஆனால் உயிர் பழுதுபட்டால் உடலிருந்தும் பயன் இல்லை. எனவே, குடும்பத்தில் ஒரு ஜீவநாடி, உயிரோட்டம் ஒளிவிளக்கு எல்லாமே பெண்ணேதான்*[5]

என்கிறார் இந்திரா சோம சுந்தரம். ஒரு புறம் குழந்தைமணம், பலதார மணம், சதி, விதவைவாழ்வு, பரத்தைவாழ்வு. மற்றொருபுறம் மூடபக்தி, அறியாமை, கல்லாமை போன்ற செயல்கள். இவைகளனைத்தும் பெண்ணை முன்னேறவிடாமல் இறுகப் பின்னப்பட்ட வலைகளாகும்.

*இந்தியாவில் வறுமை, சாதி, கல்வியின்மை, மூடநம்பிக்கை போன்றவற்றால் பாதிக்கப்பட்ட பாமர மக்களின் முன்னேற்றம் எவ்வாறு சமுதாயப் பிரச்சினையாக இருந்ததோ, அதுபோன்றே பெண்களுடைய முன்னேற்றமும் உரிமையும் சமுதாயச் சிக்கல்களாக விளங்கின்*[6].

எனவே, ஒரு நாடு முன்னேற்றம் அடைந்துள்ளதெனில் அங்குள்ள பெண் மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கொண்டே கணிக்கப்படுகிறது என்று பொருள். ஆனால்,

*நமது நாட்டில் அறியாமை, மூடநம்பிக்கை, தீவிர கடவுள்பக்தி போன்றவை பெண்களைச் சுயசிந்தனை அற்றவர்களாகச் செய்துள்ளன. இம் முட்டுக்கட்டைகள், பெண்கள் தங்கள் உரிமைகளை அறிந்து கொள்ளவும் உணர்ந்து கொள்ளவும் சக்தியற்றவர்களாக்கியுள்ளன.*[7]

பெண் அன்பு செய்பவள், பலகீனமானவள், மென்மையானவள், ஆணின் பாதுகாப்பில் முழுமை அடைபவள் என்பதற்கெல்லாம் அறிவியல் அடிப்படையில்லை. பெண்மை, ஆண்மை என்பது பண்பாட்டுவழி ஏற்படுத்தப்பட்ட வெறும் புனைவுகளே. மேலை நாடுகளில், குறிப்பாக முன்னேறிய நாடுகளில் பெண்களின் நிலையை,

*மாதர்கள், வீட்டு அடிமைகள் என்று அழைக்கப்படுவதில் வியப்பில்லை; நாகரிகம் அடைந்த எல்லா நாடுகளிலும் முன்னேற்றம் அடைந்த சில நாடுகளிலுங்கூட மாதர்கள் நிலை இவ்வாறுதான் உள்ளது*[8]

என்கிற லெனின் கூற்று இன்றைய உண்மை நிலையைக் காட்டுகிறது. 'பெண்' என்பவள் ஆண் துணையைத் தேடி நிற்கும் ஒரு பலவீனப் படைப்பு. அவள் ஆணின் சொத்து என்றே ஆணுலகம் நினைக்கிற தென்றாலும்,

> *இன்றைய சமுதாயத்தில் பெண்மக்கட்குப் பல உரிமைகள் கிடைத்திருத்தலையும் நாம் மறுக்க இயலாது. எடுத்துக் காட்டாகக் கல்வி உரிமை, ஆண்களோடு சரிசமமோடு நின்று பணிபுரியும் உரிமை, நாடாளும் உரிமை என்று பல உரிமைகள் கிடைத்துள்ளன.*[9]

என்கிறார் சாலை இளந்திரையன்.

> *அதர்வண வேதம் பெண் பிறப்பதையே விழா எடுப்பதற்கான நிகழ்வாகக் கருதுகிறது.*[10]

பாரதியார் பெண்மை வாழ்க வென்றும், வெல்க வென்றும் கூத்தாடச்சொன்னார். அவரைப் பின்பற்றிய நாமக்கல் கவிஞரும்,

> *மங்கையராய்ப் பிறப்பதற்கே - நல்ல*
> *மாதவம் செய்திட வேண்டுமம்மா*[11]

என்றார். இவர்களின் வழிவந்த பாரதிதாசன், மூடப் பழக்கவழக்கங்களின் துர்நாற்றத்தை மாற்றி, மணம் வீசச்செய்யும் கற்பூரம் பெண்; கடவுள் நம்பிக்கையில் கருத்தழியும் பெண்குலத்தைக் கரைசேர்க்க வந்தவள்; பகுத்தறிவுப்பெட்டகம் பெண் எனக் கருதும் பாரதிதாசன் இறுதியில்,

> *எல்லாம் கடவுள்செயல் என்று துடை நடுங்கும்*
> *பொல்லாங்கு தீர்த்துப் புதுமை செய வந்தவளே பெண்*[12]

என்று கூறுகிறார். நடைமுறை வாழ்க்கையில், பெண்கள் இந்த அளவு உரிமை பெற்றுள்ளனர் என்றால் அப்பெருமையனைத்தும் பெண்ணியச் சிந்தனையாளர்களையே சாரும். இதனையே குலோத்துங்கன் அவர்களும்,

> *... ..... படைப்பின் மாண்பெலாம்*
> *பெண் எனும் உருப் பெற்ற விந்தை (ப. 423)*

என்று பெண்ணைப் பெருமைப்படுத்துகிறார்.

**3.** தமிழ் இலக்கியங்களில் பெண்ணிழிவு

சங்கம் மருவியகால இலக்கியங்களில், பெண்வெறுப்புக் கோட்பாடுகள் அரும்பத்தொடங்கின. குறிப்பாக, சமணரால் எழுதப்பட்ட நாலடியார், திரிகடுகம், சிறுபஞ்சமூலம் முதலானவற்றுள் உணர முடிகிறது. சீவகசிந்தாமணியில் பெண்பிறப்பு கொடியது என்றும் அப்பிறப்பை ஒழிக்க வேண்டும் என்ற திருத்தக்கதேவர்,

*விளக்கொளி விசும்பில் வெண்கோட்*
*டிளம்பிறை சூழ்ந்த மின்போல்*
*வளங்கெழு வடத்தைச் சூழ்ந்துவான்*
*பொனான் டிளைப்பச் சேந்த*
*இளங்கதிர் முலைக டம்மா*
*லிவனைமார் பெழுதி வைகிற்*
*றுளங்குபெண் பிறப்பிந் தோழி*
*யினிதெனச் சொல்லி நிற்பார்.*[13]

என்று பெண்ணை இழிவாகக் கூறுகிறார். மேலும்,

*பெண்ணாகப் பிறத்தல் கொடிது*[14]

*ஏசு பெண் ஒழித்து*[15]

*ஏழைப் பெண் பிறப்பு இடியச் சிந்தியார்*[16]

என்று கொடிய இப்பெண் பிறப்பு, சீவகனுடன் சேர்ந்து வாழ்வதால் இனிதாகிறது என்பதையும் பெண் பிறப்பானது பழித்து ஏசத்தக்கதாய் இருந்ததையும் மேற்கண்ட அடிகள் காட்டுகின்றன. நச்சினார்க்கினியர் இதற்கு உரை எழுதும்போது, 'பொல்லாதது என்று கூறும் பெண் பிறப்பை' என எழுதுகிறார்.

எழுத்து எனப் படுப
அகர முதல் னகர இறுவாய்[17]

எனும் தொல்காப்பிய முதற்நூற்பாவிற்கு உரைஎழுதிய இளம்பூரணர், அகரம் தானும் இயங்கித் தனிமெய்களை இயக்கும் சிறப்பால் முன்வைக்கப் பட்டது. னகரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதல் சிறப்பால், பின் வைக்கப்பட்டது என்கிறார். இவ்விளக்கத்தில் ஆண்மகனே வீடு பேற்றிற்கு உரியவன் என்ற குறிப்பு வெளிப்படையாகவே இடம்பெற்றுள்ளது. இது, சமணசமயத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாகும். ஆண் வீடுபேற்றிற்கு உரியவன்; பெண் வீடுபேற்றிற்கு உரியவள் அல்லள் என்பதைச் சமண நூலான மேருமந்திர புராணம்,

*இந்திரன் தேவிமார்க்கும் இறைமை*
*செய் முறைமை இல்லை*
*பைந்தொடி மகளிர் ஆவார்*
*பாவத்தால் பெரிய நீரோ*[18]

என்று குறிப்பிடுகிறது. சமணக்காப்பியமான சூளாமணி, 'பெண் மானுடராகக் கருதத்தகும் தகுதியை உடையவள் அல்லள்' என்பதை,

*அன்னை அலிகுரு டாதி யவர்களை*
*மண்ணுயர் நாலத்து மானிட ராகவைத்*
*தெண்ணுநர் யாருளர்? எல்லா மமையினும்*
*பெண்ணின் பிறவும் பீடுடைத் தன்றே*[19]

என மொழிகிறது.

பெண்பிறவி, இழிபிறவி என்ற கோட்பாடானது காலப்போக்கில், பெண் வெறுப்புக் கோட்பாடாகவும் பெண் மறுப்புக் கோட்பாடாகவும் விரிந்தது. இதன் விளைவாகப் பெண்குழந்தையை வெறுக்கும் போக்கு வளர்ந்து, பிறக்கும்போதே கொன்றுவிடுவது தமிழகத்தின் சில இடங்களில் வேரூன்றியது. திருமணமுறை வேண்டாதது, தவறானது என்றதொரு கொள்கைக்கூடப் பரவியது. சமணசமயத்தின் பெண் வெறுப்புணர்வு, ஏனைய இந்திய சமயங்களிலும் பரவிற்று.

*இந்து சமயத்துத் தலைமைநூலாகப் போற்றப்படும் பகவத்கீதையின் ஒன்பதாம் அத்தியாயத்தில், 'வையோனிகளில் மனிதநேயம், ஜனித்தவர்களாகிய ஸ்தீரிகள்' என்றும் 'கீழான பிறவிகளாக இருக்கும் பெண்கள்' என்றும் கிருஷ்ணபரமாத்மாவால் குறிக்கப் படுகிறது. மேலும், இப்பகுதியில் பெண்களைச் சூத்திரர்களுக்கு இணையாகவைத்துச் சுட்டிக்காட்டுகிறார் கண்ணன்.*[20]

இந்தியாவில் இந்துமதச் சட்டநூலாகப் போற்றப்படும் மனுதர்ம சாத்திரத்தில், மனிதசகோதரத்துவம், சமத்துவம், பெண்ணின் இயற்கைப் பெருமை அனைத்திற்கும் எதிரானதாக வரையறுக்கப்பட்டுள்ளது. மனுதர்மம் பெண்ணைப் பெரிதும் இழிவுபடுத்தியதால், மனித உரிமையைப் பறிக்கும் சாஸ்திரம் என்று இதனைக் கூறலாம்.

*பெண் கல்வியிலிருந்து விலக்கப்பட்டவளாகவும் இழிபிறப்பாகவும் கருதப்பட்டிருக்கிறாள்.*[21]

மேலும்,

*பெண்களுக்கு விவாகமே உபநயனமாகும்; கணவனுக்குப் பணி புரிந்திருத்தலே அவர்களது குருகுலவாசமெனப் படும்; இல்லத்தைக் காத்து நடத்துதலே அவர்களுக்குச் சமிதா தானமாகும். வேதகோஷங்கள் இல்லாத வேள்வியிலும், பெண்களோ பேடிகளோ இயற்றும் ஒன்றிலும் அந்தணர் புசித்தல் ஆகாது*[22]

என்று பெண்பிறப்பை இழிவாகக் கருதும்போக்கு இந்திய சமயங்களில் அமைந்துவிட்டது. நமது புராணங்களிலும், இதிகாசங்களிலும்,

காவியங்களிலும் தெய்வநிலையில் வைத்துப் பேசப்பட்ட பெண்ணின் தெய்வீக நிலை நடைமுறையில் மண்ணுக்குள் தள்ளப்பட்டது.

*சமூகச் சீர்திருத்தம் செய்யப் புகுந்த பிரம்மசமாஜம் பெண்களின் முன்னேற்றத்திற்கும், இழைக்கப்பட்ட தீமைகளை எதிர்த்தும், குழந்தை மணத்தை எதிர்த்தும், சொத்துரிமையை வலியுறுத்தியது. அதோடு பலதார மணத்தை எதிர்த்து, கொடிய சதி வழக்கத்தை அழிக்க முயன்றது.*[23]

இத்தகைய நிலையிலிருந்து விடுபடப் பெண்களுக்கும், நசுக்கப்பட்ட மக்களுக்கும் கல்வி ஒன்றே சரியானவழி என்று பல கல்விக்கூடங்களை நிறுவியது. இப்படி படிப்படியாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியப் பெண்ணியம் எழுச்சியுற்றது.

*மாறி அமைந்த பொருளாதார அமைப்பு, இந்தியர்களின் ஆங்கிலக் கல்வியறிவு, மேலைநாட்டுப் பெண்ணிய இயக்கங்களின் வெற்றி, கிருத்துவ மதம் மற்றும் பாதிரிகளின் தூண்டல், இந்து சமயத்தையும் சமூகத்தையும் சீர்திருத்தியமைக்க வேண்டும் என்ற இந்திய அறிஞர்களின் ஆர்வம், காலப்போக்கில் இந்தியர்களிடம் தோன்றிய சிந்தனை வளர்ச்சி போன்ற காரணங்களாலும், தேவைகளாலும் இந்தியப் பெண்ணியம் எழுச்சியுற்றது*[24]

என்று கூறலாம்.

சமணசமயம் தொடங்கிவைத்த, செம்பாதி மக்களைப் புறக்கணிக்கும் இப்பெண்ணழிவுக் கோட்பாட்டிற்கு ஊற்றுக்கண் எப்படி, எங்கே, எப்போது தொடங்கியது என்பதற்குத் தமிழ் இலக்கிய வரலாற்றைப் பின்னோக்கிப் பார்த்ததில், பின்வரும் சான்றுகள் கிடைத்தன. தொல்காப்பியத்தில்,

1. ஆணின் குணங்களாகப் பெருமையும் உரனும், பெண்ணின் குணங்களாக அச்சம், நாணம், மடம் ஆகியன களவியலில் காட்டப்பட்டுள்ளன.

2. பால் பற்றிய கருத்துக்களை, நிரல்பட அமைக்கும் வாய்ப்பு நேரும்போதெல்லாம், ஆண்பால் தொடர்பானவற்றை முதலிலும், பெண்பாலைப் பின்னிடத்திலும் வைத்து மொழிகிறார்.

3. வாழ்வில், ஆண் தன் உணர்வுகளை வெளிப்படப் புலப்படுத்தவும்; பெண் புலப்படுத்தலாகாது என்றும் கூறுகிறார். அறத்தொடுநிற்றல்

என்ற குறிப்புரை வழியில்தான் பெண் தன் விருப்பத்தைப் புலப்படுத்த வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

4. உயிர் சிறந்தது; உயிரைவிட நாணம் சிறந்தது; நாணத்தைவிடக் கற்பு சிறந்தது என்று பெண் கற்பை மட்டும் வற்புறுத்துகிறார். 'ஆண் கற்பை' வற்புறுத்தவில்லை.

5. ஆண், பலரை மணந்து கொள்வதை உடன்படுகிறார்.

6. பெண்ணின் கடமையாக விருந்து புரத்தலையும், சுற்றம் ஓம்புதலையும் சுட்டுகிறார்.

7. பொருள்வயின் பிரியும்பொழுது பெண்டிரை விலக்குகிறார். எதிர்நோக்கிய பிரிவு என்றாலும், ஆண்கள் கடல்கடந்து செல்லும்போதும் தம் மனைவியரை உடனழைத்துச் செல்ல லாகாது என்கிறார். மேற்கண்ட செய்திகளால் தொல்காப்பியர் காலத்திலேயே பெண்களுக்குச் சமஉரிமை அளிக்கப்படவில்லை என்று அறியலாம்.

மருதத்திணைப் பாடல்கள், திணைப்பாகுபாடுகள் ஆகியன பெண்கள் பெற்றிருந்த பின்நிலைமையைப் பிரதிபலிக்கின்றன. கொழுநனைப் பேணுதல் வேண்டும், இல்லம் தேடிவரும் விருந்தினரை ஓம்புதல் வேண்டும் ஆகியனவும்; இற்செறிப்புக் கோட்பாடும்; திருமணத்தில் பெற்றோர் இடையீடு ஆகியனவும் கூறப்படுகின்றன.

*வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல் மனையுறை*
*மகளிர்க்கு ஆடவர் உயிர்*[25]

என்ற குறுந்தொகைப் பாடல் அக்காலப் பெண்களின் நிலையைச் சரியாகப் படம்பிடித்துக் காட்டுகிறது. ஆண்கள் வெளிவேலைக்குச் செல்வதற்கு உரியர்; பெண்கள் வீட்டு வேலை செய்தற்கு உரியர். ஆண்களுக்கு வேலை உயிர்போன்றது; பெண்களுக்கு ஆண்கள் உயிர் போன்றவர் என்று வரையறுக்கிறது. சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள கைம்பெண் நோன்பு பற்றிய குறிப்புகள், கணவன் இறந்தால் உடன்கட்டையேறி, இறந்துபடுவதே சிறந்தது; அதுவே முதற்கற்பு என்ற கோட்பாடுகள் பெண்ணினத்தின் இரண்டாம் நிலையைப் புலப்படுத்தும்.

*சங்ககால மக்கள் பின்பற்றி வந்த சில மரபுகளை வேண்டாதன என்று துணிந்து கூறியவர் திருவள்ளுவர். பலதார மணத்தையும், பரத்தையர் உறவையும் மருதத் திணைப் பிரிவையும் உடன்படாது, பெண்ணிழிவு போக்கிற்கு எதிராகக் குரல் கொடுத்தார். தம்முடைய திருக்குறளில் பலதாரமணத்தையோ பரத்தையர் பிரிவையோ உறவையோ உடன்பட்டாரில்லை.*[26]

'மனையுறை மகளிர்' என்ற அளவில், இல்லத்தில் ஒதுக்கப்பட்ட மனைவியை *"வாழ்க்கைத் துணைநலம்"*[27] என்ற மகுடமிட்டு அழைத்தார். எனினும், *"தந்தை மகற்காற்றும் நன்றி"*[28] எனவும் *"மகன் தந்தைக் காற்றும் உதவி"*[29] எனவும் *"தன் மகனைச் சான்றோன்"*[30] எனவும் ஆண்மகனைக் குறித்தவர் பெண்மகளைக் குறிக்காததின் காரணம் புரியவில்லை. *"பெண்வழிச் சேறல்"*[31] அதிகாரத்தை வகுத்து, பெண்களின் சொற்களைச் கேட்கவேண்டாம் என்று குரலெழுப்புவது எதற்கென்ற எண்ணம் எழுகிறது. இருப்பினும் பதினெண்கீழ்க்கணக்கின் ஏனைய நீதி இலக்கியங்களில் ஓங்கிப்பேசப்பட்ட அளவிற்குப் பெண்ணடிமைக் கருத்துக்கள், வள்ளுவத்திலில்லை.

**4. தமிழ் இலக்கியங்களில் பெண்ணுயர்வும் தாய்த்தலைமையும்**

தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர் வந்த சங்க காலத்தில், ஆண்களைப் போல் பெண்களும் உரிமை வாழ்வு பெற்றிருந்தனர். குறுந்தொகையின் 'யாயும் ஞாயும் யாராகியரோ' பாடல், தனக்குரிய கணவனைத் தெரிவுசெய்வதில், பெண்களுக்கிருந்த உரிமையைக் காட்டுகிறது. களவியல் இலக்கண அமைப்பும், குறிஞ்சித் திணைப்பாடல் களும், தமக்குரிய மணவாழ்வை முடிவு செய்வதில் சங்ககாலப் பெண்களுக்கு இருந்த சமஉரிமையைத் (உடன் போக்கு) தெளிவுபடுத்து கின்றன. சங்ககாலப் பெண்பாற் புலவர்களான ஔவையார், நச்செள்ளையார், வெள்ளிவீதியார், முடத்தாமக்கண்ணியார் ஆகியோரின் படைப்புகள், பெண்கள் சங்ககாலத்தில் சிறந்த கல்வியறிவும் முதன்மையும் பெற்றிருந்தனர் என்பதைக் காட்டுகின்றன. பண்டைய தமிழகத்தில்,

> *மகளுக்கு மணம் முடித்து வைப்பதில் தாய்க்கு முன்னுரிமை அளிக்கப்பட்டிருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. சங்க காலத்தில் கூட்டுக்குடும்பமுறை இல்லாமல் பெண் தனியே குடித்தனம் நடத்தி இருப்பதும் எண்ணத்தக்கது.*[32]

தலைமகன், தலைவன், கிழவோன் என்ற சொற்களுக்குச் சமமானவைகளாகத் தலைமகள், தலைவி, கிழத்தி என்று சுட்டப்பட்டிருக்கிறது. கணவனை முன்னிறுத்தி மனைவியைச் சுட்டிக்காட்டும் பிற்கால மரபிற்குமாறாக, மனைவியை முன்னிறுத்திக் கணவன் சுட்டப்பட்டமை எண்ணத்தக்கது. புறநானூற்றில் செயிர்த்தீர் *"கற்பின் சேயிழை கணவ"*[33] என்றும், பதிற்றுப்பத்தில் *"சேணாறு நறுநுதல் சேயிழைகணவ"*[34] என்றும், *"புரையோள் கணவ"*[35] என்றும், புறநானூற்றில் மனைக்கு விளக்காகிய *"வாள்நுதல் கணவ"*[36] என்றும் பெண்களை முதன்மைப்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது. மனித

நாகரிகத்தின் வரலாற்றில் அரசுகள் தோன்றுவதற்குமுன் ஆண் பெண் வேறுபாடுடின்றி மக்கள் குழுக்களாக வாழ்ந்த காலத்தில் பெண்ணே தலைமை பெற்று விளங்கினாள். போர், வேட்டையாடுதல், சேகரித்த உணவைப் பங்கீடு செய்தல், குழந்தைகளைப் பெற்று வளர்த்தல் முதலிய அனைத்துச் சமூகப் பணிகளுக்கும் தாய் தலைமை ஏற்று நடத்தினாள்.

எனவே,

> *சங்க இலக்கியக்கால மரபைச் சங்க இலக்கிய முற்கால மரபென்றும், பிற்கால மரபு என்றும் பிரித்துக்கொள்ளலாம். முற்கால மரபு பெண் உரிமையைப் போற்றிய மரபென்றும், பிற்கால மரபு பெண் உரிமையை நெகிழச்செய்த மரபென்றும் கொள்ளலாம்*[37]

என்று க.ப.அறவாணன் கூறுவதை இங்கு ஒப்புநோக்கலாம். அறிஞர் பிரடெரிக் எங்கெல்ஸ் தம்முடைய 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' என்ற நூலில் மோர்கன் (Morgon), பேக்கோபென் (Bachofen) ஆகிய இரு அறிஞர்களின் மானுடவியல் கண்டுபிடிப்பை அடித்தளமாகக் கொண்டு, மனிதகுல வரலாற்றின் தொடக்கத்தில் பெண் எய்தியிருந்த முதன்மையை விளக்குகிறார். காட்டுமிராண்டிக் காலத்தில் ஆண்களும் பெண்களும் விலங்குகளைப் போல ஒழுகிய காலம்; பின்னர் ஆண்கள் ஒரு குழுவாகவும் பெண்கள் ஒரு குழுவாகவும் இருந்து வாழ்ந்த காலம்; பூனலூவா குடும்பமுறை, இணைக்குடும்ப முறை ஆகியவை படிப்படியாக உருவம் பெற்றன என எடுத்துரைக்கிறார்.

> *மற்றைய உயிர்களின் வளர்ப்புக்காலத்தைவிட மனிதக் குழந்தையின் வளர்ப்புக்காலம் கூடுதல் ஆகும். சில வாரங்களில் பறவைக் குஞ்சு பறக்கக் கற்றுவிடுகிறது. சிலநாட்களில் மீன்குஞ்சு நீந்தக் கற்றுவிடுகிறது. ஆயின் மனிதக்குழந்தை ஓரளவு நினைவு தெரிய 48 மாதங்கள் அதாவது நான்கு ஆண்டுகள் ஆகின்றன. இக்கால இடைவெளியில், குழந்தை தாயைவிட்டுப் பிரிவது இல்லை. சுமப்பதிலோ, ஈன்றெடுப்பதிலோ, வளர்ப்பதிலோ அந்தக்காலத்தில் தந்தைக்குப் பங்கு இல்லை. எனவே, தாய்வழியாகவே மக்கள் அடையாளம் காட்டப் பெற்றனர்*[38]

என்று தாயம்மாள் அறவாணன் கூறுகிறார். மனித வாழ்விற்கு ஓர் பிணைப்பினையும், சுவையினையும் தருகின்ற வற்றாத நதியாக என்றைக்கும் பெண்ணினம் உள்ளதைக் கவிஞர் குலோத்துங்கன்,

> *வாழ்வின் சுவையெல்லாம் ஏந்திய உருவம்* (ப. 423)

என்று உயர்வு செய்கிறார். எனவே, மானிடத்தின் இயல்பான, பிறப்பு வளர்ப்பே பெண்ணுக்கு முதன்மையை இயற்கையே அளித்ததால், உலகின் பெரும் பகுதிகளில் தாய்த்தலைமை ஆதியானதாகக் கருதப் படுகிறது. தமிழகத்திலும் தாய்த்தலைமை இருந்தமையைக் கீழ்க்கண்ட கருத்துக்கள் மெய்ப்பிக்கின்றன. அவை வருமாறு:

1. தாய் எனப்பொருள்படும் அம்மன் கோவில்கள் மிகுதியாக இருத்தலும், மக்களால் மிகுதியாக வழிபடப் பெறுதலும்,

2. தமிழகத்தில் தாய்வழிப் பெண்ணுக்கே சொத்துரிமை இருந்ததைக் குமரிமாவட்டப் பழைய சேரநாடான கேரளம், தென்கருநாடகம், ஆகிய பகுதிகளிலிருந்த 'மருமக்கள் தாயமுறை' நிலை நிறுத்தலும்,

3. மேற்கண்ட பகுதிகளில், குழந்தைகளுக்கு முன் எழுத்தாகத் தந்தை பெயர் அமைக்கப்பெறாமல் தாயின் பெயரை அமைக்கப்பட்டமையும்,

4. திருமணத்தின்போது மாப்பிள்ளையைப்பார்க்க முதலில் பெண்வீட்டார் செல்லாது, மாப்பிள்ளைவீட்டாரே பெண்வீட்டிற்கு வந்து பெண்கேட்கவேண்டும் என்ற மரபு போற்றப்படுதலும்,

5. திருமணத்திற்குப்பின் வளைகாப்பு, குழந்தைப்பேறு, தலைப்பொங்கல் எனத் தொடர்ந்து பெண்ணுக்கு அனுப்பப் பெறும் சீர்வரிசை ஆகியன, பெண்ணுக்குத் தாய் வீட்டில் இருக்கும் உரிமையைப் புலப்படுத்துவதும்,

6. தாய்க்கு முதன்மை தரும் இலக்கியக் குறிப்புகள், வழக்காறுகள் முதலியன, தமிழரைப் பொறுத்தவரை தாய் அல்லது பெண்ணே முதன்மை எய்தியிருந்தாள் என்பதை நிறுவுவனவாகும்.

### 5. தாய்த்தலைமை சரிவு

தமிழர் மரபும் மதமும் பெண்ணை – அம்மனைப் போற்றும் மதமாகும். ஆயின், தமிழகத்துக்குள் வந்தவர்கள் அனைவரும் ஆண்தலைமை மக்களாவர். தமிழரிடம் தொடக்கத்தில் அறிமுகமாகி ஆதிக்கம் பெற்ற மதம், ஆரியரின் வேதமதமாகும். ஆரியர், தந்தைவழி முறையினர்; ஆண்தெய்வ வழிபாட்டினர். அவரிடமிருந்து தமிழ்த் தொல்குடியினர் ஆண்தெய்வ வழிபாட்டையும் ஆண்தலைமையையும் ஏற்கவேண்டிய கட்டாயம் படிப்படியாக நேர்ந்தது. பெண்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்ள ஏற்ற சட்டதிட்டங்களையும், சாத்திரங்களையும், கற்பு என்பதையும் படைத்துக் காலமெல்லாம் கணவனின் அடிமையாக வாழ வகைசெய்து கொண்டான்.

அயற்புலத்திலிருந்து வந்த ஆரியர், தங்களுடன் பெண்களை அழைத்துவரவில்லை என்பது கருதற்குரியது. ஆரியர், தமிழருடன் பல்வேறு காலகட்டங்களில் மோதியபோது, சில நேரங்களில் தமிழர் தோற்றனர். ஆரியர் போர் ஒழுக்கப்படி தோற்ற மக்களை அடிமையாகக் கொண்டனர். தோற்ற நாட்டுப் பெண்களைக் கவர்ந்து கொண்டனர். இதனால் ஆரியருக்கும் தமிழருக்கும் இடையில் இனக்கலப்பு நிகழ்ந்தது. அடிமைகொண்ட பெண்களை அடிமைகளாகவே குறித்தனர். எனவேதான் தாசர்களாகக் கருதப்பட்ட சூத்திரர்களுக்குச் சமமாகப் பெண்களை வைத்தனர். எனவே, தமிழகத்தில் பெண்ணுக்குரிய தலைமை போவதற்கு ஆரியக்கலப்பு தலைமையே காரணமாக இருந்தது.

அடுத்து, வைதீக மதத்தை எதிர்த்துப் பிற்காலத்தில் செல்வாக்குப் பெற்ற சமண சமயமும், ஓர் ஆண்வழிச் சமுதாயமாக அமைந்ததோடு, போர்ச்சமுதாய அமைப்பு ஆணுக்கு முதன்மை கொடுத்தது. வட இந்தியாவில் பிராமணப் புரோகிதத் தலைமையை எதிர்த்துச் சத்திரிய வம்சத்தவரான அரசகுலத்தார், சமண சமயத்தையும் புத்த சமயத்தையும் தோற்றுவித்தனர். இதனைச் சமண, புத்த சமய மூலவர்கள் அரசவம்சத்தைச் சார்ந்தவர்களாக இருப்பதே தெளிவுறுத்தும். எனவே, சமண சமயத்தில் ஆண் தலைமை இயல்பாயிற்று. கி.மு. நூற்றாண்டுகளில் அச்சமயம் தமிழகத்தில் பரவியபோது, தொடக்கத்தில் அரசர்களையும், பின்னர் வணிகர்களையும் தன்வயம் ஈர்த்துக் கொண்டது.

ஆக, தமிழர் வரலாற்றில், இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்ட பெண்களின் நிலையை ஆரியரின் வரவு மேலும் பின்னுக்குத் தள்ளியது. சமண மரபு மேலும் பின்னுக்குத் தள்ளியதோடு

> *சொத்துரிமை ஆணின் கைக்கு மாற்றமுற்றபோதே பெண்ணின் அடிமை வாழ்வுக்கு அடிப்படை அமைந்து விட்டது. பெண் பொருளாதாரச் சுதந்திரத்தைப் பறி கொடுத்தாள்; கணவனின் சொத்தாக அடிமையானாள்*[39]

என்ற ஏங்கல்ஸின் கருத்து முழுமையும் உண்மையானதே.

சமுதாயத்தின் இரு கண்களில் ஒன்று ஆண்; மற்றொன்று பெண். இரு கண்களும் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டியவை. அவ்வாறிருக்க, நாகரிகத்தின் உச்சியில் இன்றும் நாங்கள்தான் என்று கூறிக்கொள்ளும் நாடுகளிலும்கூடப் பெண்கள் சமமாக மதிக்கப் படுவதில்லை. இந்த இழிநிலையால் சமுதாயமுன்னேற்றம் அரிதாகவே அமைகிறது.

> *உன்கண்ணில் நீர்வழிந்தால் - எந்நெஞ்சில்*
> *உதிரம் கொட்டுதடி*[40]

எனப் பெண்களை உயர்வுபடுத்தி, பெண்ணடிமைக்குச் சம்மட்டியடி கொடுத்தார் பாரதி. இன்று பெண்களின் கண்களில் உதிரங்கொட்டச் செய்து, அதைப்பார்த்து ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறது ஆண் சமுதாயம்.

இன்றைக்குப் பெண்களைப் பொறுத்தவரை, சுதந்திர இந்தியாவில் அவர்களுக்கு முதலில் நலத்திட்டங்கள் (Welfare Schemes) வகுக்கப் பட்டன. அடுத்து, பெண்கள் மேம்பாட்டுத் திட்டங்கள் (Planning for Women's Development) அமைந்தன. மூன்றாவதாக பெண்களின் இறையாண்மை (Women Empowerment) என்ற நிலைக்கு வந்தமையால், இன்று அரசியலிலும் அரசுப் பதவிகளிலும் இடஒதுக்கீடு பற்றிப் பேசப்படுகிறது. அனைத்துப் பகுதிகளிலும் வாழும் பெண்களுக்கு அறிவியல் ரீதியிலான கருத்துக்களை உருவாக்கி; தத்துவரீதியிலான அணுகுமுறைகளைப் படைப்பது கல்விநிறுவனங்களாலும் சமுதாயத் தொண்டு அமைப்புகளாலும் மட்டுமே சாத்தியமாகி அதன்மூலம் சட்ட அமைப்பின் வரையறுக்கப்பட்ட தீர்வு கிடைக்கும்.

6. குலோத்துங்கன் படைப்பில் பெண்கள்

பெண்களைப் பாடாத கவிஞர்கள் மிகச் சிலர். அவர்களைப் பாடுவதில் கவிஞர்களுக்கு மகிழ்ச்சி. பெண்களைப் பாடவில்லை யென்றால் கவிதை நிறைவுறாது என்ற எண்ணம் கொண்டவர்கள் பலர். பெண், ஆணுக்கு எதிர்பாலினமாக இருப்பதால் இவை இயல்பும் கூட. சமுதாயச் சிந்தனைகளை முன்வைத்துள்ள திருவள்ளுவர் கூடப் பெண்களைப்பற்றிக் கூறும்போது,

*அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை*
*மாதர்கொல் மாலும்என் நெஞ்சு*[41]

என்கிறார். பெண்களின் அழகினைமட்டும் பாடி மனநிறைவுறும் சில கவிஞர்களைப் போலன்றி, குலோத்துங்கன் பெண்மையின் சிறப்பில் பெருமை கண்டவராகத் திகழ்கின்றார். அதனாலன்றோ,

*சிற்பி வடித்ததில்லை*
*சித்திரங்கள் கண்டதில்லை*
*கற்பனையின் எல்லை*
*கடந்த எழில் உருவே!* (ப. 424)

என்கிறார். பெண்களின் பேரழகைப் போன்று சிற்பி சிலையை வடித்தது இல்லை; இதுவரை சித்திரங்களும் வரையப்பட்டதில்லை என்று பாடுகிறார். இம்மட்டில் நின்றுவிடாது, பெண்ணழகு, எல்லை கடந்ததென்பதைக் கற்பனையின் எல்லை கடந்த எழிலுருவே என்கிறார். மேலும்,

*……… உலக னைத்தும்*
*ஒருயிராய்ச் சுருங்கிஉன துருவம் கொண்டு*
*வந்ததுவோ! ...* (ப. 429)

என்றும் கூறுகிறார். பெண்ணானவள் தன்னளவில் அழகுடையவள் மட்டுமன்று, வாழ்வின் சுவையனைத்தையும், படைப்பின் மாண்பு அனைத்தையும், சுருக்கியும் செறித்தும் உருவானவள் என்று கூறுவதிலிருந்து, மற்றவர்களிடமிருந்து கவிஞர் வேறுபடுவதைக் காணமுடிகிறது. தொடர்ந்து, பெண்ணை இறைவனுக்குமேல் ஒப்பிடுவதைக் காண்கிறோம்.

*ஈண்டுனக் குவமை தேடின்*
*இறைவனும் எளிய னம்மா!* (ப. 431)

பெண்ணை நோக்க, இறைவனும் எளியன் என்று ‘பெண் படைப்பை’ உயர்வாக அவர் கருதுவது வெளிப்படுகிறது. குலோத்துங்கன் கருத்துகளுக்கு அணிசேர்க்கும் வகையில்,

> *இயற்கையாகவே தமக்குள்ள அமைதி குணத்தை வளரச்செய்வது சிறந்ததாகும். மனமும் சொல்லும் செயலும் அமைதியாக நடைபெறும்படிப் பழகுவதே இதன் வழியாகும். செல்வத்தைப்பெற்று ஆடை அணிகலன்களை அணிந்து, வாழவேண்டும் என்பதையும், நுகரப்படு கின்ற பொருள்கள் மேலுள்ள அவாவைச் சுருக்குதலும் பெண்பாலார்க்குப் பெருஞ் சிறப்பாகும். பெரும்பாலும் பெண்மக்கள் நாம் தூய்க்கும் பொருள்களில் கிடைத்த மட்டில் மனஅமைதி பெறாமல் மேலும் அவற்றைப் பெறுதற்கும் நுகர்தற்கும் விருப்பம் உடையவர்களாய் இருத்தலும் தம்மொடு பிறந்தார்க்கும் தம்மைக் கொண்டார்க்கும் துன்பத்தையும் கவலையையும் வருவித்தலாலும், அவர்கள் அவ்விருப்பத்தைச் சுருக்கிக் கொள்ளுதல் வேண்டுமென்பதே ஔவைப் பிராட்டியார் கருத்தாகும்*[42]

என்னும் மறைமலையடிகளின் கருத்து சிந்திக்கவேண்டியதாகும். ஒரு சமுதாய வளர்ச்சிக்கும், தேசிய முன்னேற்றத்திற்கும், அன்பில், புரிதலுணர்வில், நம்பிக்கையில், வலிமை வாய்ந்த குடும்ப அமைப்பு தேவை. அக்குடும்ப அமைப்புகள் சரியாக இல்லாவிடில், தேசம் முன்னேற்றமடைவதில் தடைகள் ஏற்படும். நல்ல குடும்ப அமைப்பைப்பற்றிப் பாரதிதாசன் கூறியுள்ள கருத்துக்கள் இங்கு நினைக்கத்தக்கதாகும். வீடும் நாடும் உலகும் உயர்ந்து விளங்க, பெண்கள் நல்லவர்களாக வல்லவர்களாக, பல துறையை அறிந்தவர்களாக இருக்க வேண்டும். இதனை,

*மகளிரெல்லாம் கல்வியறிவு ஒழுக்கம் உளராயின்*
*மருத்துவரே வேண்டாவாம்; பிணிமூப்பு வாரா;*
*மகளிரெல்லாம் அரசியலைக் கைப்பற்றி ஆண்டால்*
*மாநிலத்தில் போரில்லை; சாக்காடும் இல்லை;*
*தொல்லையிலா அவ்வுலகம் யான்வாழும் இல்லம்*
*பகையில்லை, அங்கு இன்மை இல்லை, பிணி இல்லை*
*பழியில்லை, என்துணைவி அரசாண்டதாலே*[43]

என்கிறார். மேலும், 'நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்' என்று கூறுவதற்குப் பெண்களே மூலமாகும். பெண்ணால் மட்டுமே குடும்பத்தில் பல்கலைகளைக் கற்ற நன்மக்களை உருவாக்க முடியும். அக்குடும்பம் பெறுகின்றவற்றுள் சிறந்தது 'மக்கட்பேறு' ஆகும். பெறு என்ற சொல்லின் முன்னிலை நீண்ட வடிவமே பேறு. இதனை,

*பெறுமவற்றுள் யாமறி வதில்லை யறிவறிந்த*
*மக்கட்பே றல்ல பிற*[44]

என்று திட்டமாக அறுதியிட்டுக் கூறுகிறார் திருவள்ளுவர். மங்கலஞ் சூழ்ந்த மனைமாட்சி என்பது நன்மக்கட் பேறு. மனையின் மணிவிளக்கே மக்கள்தான்; வாழ்வின் வளமும் நிறைவும் மக்களால்தான் உண்டாகும். உயர்தமிழுக்குப் புதுநெறி காட்டிய புலவன் பாரதியின் 'கண்ணம்மா என் குழந்தை' என்னும் பாட்டிலே இக்கருத்து தெளிவாகிறது.

*இன்பக் கதைகளெல்லாம் உன்னைப் போல்*
*ஏடுகள் சொல்வதுண்டோ?*
*அன்பு தருவதிலே - உனைநேர்*
*ஆகுமோர் தெய்வமுண்டோ?*
*மார்பிலணிவதற்கே - உன்னைப் போல்*
*வைர மணிகளுண்டோ?*
*சீர்பெற்று வாழ்வதற்கே உன்னைப்போல்*
*செல்வம் புரிவதுண்டோ?*[45]

என்று 'கண்ணம்மாவைச்' சீராட்டுகிறார். ஆண்டியிலிருந்து அரசன்வரை போகியிலிருந்து யோகிவரை அனைவரையும் தன்பால் ஈர்க்கும் இயல்புடையது குழந்தை. பற்றுகள் எல்லாவற்றையும் துறந்தவர்களும் குழந்தைபால் கொண்டிருக்கும் அன்பினைத் துறப்பது மிகவும் கடினமானதொரு செயலாகும். கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டியன் அறிவுடைநம்பி என்னும் திருவுடைய அரசன், குழந்தைகளற்றோர் வாழ்வு குறையுடைய வாழ்வு, பயனற்ற வாழ்வு என்று குழந்தைச் செல்வத்தின் சிறப்பை,

*படைப்புப் பல படைத்துப் பலரோடுண்ணும்*
*உடைப் பெருஞ் செல்வராயினும் இடைப்படக்*

*குறுகுறுநடந்து சிறுகை நீட்டி*
*இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்*
*நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை; யில்லோர்க்குப்*
*பயக்குறை யில்லைத்தாம் வாழும் நாளே*[46]

எனப் பறைசாற்றுகிறார். இவ்வுலகம் பல ஏற்றத்தாழ்வுகளையும் வேறுபாடு களையும், உயர்வு தாழ்வையும் வரலாற்றுக் காலந்தொட்டுக் கொண்டிருக்கிறது; இன்றும் நிலைத்துநின்று பல துறைகளிலும் பரவி ஆட்சிசெய்கிறது. இவை நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம் மாறுபடலாம். ஆனால், வேறுபாடுகளின்றி எங்கும் எல்லாச் சூழ்நிலைகளிலும் இரண்டாந்தர குடிமக்களாக ஏவல் செய்பவர்கள் பெண்ணினத்தார் மட்டுமே. இதனைக் குலோத்துங்கன்,

*அடிமையிலும் அடிமையென மகளிர் வாழ்க்கை*
*அமைத்திருந்த சின்னங்கள் அழிந்த தில்லை* (ப. 463)

*உரிமை இலர்; இல்லையெனும் உணர்வும் இல்லார்;*
*உடமை இலர்; உடமையென உலகில் வாழ்வார்* (ப. 463)

என்று பெண்களின் பரிதாப நிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறார். மனித இனம் மேற்கொண்ட இயற்கையை மீறிய செயல்முறைகள் மனித இனத்துக்குப் பெருமளவு ஆக்கத்தைக் கொடுத்தன. ஆனால் ஆண்பெண் பற்றிய நிலையில் ஒரே கருத்தானது பல ஆண்டுகளாக நிலைபெற்றுவிட்டது. இத்தகைய கருத்துக்கள் பெண்ணை அடிமைப படுத்தும் நோக்கம் கொண்டது. பெண்கள் மனித சமுதாயத்தில் சம எண்ணிக்கை கொண்டவர்கள். இரண்டொரு உறுப்பில் மாற்றமல்லாமல் மற்றபடி

*பெண்கள் மனித சமுதாயத்தில் ஆண்களுக்கு முழு ஒப்படைப்பும் உவமையும் கொண்டவர்கள் ஆவார்கள். பெண்ணினம் அடிமைத் தனத்திலிருந்து விடுபட வேண்டும். மனிதன் மிருகப் பிராயத்திலிருந்தபோது, காட்டுமிராண்டியாக இருந்த காலத்தில், மனிதன் தன் மூர்க்கத் -தனத்தைக்காட்ட, பெண்ணை அடக்கியாள பெண்ணைத் தனக்கு அடிமையாக்கிக்கொள்ள, ஏற்பாடு செய்யப்பட்டதுதான் இந்தக் கலியாணம்*[47]

என்ற தந்தை பெரியாரின் கருத்து சிந்திக்கக்கூடிய ஒன்றாகும்.

தனிப்பட்ட முறையில் சகோதரியாக, தாயாக மதிக்கப் படுகிறார்கள். ஆனால் பொதுவாகப் பெண்களென வருமிடத்து, இப்

பாசமும் மரியாதையும் காதலும் இடம்பெயர்ந்துவிடுகின்றன. இந்நிலை மாறி முழுமையான பெண்ணியச் சுதந்திரம் பெற,

*"தாலிகட்டும் திருமணமுறையைக் கிரிமினலாக்க வேண்டும்,"*[48]

*"சுயமரியாதை மணமுறை,"*[49]

*"மறுமணம் ஆதரவு,"*[50]

*"விதவை மணம் ஊக்குவிப்பு,"*[51]

*"குழந்தை மணம் அழிப்பு,"*[52]

*"காதல் சுதந்திரம்,"*[53]

போன்ற தலைப்புகளில் பெண் விடுதலைக்கான கருத்துக்களைப் பெரியார் கூறுகிறார். ஆனால் இன்றைக்குப் பெண்ணினத்தின் இந்நிலை, இடத்தையும் மொழியையும் கடந்து, நிலைபெற்ற ஒன்றாகவே உள்ளதை,

*மானுடத்திற் பாதியினர் முழுமை பெற்று*
*வளர்கின்ற, மலர்கின்ற வாய்ப்பே இன்றி*
*ஊனுடலின் தேவைகளின் அளவில், ஆணின்*
*உணர்வுகளின் அடிப்படையில் உயிர்வ ளர்க்கும்*
*கொடுமையிலும் கொடிய திலை, ஒப்பு நோக்கிக்*
*கூறமறு செய்தியிலை; உயர்க்கு லங்கள்*
*படுதுயர்கள் வரும் போகும் மாறும்; மாறாப்*
*பழங்கதை நம் பெண்ணுலகம்; பாவ மம்மா! (ப. 462)*

என்று குலோத்துங்கன் தனது எண்ணத்தை வெளியிடுகிறார். வரலாற்றுக் காலத்தொடக்கம் முதல் சமூகத்தில் ஆணாதிக்கமே நிலவி வந்தது.

*குடும்பம், சொத்துரிமை, திருமணம், பெண்ணின் கற்பு, ஒழுக்கம், அரசியல் முதலிய எல்லாத்துறைகளிலும் ஆணாதிக்கம் நிலவியது.*[54]

இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டிலும் பெண்கள் சுதந்திரம் பெற்றதாகக் கருதப்படும் பகுதிகளில் கூட, சமத்துவம் சுதந்திரம் என்ற பண்புகளின் ஆத்மாவை, அறியாத, மேலெழுந்த வாரியான நிலை காணப்படுவதைக் குலோத்துங்கன்,

*தங்கள் இயல்போடு*
*தாரணியை ஆள்வதும்*
*எங்கள் உரிமையெனும்*
*ஏற்றம் விழையாமல்*
*அறிவுத் துறையனைத்தும்*
*ஆதிக்கம் செய்கின்ற*

*நெறியில் மனத்தை*
*நிறுத்தாமல், சிந்தனையின்*
*நுட்பும், நுழைவுகளும்,*
*நூல்படைக்கும் மேதையெனும்*
*பெட்பும் நிறைந்தமெனும்*
*பெருமைகளை நாடாமல்.........*
*....................................*
*சுதந்திரத்தை நெஞ்சத்தில்*
*துய்ப்பதுவே மானிடர்க்கு*
*இதந்தருவ தென்கின்ற*
*ஏற்றம் நினையாமல்* (பக். 459 – 460)

எனக் குறிப்படுகிறார்.

தோற்றத்திலும், நடை உடைகளிலும் ஆண்களோடு போட்டியிடும் ஆசைநிலைதான் பெண்ணுரிமை என்ற பெயரில், மேலோங்கி நிற்கிறது. இதனைக் குலோத்துங்கன்,

*ஆண்களொடு போட்டியிட*
*அரிவையர்கள் பண்பாட்டின்*
*தூண்களெனும் தம்பெருமை*
*தோற்கமனம் கொண்டுவிட்டார்*
*புகைபிடித்தல் கற்றார்கள் ;*
*புருடருக்கு நேராகச்*
*சிகைமுடித்துக் கொண்டார்கள் ;*
*தெருவில் உலவுகையில்*
*மங்கையெனத் தோன்றுதற்கு*
*மனமிலராய் , ஆடவர்போல்*
*அங்கிகளும், கால்நுழையும்*
*ஆடைகளும் பூண்டார்கள் ;*
*போதை, மயக்கப்*
*பொருள்களிலே தம்உரிமைப்*
*பாதை இருப்பதுபோல்*
*பயணம் தொடர்ந்தார்கள்* (பக். 460 –461)

என வேதனையுடன் வெளிப்படுத்துகிறார். பெண்கள் தங்களுடைய தாழ்வு நீங்கவும், சமத்துவம் பெறவும், பூட்டப்பட்ட விலங்குகள் விலகவும், விடுதலை பெறவும், தங்களுடைய உரிமையை நிலைநாட்டச் சோர்ந்துவிடவில்லை. ஆண் சமுதாயத்திடம் விடுதலை வேண்டுமென்று கேட்டவில்லை. ஏனெனில் விடுதலையும் சமத்துவமும் கேட்டுப்பெறுவன அல்ல. ஆண்கள் கொடுக்கப் பெண்கள் பெறுவதற்கு அதுவொன்றும்

ஆணுலகின் உடைமையுமல்ல என்று உறுதிபடக் கூறுவதைக் கீழ்க்கண்ட வரிகள் உணர்த்தும்.

*……… கொடுத்தும், பெற்றும்*
*உரிமைகளும், சமத்துவமும் உதித்த தில்லை.*
*கெஞ்சுவதால் வருவதிலை; உரிமை தன்னைக்*
*கேட்டெவரும் பெற்றதிலை …..* (ப. 464)

எனவே, பெண்கள் கிளர்ந்தெழுந்து சுதந்திரம், சமத்துவம் ஆகியவற்றுக்குச் சமுதாயநீதி, பொருளாதார வலிமை ஆகியவற்றைத் துணையாகக் கொள்ளவேண்டும். அதோடு இவைமட்டுமே சுதந்திரத்தையோ சமத்துவத்தையோ உருவாக்கி விடுவதில்லை.

*உலகின் முதல் பிரபுத்துவச் சுரண்டல் என்பது, பெண்ணினத்தின் மீது ஆணினம் நடத்தத் தொடங்கியதுதான் என்பது பிரெடரிக் ஏங்கல்ஸின் கருத்து. தந்தைவழிச் சமூகம் தலையெடுக்கத் தொடங்கிய நாள் முதலே, பெண்ணின் மனவலிமையைத் துடைத் தெறிந்து, அவளைப் பாலியல் பிண்டமாக்கி, சாஸ்திரம், புராணம், இதிகாசம், ஸ்மிருதிகள், பழமொழிகள், இலக்கணங்கள் என அனைத்து வழிகளிலும் அதன் செயல்களை இன்றுவரை சுவைத்துத் துய்த்து வருகிறது ஆணினம்''*[55]

என்ற உண்மையை மாற்றினால்தான் சுதந்திரம் கிடைக்கும். சுதந்திரம் சமத்துவம் என்பன ஒரு மனநிலை; அறிவுநிலை; அவை உள்ளத்தில் வளர்ந்து உயர்ந்து நிற்றல் வேண்டுமென்பதை எந்நிலையிலும் மறந்துவிடக்கூடாது.

சென்ற நூற்றாண்டில், உலகமுழுவதும் பெண்களின் நிலைபற்றிய ஆய்வுகளும் விவாதங்களும் முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தன. இனம், மொழி, சாதி அனைத்தையும் கடந்து, நலிந்த இனமாகப் பெண்கள் இருந்தார்கள். முன்னேறிய நாடுகளுக்கும்கூட இது பொருந்துமென்பதை,

*பிறந்தஉயிர் பெண்ணாயின், பல தேயத்தில்*
*பெருமூச்சே வரவேற்பாய்ப் பெறுவ துண்டு.*
*பறந்தனவும், ஊர்ந்தனவும் கூடத் தம்மைப்*
*பயந்தகுலம் தாழ்ந்ததெனப் பார்ப்ப தில்லை* (ப. 462)

*படிமைகளாய், நுகர்பொருளாய், ஆண்கள் வாழ்வில்*
*பகடைகளாய் வாழ்ந்ததெலாம் பழமை அன்று;*
*திருமணத்தில் விலைபேசும் சிறுமை கூடத்*

*தீர்ந்ததிலை; சீதனத்தின் கொடுமையின் கீழ்*
*பொருமுவதும், பொங்குவதும் தீவாய்ப் பட்டுப்*
*பொசுங்குவதும் தொடர்கதையாய்ப் போன தம்மா!*
*'சதி' இன்னும் வாழ்கிறது; பெண்ணை வைத்துச்*
*சந்தைபல நடக்கிறது; 'விதவை' என்னும்*
*விதி இன்னும் தொடர்கிறது; பெண்கள் வாழ்வில்*
*விடுதலைஎன் றுரைப்பதெலாம் வேட மன்றோ?* (ப. 463)

என்ற குலோத்துங்கனது கேள்விகள் உலகம் முழுவதும் இன்று கேட்கப்படுகின்றன. இதைப்பற்றிச் சிந்திப்பது அரசியல்வாதிகளின் கடமை மட்டுமன்று; அறிஞர்களின் - ஆய்வாளர்களின் பொறுப்புமாகும்.

7. பெண்களின் முன்னேற்றப்படிகள்

'ஆண்மை' என்ற பதமே பெண்களை இழிவுபடுத்தும் முறையில் உலகவழக்கில் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றது என்பதைப் பெண்கள் மறந்துவிடக்கூடாது.

*உலகத்தில் 'ஆண்மை' இருக்கும் வரையிலும் பெண்கள்*
*அடிமைத்தனம் வளர்ந்தே வரும்*[56]

என்பதை யாரும் மறுக்க முடியாது. நாளடைவில் வளர்ந்த பகுத்தறிவுச் சிந்தனையின் பரிணாம வளர்ச்சியாய்ப் பெண்களுக்கான சட்ட ரீதியான பாதுகாப்பு தேவை என்பதைச் சிந்தனையாளர்களும் வலியுறுத்தினர்.

*பெண் மக்களை இன்று ஆண்கள் நடத்தும் மாதிரியானது, மேல்சாதிக்காரன் கீழ்சாதிக்காரனை நடத்துவதைவிட; பணக்காரன் ஏழையை நடத்துவதைவிட, எசமான் அடிமையை நடத்துவதைவிட மோசமானதாகும். அவர்கள் எல்லாம் இருவருக்கும் சம்பந்தம் ஏற்படும் சமயங்களில் தாழ்மையாய் நடத்துகிறார்கள். ஆனால் ஆண்களோ, பெண்களைப் பிறவி முதல் சாவுவரை அடிமையாகவும் கொடுமையாகவும் நடத்துகிறார்கள்.*[57]

என்ற தந்தை பெரியாரின் வேதனைக்கு விடிவு ஏற்பட வேண்டும். பெண்களின் மேன்மையைப் புரிந்துகொள்ள முடியாத மூடர்கள் செய்யும் கொடுமைகளிலிருந்து, அவர்களைப் பாதுகாப்பதற்கென்றே பலவித அரசியல் சட்டங்களை உள்ளடக்கி யிருக்கிறது இந்திய அரசியல் அமைப்பு. ஆண்களைவிடப் பெண்களை அதிகமாகக் கொண்ட இந்தியாவில் மாநிலங்களின் சட்டசபைகளிலும், மக்களவையிலும் இதுபோன்ற மக்கள் பிரதிநிதிகளமைப்புகளிலும் பெண்களின்பங்கு மிகவும் குறைவுதான்.

அதிகாரப்பரவல் பெண்சமுதாயத்தை எட்டியுள்ளது என்று கொள்ள வேண்டுமானால், குறைந்தது 40 சதவிகிதம் பெண்களாவது கொள்கைமுடிவுகள் எடுக்கும் நிறுவனங்களில் அல்லது அமைப்புகளில் இருக்கவேண்டும்.

*உலகில் இன்று 5 நாடுகளில்தான் பெண்கள் 30 சதவிகித இடங்களில் அங்கம் வகிக்கிறார்கள். 31 நாடுகளில் 5 சதவிகிதத்திற்கு குறையான இடங்களைப் பெற்றிருக்கிறார்கள்*[58]

என்ற செய்தி மேற்கண்ட கருத்தை நிலைநிறுத்துகிறது.

இந்திய அரசியலமைப்பில், 1992இல் செய்த மாற்றத்தின் அடிப்படையில் உள்ளாட்சித் தேர்தல்களில், பெண்களுக்கு மூன்றில் ஒரு பங்கு (1/3) இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதுபோன்று, மாநிலச் சட்டசபைகளிலும், மக்களவையிலும் மூன்றில் ஒரு பங்கு இடமொதுக்க வேண்டும் என்ற கோரிக்கை சட்டமாகும் நிலை வலுவடைந்து வருகிறது.

*அரசின் நிர்வாகம் மற்றும் மேலாண்மைப் பதவிகளில் உலக அளவில், பெண்களின் பங்கு 14 சதவிகிதம். முன்னேறிய நாடுகளில் 27.7 சதவிகிதமாகும். கிழக்கு ஆசிய நாடுகளில் இது 11.3 சதவிகிதம்; தெற்காசிய நாடுகளில் 3.1 சதவிகிதம்*[59]

மட்டுமே உள்ளது என்ற செய்தி கவலைக்குரியதாகும்.

ஆண், அரசியலில் நுழைந்தால், அதன் பலன் அவனைச் சுற்றியே அமையும். ஆனால், ஒரு பெண் படித்தாலோ, அரசியல்வாதி யானாலோ அவளது குழந்தைகள், குடும்பம், அவள் சார்ந்த சமுதாயமென விரிந்து முன்னேறும். காந்தி அகிம்சாவாதியாவதற்குத் தென்ஆப்பிரிக்காவில் வள்ளியம்மை என்ற தோட்டத்தொழிலாளி காரணமாக இருந்ததுடன், முதலாளிகளுக்கு எதிராக அப்பெண் பயன்படுத்திய அகிம்சை என்ற ஆயுதத்தையே ஆங்கிலேயருக்கு எதிராகக் காந்தி பயன்படுத்தினார். எனவே, பெண்கள் தங்கள் சுதந்திரத்திற்குப் பாடுபடுவதென்பது ஒவ்வொரு பெண்ணின் சிந்தனையையும், அறிவுத்தெளிவையும் பொறுத்து அமைகிறது. இத்தகைய வளர்ச்சியால்

*சமுதாயத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் 'இரட்டை அளவு கோல்கள்' இருந்திருக்கின்றன. இன்றைக்கும் இருக்கின்றன*[60]

என்ற கோட்பாட்டை உடைத்தெறிய முடியும். மதுரை அருகே ஒரு கிராமத்தில் பிறந்து தனது சிறப்பான சேவையின் மூலம் சிறப்பு நிலை

எய்திய சின்னப் பிள்ளை போன்றவர்கள்தான் பாரதப் பெண் விடுதலையின் கௌரவச் சின்னங்கள்.

> *ஆடைக்குறைப்பு அலங்காரங்களும் அழகிப் போட்டி களிலும் பவனி வந்து பத்திரிகைகளில் அலங்கோலக் காட்சி தருவதிலிருந்து முதலில் பெண்கள் தங்களை விடுவித்துக் கொள்ள வேண்டும்.*[61]

அதுபோல அழகுக்காக இல்லாமல் அறிவுக்காகப் பெண்கள் சிறப்பிக்கப் படாத வரையில் எந்த இடத்திலும் எந்த நிலையிலும், எந்த வகையிலும் பெண்களின் திறமைக்கு மதிப்பில்லை.

ஆண்கள் செய்யும் தொழிலையெல்லாம் பெண்கள் செய்வதுதான் சமத்துவம் என்பதில்லை. ஆண்களைப் போல, பெண்கள் பேருந்து ஓட்டுவது சமத்துவமல்ல. இதனால் சமத்துவம் வந்து விடாதென்பதை,

> *மின்விசையின் துணைகொண்டு வாக னங்கள்*
> *விண்வெளியில் இயங்குவது விளைந்த நாளில்*
> *தன் விசையின் பேருந்து சாலை மீது*
> *தையலர்கள் ஓட்டுவதில் 'சமம்' என் கண்டீர்?* (ப. 474)

என வினாயெழுப்புகிறார். சமத்துவம் என்பது ஒரு பருப்பொருளன்று; அது ஒரு சித்தாந்தம்; ஒரு விழுமியம் (Value); சிந்தனையில் உருப்பெற்று வளருவது. சமத்துவம் பற்றிய உணர்வு, மனவளர்ச்சியைப் பொறுத்த ஓர் அருவப்பொருள். ஒவ்வொரு வளர்ச்சி நிலையிலும் ஏற்படும் பிரச்சினைகளுக்குச் சரியான வழிகாட்டுதலும் மற்றவர்களின் உணர்ச்சிகளை, உரிமைகளை மதிக்கக் கற்றுக்கொடுப்பதும், அவர்களின் மதிப்பீடுகளை அவ்வப்போது அவர்களாகவே மதிப்பீடு செய்து சரி செய்ய ஆலோசனை வழங்குதலே, ஆண் குழந்தைகளின் ஆரோக்கிய வளர்ச்சிக்கும், பெண்கள் மீதான வன்முறைக்கு முற்றுப் புள்ளி வைப்பதற்கும் சரியான தீர்வாக இருக்கும்.

இயற்கையின் தனிப்படைப்பான பெண்ணிற்கென அமைந்த சில இயற்கைக்கூறுகளும், தனிச்சிறப்புக்களும், கடமைகளும் உண்டு.

> *பெண் ஜடப்பொருள் அல்ல; ஜீவனுள்ள உயிர்ப்பொருள். இப்பாருக்கே சக்தி கொடுக்கும் பரம்பொருள். அவள் வெறும் இலக்கியப்பொருள் அல்ல; இயக்கப்பொருள்*[62]

என்பதை உணரவேண்டும். ஆண்களும் பெண்களும் சமமானவர்கள். எனினும் ஒன்றல்லர். இதனை முழுமையாக உணராது

> *ஆண்மகனின் வாழ்க்கை லட்சியமே கணவனாகி தன் மனைவிமீது ஆதிக்கம் செலுத்துவதே என்ற*

*முன்முடிவுடன் (Prejudice) களத்தில் இறங்கினார்களெனில், அவர்களது ஆளுமையைக் குறுக்கும்"*[63]

என்பதனை,

*ஆணுலகம் மேலன்று; மகளிர் மண்ணில்*
*ஆடவர்தம் நடைமுறைமேல் ஆசை கொண்டு*
*பேணுவது பீடன்று; பெண்கள் ஆணின்*
*பிரதியலர்; சரிபாதி பேறு பெண்மை.*
*மூலத்தை நகலாக்கல் முறையா? பெண்கள்*
*முன்னேற்றப் பயணத்தின் முதலாம் மேழிச்*
*சீலத்தைத் துவக்கியவர் ....* (ப. 475)

என்பது கவிஞரின் பிரகடனம். பெண்கள், மூலம் (Origin) என்று சொல்லத்தக்க உயிர்க்குலம். அவர்கள் யாருடைய நகல்களும் அல்லர். ஆணும், பெண்ணும் மானுடம் என்னும் நாணயத்தின் இரு பக்கங்கள். சமமான, ஆயின் வெவ்வேறான பக்கங்கள். இரண்டும் சேர்ந்ததுதான் மானுடம்.

*உடற்கூறு ஆணுக்கு வல்லமையாகவும் பெண்ணுக்கு மென்மையாகவும் அமைந்துள்ளதால் அதற்கேற்றபடி அவர்கள் பணிகளைப் பகிர்ந்துகொண்டு செய்வதுதான் முறை. பண்பாடு பேணப்பட வேண்டியதே. அதற்காகப் பழமையிலேயே மூழ்கிக்கிடக்க முடியாது. அறிவும் ஆற்றலும் இருபாலருக்கும் பொதுவானதே*[64]

என்பதை இனியும் தாமதமின்றி உணரவேண்டும்.

பல நூற்றாண்டுகள் உருண்டோடியும் பெண்கள் போதிய உரிமை பெறாததற்கு, அவர்கள் விழிப்புணர்வு பெறாததேயாகும். பெண்கள் உயரிய கல்விகற்று, சமுதாய அக்கறையுடன், வலிமையுடன் போராடிப்பெறும் வல்லமையில்தான் பெண்முன்னேற்றம் உள்ளது. பெண் அடிமையாய் இருக்கும்பொழுது, ஆண் சுதந்திரமாய் இருக்க முடியாது என்று கூறும் கவிஞர்,

*கிளர்ந்தெழுந்து வஞ்சியர்கள் தலைநிமிர்க* *(ப. 464)*

இறுதியில் போர்க்கொடி தூக்கினால்தான் பெண்ணுரிமை முழுமைபெறும் என்கிறார்.

பெண், முதலில் தன்னை நேசிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். தன்னைப் போன்ற பிற பெண்களை அன்பால் அரவணைக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். ஆனால்,

*பெண்கள் விடுதலை பெறுவதற்கு இப்போது ஆண்களைவிடப் பெண்களே பெரிதும் தடையாக; இருக்கிறார்கள். அதற்குக் காரணம் இயற்கையிலேயே, தனக்குள்ள உடலியல் வேறுபாடு காரணமாகவே, தாங்கள் ஆண்களுக்கு அடிமையாக கடவுளால் படைக்கப் பட்டிருப்பதாகக் கருதுவதைத்*[65]

தவிர்த்து மற்றொரு மனித இனமாகிய ஆண் சமூகத்தையும் போற்றக் கற்றுக்கொள்ளும்போது உலகம் பெண்ணைப் போற்றும். யார் பெரியவர், யார் சிறியவர் என்ற எண்ணங்களின்றி இயற்கையின்முன் அனைவரும் சிறியவர் என்ற எண்ணம் ஏற்பட்டு, அவர்களுடைய அகங்காரம் அடிபடும் போது, ஒருவரையொருவர் மதிக்கத் தொடங்கினால், ஒவ்வொருவரும் தாமாகவே உயர்வர். பூரணத்தின் இருபாதியாகப் பெண்கள் அமைவர். அதனாலன்றோ,

*பாவையினைத் தன்னுடலிற் பாதி யாக்கும்*
*பகுத்தறிவால் பரமசிவன் வலிமை பெற்றான்* (ப. 472)

என்று கவிஞர் பாடுகின்றார். அன்றுமுதல் இன்றுவரை ஆண்களின் **'Ego'** விற்கு, விட்டுக்கொடுப்பதன் மூலம் அது அவமானத்திற்குரிய செயலன்று என நினைத்து இப்பண்பினால் உயர்ந்து நிற்கிறார்கள் பெண்கள்.

*பெண்களிடம் இயல்பாக இருக்கின்ற சிறப்புகளை ஆண்கள்தான் உணரமுடியும். அதை உணர்பவனுக்குப் பெயர்தான் ஆண். ஆண்களுக்கு இல்லாதது அவர்களுக்கு இருப்பது. அது அவர்களுக்குச் சிறப்பு. அதில் ஒன்று கற்பு. இது ஆண்களிடம் இல்லாதது; ஆனால் வேண்டுவது*[66]

என்பதை உணர்ந்து பெண்மையின் அன்புக்கும் ஆற்றலுக்கும் ஏற்றம் கொடுத்தால் உலகம் தாழாது என்பதில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர் கவிஞர்.

*பெண்மை எனப்படும் காவியம் - புவி*
*பேணும் வலிமையின் பெட்டகம்!* (ப. 442)

*இன்பத்தின் ஊற்றெனினும் நுகர்வ தென்னும்*
*இயல்பொன்றே பெண்மையல: இம்பர் வாழ்வில்*
*அன்புமது: ஆற்றலது : உயர்வு தேடும்*
*ஆசையது: அடிப்படைகள் அனைத்தும் பெண்மை* (ப. 436)

என்கிறார். பெண்மையை ஓர் இயக்க சக்தியாகக் காண்கிறார். இப் பெருமையைக் குலோத்துங்கன் ஆண்களுக்குத் தராதது கவனிக்கத்தக்கது.

**8. கல்வியும் பொருளாதார வளர்ச்சியும்**

பெண்மையைப் போகப் பொருளாக ஆண்கள் பார்ப்பதும், தம்மை அலங்காரப் பொருளாகப் பெண்கள் நினைப்பதும் மாற வேண்டும். மொழி, கலை, கல்வி, இலக்கியம், பொருளாதாரம், கணினி என அறிவுச்சாளரங்கள் திறந்து கொண்டேயிருக்கும் வாய்ப்புகளைப் புறந்தள்ளிவிட்டு - பட்டும், நகையும் போதுமென்று பெண்கள் வாழ்க்கையைச் சுருக்கிக் கொள்ளக்கூடாது. அவ்வையாரும், ஜான்சி ராணியும், அன்னை தெரசாவும், இந்திரா காந்தியும் விஸ்வரூபித்து நிற்பது அவர்களது சாதனையாலன்றி ஒளிவிடும் நகைகளால் அல்லவே! தர்க்க ரீதியாகவும், தர்மத்தின் அடிப்படையிலும், அடிமைத்தனத்தை எதிர்க்க முடியாதவள், அடிமையாகவும் ஏழையாகவும்தான் இருப்பாள்.

> *தனித்துவமும் சமத்துவமும் ஒன்றையொன்று சார்ந்து இல்லாத இடத்தில் பெண்ணுரிமை மலராது*[67]

இதனால், தனிமனிதனின் தன்னலம், தனக்கேற்றவாறு தர்க்கத்தைப் பயன்படுத்தித் தர்மத்துக்குப் பொருள் கூறிகொள்ளும். எனவே, பெண்கள் சமத்துவம் பெறுவதாயின், அதற்குத் தம்காலில் நின்று பொருளாதார வலிமை பெறாமல் சமத்துவம் பெறுவதரிது.

பெண்கள்தான் வேளாண்மை நாகரிகத்தைத் தொடங்கி வைத்தவர்கள். நிலமும், நீரும் வளங்களாக இருந்த சமுதாயத்தில், அவர்கள் வேளாண்மையில் சமபங்கேற்றனர். நிலவுடைமை மட்டும் அவர்களுக்கு இருந்திருந்தால் அவர்களது நிலை வேறாகியிருக்கும். சொத்துரிமை இல்லாது சார்ந்து வாழ்பவர்களாகவும் பயிற்சியின் அடிப்படையில் வேளாண்தொழில் புரிந்து, கல்வியின் ஒளியும் செல்வத்தின் வலியும் இழந்துநின்ற பெண்கள், சார்ந்து வாழ்பவர்களாக இருந்ததில் வியப்பில்லை. வேளாண்மையுகந்தாண்டி, மனித சமுதாயத்தின் ஒரு பகுதி தொழில்யுகத்தில் விழித்தெழுந்தபோது, சமுதாயத்தில் மறுமலர்ச்சி ஏற்பட்டு, பொறியியல்துறையில் சில வளர்ச்சிகள் வந்ததனால் பெண்களும் பொருளாதார வலிமை பெற இயன்றது. சமுதாயத்தின் முன்னேற்றத்துக்குப் பெண்கல்வி இன்றியமையாதது. ஆனால்,

> *குடும்ப அமைப்புமுறை உருவாகும்போதே பெண் களுக்குச் சில சமூகத்தடைகள் (Social Taboos) உருவாகத் தொடங்குகின்றன.*[68]

இதனால் மக்கட் தொகையில் சம எண்ணிக்கையிலுள்ள பெண்கள், கல்வி பெறும்போதுதான் சமுதாயம் முழுமையான வளர்ச்சியடைய முடியும் என்பதை உணரத் தவறுகிறோம்.

ஒரு நாட்டின் முன்னேற்றம் வளரும் தலைமுறையினரான குழந்தைகளாலும் அக்குழந்தைகளின் ஆற்றல்களாலும் தீர்மானிக்கப் படுகிறது. அது போல ஒரு பெண் புரட்சியும் புதுமையும் எழுச்சியும் கொண்டவளாகத் திகழவேண்டுமெனில் இளமையிலேயே நல்ல அடிப்படைக் கல்வி அவசியமாகிறது. பெண்களின் உயர்வில்தான் நாட்டின் உயர்வு உள்ளது என்றுணர்ந்து பாடுபட்ட டாக்டர் முத்துலட்சுமியைத் தமிழகத்தின் 'பெண் பெரியார்' என்று கூறலாம். இந்தியாவின் முதல் பெண் மருத்துவர்; தமிழகச் சட்டமேலவையின் முதல் பெண் உறுப்பினர்; புற்றுநோய் சிகிச்சைக்கென முதல் சிறப்பு மருத்துவமனையை நிறுவியவர்; திக்கற்ற பெண்களுக்கு 'அவ்வை இல்லம்' என்று இத்தனை சிறப்பு களுக்கும் காரணமாக இருந்தது அவர் கற்ற கல்வியே. பாரதிதாசன், கல்வியின் பெருமைகளையும் காலத்தின் முக்கியத்துவத்தையும் கூறும்போது,

*சிலை போல ஏன் அங்கு நின்றாய்*

*மலைவாழை அல்லவோ கல்வி*

*கடிகாரமும் ஓடும்முன் ஓடு*

*படியாத பெண்ணாயிருந்தால்*
*கேலி பண்ணுவார் உன்னை இவ்வூரார் தெரிந்தால்*

*படியாத பெண்ணால் தீமை*
*என்ன பயன் விளைப்பாளந்த ஊமை*[69]

என்று பல அறிவுரைகளை வழங்கியும், கேள்வி கேட்டும் ஒரு பெண், வேளைதோறும் பயின்று உயர்ந்தநிலையை அடையவேண்டும். இல்லையெனில் ஊராரின் இழிவான செயல்கள் உன்னையும் உன்னினத்தையும் தாழ்த்திவிடும் என்கிறார். பாரதிதாசனுக்கு முன்னரே இதுபற்றிச் சிந்தித்த வேதநாயகம்பிள்ளை பெண்கல்வியை வலியுறுத்தி, கல்வி கற்காத பெண்ணை மணம் செய்யக்கூடாது என்கிறார். அப் பெண்கள் கல்விபெறாத நிலையை,

*எழுத்தறி வில்லாதவள் மட்டி*
*ஏதுமறியாளவள் சுரண்டுவாள் சட்டி*
*கழுத்திலே அவளுக்குத் தாலியைக்கட்டி*
*காரியமில்லையது காசுக்கு நட்டி*[70]

என்று சாடுகிறார். கல்லாத பெண்கள் உரிமையற்றர்கள். கல்வியைப் பெறும்போதுதான் பெண் தனக்குரிய உரிமைகளை உணர்ந்து பெற்று, ஆணுக்கு நிகராகச் சமுதாயத்தில் சமநிலையை அடைவாள் என்பதைப் பாரதிதாசன்,

*கல்வியில்லை உரிமையில்லை பெண்ணுக்குக்*
*கடைத்தேற வழியின்றி விழிக்கின்றார்கள்.*[71]

என வேதனைப்பட்டாலும் இதனை நீக்கி, பெண்ணான தாய்தான் குழந்தையின் முதல் ஆசிரியையாக அமைகிறாள் என்கிறார். இதனை,

*அவள் வாத்திச்சி அறைவீடு கழகம்*
*தவழ்ந்தது சங்கத் தமிழ்*[72]

என்று பெண்ணை உயர்வாகச் சித்திரிக்கிறார்.

இந்தியாவில் நிறுவன அளவில் பெண்கல்வி அங்குமிங்குமாக 19ஆம் நூற்றாண்டில்தான் தொடங்கியது. பெண்கல்வியின் தேவை படிப்படியாக உணரப்பட்டு ஏற்கப்பட்டது.

*1879ல், கல்கத்தா பல்கலைக் கழகத்தில் சந்திரமுகிபோஸ், காதம்பினி - கங்குலி என்ற இரண்டு பெண்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அவர்கள் 1882–83ல் பட்டங்களைப் பெற்றார்கள். 1857ல், உருவாக்கப்பட்ட கல்கத்தா பல்கலைக் கழகம், 1879ல் பெண்களைச் சேர அனுமதித்தது. ஆயின் 1836ல் அமைந்த இலண்டன் பல்கலைக் கழகம் 1878ல் தான், பெண்களை அனுமதித்தது. புகழ்பெற்ற கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்திலிருந்து 1948ல் தான் முதல் பெண் பட்டதாரி வெளிவந்தார்.*[73]

பெண்களின் உயர்கல்வியில் இந்தியா, கடந்த ஐம்பது ஆண்டுகளில் நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளது.

*1998 – 99 பல்கலைக்கழக மானியக் குழு அறிக்கையின் படி உயர்கல்வி வகுப்புகளில் 35 சதவிகிதம் பெண்கள் பயின்றார்கள். தமிழ்நாட்டில் பெண்கள் ஆண்களைக் காட்டிலும் அதிகம் பயின்றனர். 2000ல் பெண்கள் 52 சதவிகிதம் பயின்றனர். கேரளம், பஞ்சாப் போன்ற மாநிலங்களில் பெண்கள் 50 சதவிகிதத்திற்கும் அதிகமாகி விட்டனர்*[74]

என்ற புள்ளிவிபரம் நமக்கு மகிழ்ச்சி தரக்கூடியதாகும். மானுட வாழ்வின் வளர்ச்சிக்குத் தேவையான தாய்மை, பெண் சமுதாயத்திற்குச் சுமையாகி விடக்கூடாது. பெண் கல்வியில் 'தாய்மை' எனுங்கூறு இடம்பெற வேண்டும். இன்றைய குழந்தை நாளைய நாட்டின் சிற்பி. பண்டைய மகளிர் எவ்வாறு மக்களைப்பெற்றுத் தாய்ப்பாலோடு அன்பு பண்பு அறிவு ஆற்றல் முதலிய உயர்குணங்களையும் குழைத்தூட்டிப் பெரியோர்களாக்கிப் பெருமிதம் அடைந்தவர்கள் என்பதை இதன் மூலம் உணர்த்தமுடியும். எனவே, தொடர்ந்து பெண்கள் கல்விபெற்றுச் சமுதாயத்தில்

*ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாகக் கருதப்பட்டு எல்லா நிலைகளிலும் கல்வியால் பெண் சிறந்து விளங்க வேண்டும்..[75]*

தன்னுடைய குடிக்கஞ்சி, பால்மணம் கொண்ட ஒரே மகனையும் போர்முகம் நோக்கி அனுப்பிய வீராங்கனைகள் வாழ்ந்ததும், புலிகிடந்த குகை என்று தம் வயிற்றைக் குறித்துப் பெருமைகொண்ட மூதின்மகளிர் வாழ்ந்ததும் நம் தமிழ்நாடு. விதியைப் பழிக்காது உயர்குணங்களை யுடைய மக்கட் செல்வங்களை உருவாக்குவதில் பெண்குலம் பெருமையோடு இருந்தது அன்றைய காலம். அதேபோன்று, பெண்கள் மென்மையானவர்கள் என்பதையும் மனதிற்கொண்டு, சமுதாய வாழ்வில் கடமைகள் வகுக்கப்பட்டதைப்போல அவர்களுடைய கல்வியும் பயிற்சியும்கூட இதனடிப்படையிலேயே அமையவேண்டும்.

**9. கடமைகளும் இயற்கை நியதியும்**

வாழ்க்கையின் தேவைகட்கு ஒரு சமுதாயத்தைத் தயார் செய்வதில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சில தனிப்பட்ட பயிற்சிகள் தேவைப்படுவதால் பெண்கல்வி வேண்டுமென்ற முடிவு ஏற்பட்டுள்ளது. இதனை ஆராய்வதற்கு முன்னர், ஓர் அடிப்படைக் கருத்தை எல்லோரும் ஏற்றுக்கொண்ட உண்மை (Axiom) எனத் தொடங்குகிறோம். அது பின்வருமாறு:

- சமுதாயத்தில் ஆண்களும் பெண்களும் சமம்.
- ஆண்களுக்குள்ள சமுதாய, பொருளாதார, அரசியல் வாய்ப்புகள் அனைத்தும் பெறுகின்ற உரிமை பெண்களுக்கும் உண்டு.
- ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் நடத்தப்படுவது, ஒரு சமுதாய ஏற்பாடன்று. இயற்கையில் அமைந்த பெண்களின் பிறப்புரிமை.
- ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையில் நம்மால் உருவாக்கப்பட்ட சமுதாயப்பொறுப்பில் வேறுபாடு யாதேனும் இடம்பெறுமாயின், அது இருபாலர் நலன் கருதியதாகவும், பொதுவான மானிடச் சமுதாயத்தின் நலன் கருதியதாகவும் இருக்க வேண்டும்..

இவற்றின் பின்னணியில் கீழ்க்கண்ட உண்மைகளைப்பற்றிச் சிந்தித்து ஆராய்வோம்.

- பெண்கள் தாய்மையை ஏற்பவர்கள்.
- பெண்கள் ஆண்களைவிட மென்மையானவர்கள்.

இவை இயற்கை நியதி, இவற்றை ஆண்களோ பெண்களோ உருவாக்கிக் கொண்டதல்ல. இவ்வியற்கை நியதிகளை இகந்த **'புதியசக்தி'யாக (Super**

power) மாற்றும்வரை இது இருக்கும். எனவே, தகுதியென்ற அடிப்படையில் இருபாலரும் எல்லாப் பொறுப்புகளுக்கும் தகுதியுடையவர்கள் என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். பின்னர், பெண்கள் மட்டுமே ஏற்கும் தாய்மையெனும் கடமையை மனத்திற் கொண்டு, அவர்களுடைய கடமைகள் அமைக்கப்படவேண்டும். இது சலுகையாலன்றி அவர்கள் பொதுநலங்கருதிச் செய்யும் வேள்விக்குக் கைம்மாறு ஆகும்.

ஆண் வேறு; பெண் வேறு என்ற உண்மையைப் புரிந்து கொண்டு பெண்ணை மதிக்கக் கற்பதே பெண் உரிமையின் ஆரம்பமாகும்.

> *'எட்டும் அறிவினில் ஆணுக்குப் பெண் இளைப்பில்லை காண்' என்ற பாரதியின் கனவு இன்னும் அங்கீகரிக்கப் படவில்லை என்பதுதான் இன்றைய யதார்த்தம்.*[76]

எவ்வாறு ஒரு காந்தத்தின் வடதென் துருவங்கள் ஒத்தவலிமை கொண்டதாக இருப்பினும் வெவ்வேறானவைகளோ, ஒரு தராசின் இரண்டு தட்டுகளும் ஒத்தவை என்றாலும் வெவ்வேறானவையோ அவ்வாறே ஆணும் பெண்ணும் எதிரெதிர் தளங்களில் சமநிலை யானவர்கள். எனவே, பெண்கள் இயற்கையோடு இயைந்து நின்று, தங்களுடைய தனித்தன்மையைக் காத்துச் சமுதாயத்தில் சம வாய்ப்பினைப் பெறல் வேண்டும் என்பதைக் குலோத்துங்கனின் விரிந்த பார்வையில் வித்தியாசமான நோக்கினைத் தருகிறது. ஆனால் சில நாடுகளிலுள்ள 'பெண்ணியச் சுதந்திர' அமைப்புகளின் போக்கு மாறுபட்டதாக உள்ளதை,

> *ஆடவர்க்குத் தாம் சமமாய்*
> *ஆகுநிலை, ஆடவர்தாம்*
> *கேடனைத்தும் கற்றால்தான்*
> *கிட்டுமெனும் தத்துவத்தை* (ப. 461)

சில பெண்ணியவாதிகள் முன்வைக்கின்றார்கள். இது பெண்மையின் தெளிவற்ற சிந்தனையையும் முதிர்ச்சியற்ற அணுகுமுறையையும் கொண்டதாகும்.

## 10. மென்மையின் வலிமை

பெண்கள் மென்மையானவர்கள் என்பதினாலேயே, வலிமை குறைந்தவர்கள் என்பதில்லை. வலிமை என்பது தசைவலிமையன்று; மனவலிமையும். மதிவலிமையு மாகுமென்பதை

> *'வன்மை' அன்றுநம்*
> *வலிமையின் உரைக்கல் :*

*மலரின், தளரின்*
*வளரும் குருத்தின்,*
*மென்மையின் மென்மையர்*
*விறலினர் என்போம்;*
*'மென்மையின்' வலியது*
*வேறெதுமில்லை* (ப. 172)

என்ற குலோத்துங்கனின் கருத்துண்மையால் பெண்கள் சிறந்த சாதனை புரிபவர்கள் என்பதை அறியமுடிகிறது. இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டபோது சாந்திகோஷ், சநிதிசவுத்ரி ஆகியோருக்கு வயது பதினைந்து. அவர்கள் சிறையிலிருந்து வெளிவந்த போது முதுமை எய்தி இருந்தார்கள். சிட்டகாங் ஆயுதக்கிடங்கில் போர்க்கருவிகளைக் கொள்ளையடித்த வீரர்களில் கல்பனா ஜோஷிக்கு வயது பன்னிரண்டு. அவருடைய மதிவலிமையே அதனைச் செய்யத் தூண்டியது என்பதை வரலாற்றுப் பாடங்களில் நாம் படித்துள்ளோம்.

*இந்திய முதல் ஐ.பி.எஸ். அதிகாரி கிரண்பேடிக்கு, ஜப்பான் மகசேசே விருது வழங்கிச் சிறப்பித்துள்ளது. இந்தியச் சுற்றுச்சூழலுக்குத் தொடர்ந்து போராடி வருகிறவர் மேதா பட்கர். இமயமலைத் தொடரில் மாலிக் வார்தி, சுமிதாராய், வினிதாமுனி ஆகிய மூன்று பெண்களும் கிழக்கிலிருந்து மேற்காக 4500 கி.மீ. தூரம் நடந்து சாதனை படைத்துள்ளனர்.*[77]

இவர்கள் தங்களது மென்மையையே வலிமையாகக் கொண்டு மற்ற பெண்களுக்கு முன்மாதிரியாகத் திகழ்கிறார்கள். சமீப காலத்தில் விண்வெளிப் பயணத்தில் சாதனை புரிந்தவர் கல்பனா சாவ்லா போன்றோர் பெண்குலத்தின் வல்லாண்மை மிகுந்த மனவலிமையைப் பெற்றவர்கள் என்பதை இன்றையப் பெண்கள் உணரவேண்டும்.

பொருளாதார வாழ்வில், பெண்களுக்குரிய மென்மைத் தன்மைக்கேற்ப, பணிகளைக் கொடுப்பதிலோ, அதனை அவர்கள் ஏற்றுக் கொள்வதிலோ ஏற்றத்தாழ்வுகளுக்கு இடமில்லை. அண்மைக் காலங்களில் ஏற்பட்ட மாற்றங்கள் பெண்கள் பொருளாதார விடுதலை பெறச் சாதகமாக அமைந்துள்ளன. கணிப்பொறி, தொலைத்தொடர்பு, உயிரியல் தொழில்நுட்பம், அறிவியல் தொழில்நுட்ப ஆய்வு ஆகியவற்றில் பெண்கள் பெருமளவில் பங்குபெற்று வருகின்றனர். இன்றைக்கு அனைத்து நாடுகளிலும் முதன்மைப்பிரிவு, (Primary sector), சார்புப் பிரிவு (Secondary Sector) என்பதோடு பெரிய அளவில் சேவைப் பிரிவு (Service Sector) வளர்ந்து பெண்களுக்கு அதிக அளவில் வேலை வாய்ப்பை உருவாக்கியுள்ளன.

தாய்மையும், மென்மையும், எழிலும் பெண்களுக்கு இயற்கை தந்தது; அவற்றைப் பெற்ற பெண்கள் பெருமிதம் கொள்ளவேண்டும்.

*'கிரிட்டிகல் மாஸ்' (Critical Mass) என்ற எடைவரம்பைத் தாண்டிய அணுசக்தி, அழிவு சக்தியாகிறது. அந்த வரம்பிற்குட்பட்ட அணுசக்தி எதையும் சாதிக்கவல்ல சக்தியாகிறது. அத்தகைய ஆக்கசக்தியின் மொத்த உருவமாகப் பெண்மை மலர்*[78]

தங்கள் பெண்மைத் தன்மையை இழக்காது, பெண்களெனும் பெருமிதத்துடன் சமவாழ்வு பெறவேண்டும். இது இயன்றதோடன்றி, அவர்களுக்கும் மனித சமுதாயத்திற்கும் ஏற்றதொன்றாகும்.

**11. இன்றைய இழிநிலை**

இலக்கியத்தில் பெண்மையைப் புனித பீடத்தில் ஏற்றிப் போற்றிச் சிகரத்தில் நிற்கச் செய்ததுமுண்டு. அன்பால், குடும்பத்தையும் சமுதாயத்தையும் பெண் கட்டிக்காத்ததுண்டு. இன்று வேண்டாத சில சமூக மாற்றங்களால் எதிர்மறையான பெண்மை சித்திரிப்பு இலக்கிய மிகைப்படுத்தல் கோட்பாட்டால், விரசத்தின் எல்லையைத் தொடுகிறது. வெண்புறா போன்ற தூய்மையான பெண்மைக்குப் பல நிறச்சாயமேற்றித் தரம் தாழ்த்தி உலவவிடுகிறார்கள்.

மேல்நாட்டு மோகம் மோதுவதால் உடை, உணவு, உணர்வு மாற்றங்களால் பெண்மை புனிதத்தை இழந்துவிட்டதாகவும், அவளுடைய பளிங்கு போன்ற தெளிவனைத்தும் பழங்கதை என்றும், கலங்கிய சேறுதான் இன்றைய நிலையென்றும், பெண்மையின் இலக்கணத்தை மாற்றி எழுதிடத் தரமிழந்த சிலவகை ஊடகங்களும் இலக்கியங்களும் புறப்பட்டுள்ளன. திரைப்படங்களையும் தொலைக் காட்சியையும் பார்ப்பவர்களின் மனவக்கிரங்களின் வெளிப்பாடுகள்தான் தரம் தாழ்ந்தவை. இலக்கியம் சமூகத்தைக் குற்றம் சொல்லச் சமூகம் இலக்கியத்தைக் குற்றம் சொல்ல, ஒரு நச்சுவட்டம் தற்போது உருவாகி விட்டது. கலை, ஓவியம் என்ற பெயரில் மனவிகாரங்களைத் தூண்டும் வக்கிர உணர்வுகளை வெளிப்படுத்தும் நிலை தடைசெய்யப்பட வேண்டும்.

கலையும் நாகரிகமும் மனித குலத்தின் முன்னேற்றம் என்பதுதான் பொருளாக இருக்க முடியும்; இருக்க வேண்டும். இவற்றைப் பாதுகாக்கவில்லையென்றால், நம்முடைய அறிவியல் முன்னேற்றத்திற்கு அர்த்தமே இல்லாமல் போய்விடும். நமது மதிநுட்பத்தை அயல்நாடுகளில் விற்றுவிட்டு, நமக்கு வேண்டாத அவர்களுடைய கலாச்சாரத்தை வாங்கி வருகிறோம். சரிவை நோக்கி ஓடும் இச்சறுக்கலைத் தடுப்பதில், பெண்மைக்கு முக்கியப் பங்குண்டு. பெண்ணினம் விழித்தெழ வேண்டும். ஆக்கப்பூர்வமான சிந்தனைகளைச் செயல்படுத்தித் தம் ஆற்றலை அவனிக்கு மெய்ப்பித்திட வேண்டும்.

### கருத்துக்களின் முடிவு

- பெண்ணியம், பெண்களுக்கு மட்டும் சமத்துவம் வேண்டுமென்று கேட்கவில்லை. சமத்துவச்சமுதாயம் உருவாக வேண்டுமென்பதே அதனுடைய நோக்கமாகும்.
- அறியாமையும் மூடபக்தியும் பெண்களைச் சுயசிந்தனை யற்றவர்களாகச் செய்துவிட்டமையால், பெண்கள் தங்களுடைய உரிமைகளை அறிந்துகொள்ளும் சக்தியற்றவர்களாகிவிட்டனர்.
- பெண்பிறவியை இழிபிறவி என்று கூறியநிலை காலப்போக்கில் பெண் வெறுப்புக்கோட்பாடாகவும் பெண் மறுப்புக்கோட்பாடாகவும் வளர்ந்தது.
- தமிழகத்தில் நிலவிவந்த தாய்த்தலைமை மரபானது ஆரியர் வருகைக்குப் பின்னர் தந்தை வழிமரபாக மாறியது.
- நல்லகுடும்ப அமைப்பே தேசியவளர்ச்சியின் அடிப்படை. நல்ல குடும்பம் என்பது ஆண்பெண் சரிநிகர் சமானமாக வாழ்வது. ஆயினும் இன்று எல்லாநாட்டிலும் பெண்கள் இரண்டாந்தரக் குடிமக்களாக அடிமைகள்போல் வாழ்கின்றனர். நாட்டுரிமைக்குப் பெண்ணுரிமையே அடிப்படை என்பது வலியுறுத்தப்படுகிறது.
- பெண்கள் முன்னேறக் கல்விகற்க வேண்டும் என்றும், கற்றபின்னர் செய்யும் வேலைகளும்கூட அவர்களுடைய மென்மைத் தன்மைக்கு ஏற்றதாகவே அமையவேண்டும் என்றும், அது பெண்களின் இயற்கைத் தன்மைக்கு ஒத்தும் அமைய வேண்டுமென்பதே கவிஞரின் பெண்ணியச் சிந்தனையாக அமைகிறது.

### அடிக்குறிப்புகள்

1. The Concise Oxford Dictionary, Oxford University Press, Eight Edition 1990, p. 430.
2. குமாரசாமி, சி.என்., பெண்ணிய நோக்கில் பாரதி (முன்னுரை), ப. 4.
3. முத்துச் சண்முகம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப. 26.
4. திருவள்ளுவர், திருக்குறள் - 49.
5. இந்திரா சோமசுந்தரம் - சமய நெறியில் மகளிர் பங்கு, பக். 27 - 28.

6. யோகீஸ்வரன். பி, தமிழ்க்கவிதைகளில் சமுதாயச்சிக்கல்கள், ப. 41.
7. மித்ரா, புதியதோர் உலகம் செய்வோம், ப. 28.
8. லெனின், மாதர் விடுதலை பற்றி, ப. 103.
9. சாலை இளந்திரையன், புரட்சி முழக்கம், ப. 97.
10. மித்ரா. பாவேந்திரன் புதியதோர் உலகு செய்வோம், ப. 26.
11. இராமலிங்கம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் கவிதைகள்.
12. பாரதிதாசன், புதியதோர் உலகம், ப. 109.
13. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி பாடல் - 1297.
14. " " " - 1283.
15. " " " - 3121.
16. " " " - 3120.
17. தொல்காப்பியர், தொல்காப்பியம், எழுத்து நூற்பா, 1.
18. மேருமந்திர புராணம்.
19. சூளாமணி பாடல் - 1985.
20. ராஜம்கிருஷ்ணன், காலந்தொறும் பெண், பக். 117 - 124.
21. " மனுதர்மசாஸ்திரம் : அத்தியாயம் 2 - கல்வியும் கடமைகளும்.
22. " மனுதர்மசாஸ்திரம் : அத்தியாயம் 4 - பொருளியலும் தனிமனித ஒழுங்கும்.
23. குமாரசாமி, சி.என்., பெண்ணிய நோக்கில் பாரதி, ப. 51.
24. மேலது. ப. 47.
25. குறுந்தொகை, பாடல் - 135.
26. சாந்தி மோகனராசு, தினமணி, 09.02.1991.
27. திருவள்ளுவர், திருக்குறள் அதிகார எண் 6.
28. " " " 67.
29. " " " 70.
30. " " " 69.

31. திருவள்ளுவர், திருக்குறள் அதிகார எண் 91.

32. அறவாணன், க.ப., தேடல் : தொகுதி 1.

33. புறநானூறு, பாடல் - 3.

34. பதிற்றுப்பத்து, ஏழாம் பத்து.

35. ” ”

36. புறநானூறு, பாடல் - 316.

37. அறவாணன் க.ப., தமிழ்ச்சமுதாயம் நோயும், மருந்தும், ப. 93.

38. தாயம்மாள் அறவாணன், உறவு முறைகள், ப. 26.

39. ஏங்கல்ஸ், குடும்பம் சொத்துரிமை அரசு ஆகியவற்றின் தோற்றம், அயல்மொழிப் பதிப்பகம், மாஸ்கோ, ப. 80.

40. பாரதியார், பாரதியார் கவிதைகள் - கண்ணம்மா.

41. திருவள்ளுவர், திருக்குறள் - 1081.

42. மறைமலையடிகள், அறிவுரைக் கொத்து, பக். 166 - 167.

43. பாரதிதாசன், குடும்பவிளக்கு, பக். 161 - 162.

44. திருவள்ளுவர், திருக்குறள் - 61.

45. பாரதியார், கண்ணம்மா என் குழந்தை.

46. புறநானூறு, பாண்டியன் அறிவுடைநம்பி, பாடல் - 188.

47. பெரியார், குடியரசு, ப. 8 21.09.1946.

48. நன்னன் மா., பெரியார் கணினி (தொகுதி - 2) ப. 526.

49. ” ” ” ப. 541.

50. ” ” ” ப. 545.

51. ” ” ” ப. 545.

52. ” ” ” ப. 549.

53. ” ” ” ப. 549.

54. குமாரசாமி, சி.என்., பெண்ணிய நோக்கில் பாரதி, ப. 22.

55. மதிவாணன், தினமணி- 11.02.05.

56. ராஜதுரை, எஸ்.வி - கீதா. வ., பெரியார்: சுயமரியாதை சமதர்மம், ப.571.

57. ஆனைமுத்து, வெ. பெரியார் சிந்தனைகள்.
58. குழந்தைசாமி, வா.செ., அவினாசிலிங்கம் நிகர்நிலைப் பட்டமளிப்பு உரை, 12.10.1999.
59. ஐ.நா. அறிக்கை, தினமணி, 12.08.1994.
60. சுதாசேஷய்யன், தினமணிக்கதிர், 02.05.1999.
61. பழனிச்சாமி, க., தினமணி, 07.02.2001.
62. மணிமாறன், கங்கை., தினமணி, 11.10.2002.
63. சுப்ரமணியன், கே.எஸ்., தினமணி, 02.08.2005.
64. இளம்வழுதி, க.பொ., தினமணி, 20.07.2000.
65. ராஜதுரை, எஸ்.வி., - கீதா.வ., பெரியார்: சுயமரியாதை சமதர்மம்.
66. ஜெயகாந்தன், தினமணி கதிர், 16.05.1999, ப. 28.
67. சீதளா, சி., ஆய்வுக்கோவை – 1999, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ப. 747.
68. மேலது, 750.
69. பாரதிதாசன், இசையமுது, ப. 28.
70. வேதநாயகம்பிள்ளை, சமரசக் கீர்த்தனை.
71. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 3.
72. ” , குடும்பவிளக்கு, ப. 288.
73. நடராசன், க., பெண்ணியம் - தோற்றமும் வளர்ச்சியும், தினமலர், 08.03.2000.
74. குழந்தைசாமி, வா.செ., இது கல்வியுகம், பக். 44 - 45.
75. தினமணி 08.09.1997.
76. தினமணிகதிர், 14.09.1997, பெங்களூர் பதிப்பு.
77. ஜானகிரமணன், பெண்களும் கலை இலக்கியமும், பக்.15 - 16.
78. திலீப் நாராயணன், தினமணி, 20.07.2000.

# 3. சாதியக் கோட்பாடுகள்

இந்தியச் சமுதாயத்தை, குறிப்பாகத் தமிழ்ச்சமுதாயத்தைச் சாதியெனும் பெருநோய் அரித்துவருவதை ஒழிக்க வள்ளுவர் காலம் முதல் பாரதி, பாரதிதாசன் காலம் வரையிலும் முயன்றும் எதிர்பார்த்த நோக்கம் முழுமையாக நிறைவேறவில்லை. பெரியார் சாதி யொழிப்பினைப் பற்றி, பலகாலம் பேசியும், எழுதியும், உழைத்தும் வந்தார். எனினும் போதிய பலனைப் பெறத்தவறிவிட்டோம். மாறாக, இன்றைய நிலையில், சாதியின் பெயரால் பல சங்கங்கள் தோன்றி யுள்ளன. அவையனைத்தும் தத்தம் சாதியின் போலிப் பெருமைகளைப் பறை சாற்றிக் கொண்டுள்ள காரணத்தால், தமிழ்ச் சமுதாயத்தில் தேவையற்ற பல பிளவுகளும், பூசல்களும் தோன்றி ஒற்றுமை குன்றியது; வேற்றுமை பெருகியது; சண்டைகளும், கலகங்களும், கலந்துள்ள சமுதாயத்தைப் பற்றிக் குலோத்துங்கன் கவிதைகளில் காணமுடிகிறது. இத்தகு சாதியம் குறித்து,

1. ‘சாதி’ - சொல்லும் பொருளும்,
2. தமிழகத்தில் சாதியத் தோற்றம்,
3. தொழிலால் உயர்வும் தாழ்வும்,
4. தமிழகத்திலும். தமிழிலக்கியத்திலும் சாதியம்,
5. ஊடகங்கள் மூலம் சாதியத் தோற்றம்,
6. சாதி : புரையோடிய புண்,
7. சாதிய - வர்ணாசிரம எதிர்ப்பு,
8. சமுதாய நீதி,
9. சாதி ஒழிப்பு விளைவுச்சிந்தனைகள்,
10. தமிழின உணர்வு,
11. சமத்துவபுரமும் சாதி ஒழிப்புத்திட்டமும்.

என்ற உட்பிரிவுகளில் விளக்கப்படுகிறது.

**1. சாதி – சொல்லும் பொருளும்**

தொல்காப்பியர் நீரில் வாழும் உயிர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, சாதி என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். 'சாதி' என்ற சொல்லுக்குப் 'பிரிவு' என்பது பொருளாகும். தமிழ் இலக்கண இலக்கியத்துள், சாதி என்ற சொல்லாட்சி உள்ள மிகப் பழமையான இடம் இதுவாகும்.

*நீர்வாழ் சாதியுள்அறு பிறப்புக்குரிய*[1]

*நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே*[2]

என்று சாதி பற்றிக் கூறுகிறார்.

*ஆங்கிலத்திலும் பிரெஞ்ச் மொழியிலும் சாதி என்ற இச்சொல்லை, 'Caste' என்று சுட்டுகின்றனர். இச்சொல், 'Casta' என்ற ஸ்பானிசு மொழியிலிருந்து தோன்றியது ஆகும். Casta என்பதற்கு இனம், குலத்தூய்மை போன்ற தலைமுறைப் பண்புகளின் தொகுதி என்பது பொருளாகும்.*[3]

தொடக்கத்தில், இந்தியாவிற்கு வந்த போர்ச்சுகீசியர்கள், இந்தியரிடம் இருந்த சாதி அமைப்பை, இச்சொல்லால் குறித்தனர். மொழி அடிப்படையில் இச்சொல் எளிதாக இருப்பினும், சமூகவியலில் இச்சொல்லின் பொருளும் செயற்பாடும் இந்தியச்சூழலில் ஆழ்ந்த பொருளுடையவை.

சாதியமுறையின் தனிப்பெருங்கூறு தீண்டாமை. இம்மண்ணில், தீண்டாமை ஓரளவு தணிந்திருந்தாலும், சாதியக் கட்டுமானங்கள் சிதைவு படாமலேயே இருந்து வருகின்றன. இந்தியாவில் ஏறத்தாழ 3000 சாதிகளில் உட்பிரிவுகள் வேறு நிறைய உள்ளன. இந்திய அரசியலையும், பொருளாதாரத்தையும் தீர்மானிக்கும் தன்மையுடன், சாதி இருந்து வருகிறது. சாதியமுறையை மதங்களின் மூலம் ஒழிப்பதற்கு, சமணமும் பௌத்தமும் முறையே கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலும் ஆறாம் நூற்றாண்டிலும் முனைந்தன. வருணப்பிரிவிற்கும் சாதிப்பிரிவிற்கும் மதமே அடிப்படையாக அமைந்தது. மத ஆளுமையைத் தம்முடைய கையகம் வைத்திருந்த ஆரியர், சாதிக்கொள்கையை மதத்தின்வழியே உறுதிப்படுத்தினர். இதனை,

*சாதிப்பிரிவானது மாந்தர்களால் ஏற்படுத்தியதன்று; இறைவனால் ஏற்படுத்தப்பட்டது என்றும், படைப்புக் கடவுளான பிரம்மாவின் முகத்திலிருந்து பிராமணர்களும், கையிலிருந்து சத்திரியர்களும், தொடையிலிருந்து*

*வைசியர்களும், காலடியிலிருந்து சூத்திரர்களும் தோன்றினர் எனவும் கற்பித்தனர்.*

இந்து சமயத்தை எதிர்த்துச் சாதியற்ற சமத்துவத்தைப் போதித்த சமணமும், பௌத்தமும், பிற்காலத்து இந்து சமயத்தின் ஆதிக்கத் தாலேயே வீழ்ந்துவிட்டன. பிற்காலத்தில், இந்தியாவிற்கு வந்த உலக மதங்களான இசுலாமும் கிருத்தவமும்கூட, சாதிசார்பற்ற சமயமாகவும் தத்துவ அடிப்படையில் விளங்கினாலும், காலப்போக்கில், இந்தியச் சூழலில், சாதியை ஒப்புக்கொண்டன. இந்நிலையில் இந்தியாவில் அனைத்து நிலைகளிலும் ஆட்டிப்படைக்கும் தனி ஆற்றலாகச் சாதி இருந்து வருகிறது. அதற்கு அடிப்படையாக இந்து சமயமும், வேதங்களும், மனுதர்ம சாத்திரமும் அமைகின்றன.

**2. தமிழகத்தில் சாதியத் தோற்றம்**

பண்டைய பொதுமைச் சமுதாயத்தில், பிறப்பினடிப்படையில் வேறுபாடுகள் எதுவுமில்லை. முதலில் ஏற்பட்ட பிரிவு ஆணுக்கும் பெண்ணுக்கும் வேலையின் பொருட்டு அமைந்த பிரிவாகும். மேலோர் கீழோர் என்ற பிரிவு, தமிழகத்தைப் பொறுத்தவரை, தொடக்கத்தில் ஆள்வோர், அவர்கீழ் வாழ்வோர் என்ற அடிப்படையில் தோன்றியது.

*குழுவின் தலைமையை, வலிமை, முதுமை, திறமை ஆகியவற்றால்*

ஆண்மகன் அடைந்தான். அப்பொறுப்பை நிலைப்படுத்திக் கொள்ளவும், தனக்குப்பின் வருவோர் வாரிசு உரிமையாகத் தலைமையை அனுபவிக்கவும், தான் சேர்த்த உடைமையைத் தன் வாரிசிலுள்ளோர் நுகரவும் வாய்ப்பாகத் திருமணம் என்ற சடங்குமுறையை முதன்முதலில் அமைத்துக்கொண்டனர். இச்சடங்கு முறையால் ஒரு தலைவனுக்குப்பிறகு மற்றொரு தலைவனை, தலைவரின் மகன் தலைவன் என்று தேர்வு செய்யும் வாரிசு உரிமை தோன்றியது. அஃதாவது தலைமையுரிமை பிறப்புவழித் தீர்மானிக்கப்பட்டது.

சாதியின் ஊற்றுக்கண் பிறப்புவழித் தீர்மானிக்கப்பட்டதுதான் முதல்நிலையாகும். அதன் அடுத்த விரிவாக்கம் திருமணமுறையில் கிடைத்த அரசுரிமையும் சொத்துரிமையும் வெளியே செல்லாதவாறு அடுத்துள்ள குழுவின் - குழுத்தலைவனின் அல்லது இரத்தப் பிணைப்புள்ள உறவில் திருமணம் முடிக்கவேண்டுமென்ற நிலைமை தோன்றியது. இதனால்தான், பண்டைய எகிப்திய நாட்டுக் கிளியோபாத்ரா தன் தம்பி டாலமியைத் திருமணம் செய்துகொண்டாள். தமிழகத்திலும் சில இனத்தாரிடையே, அக்காள் மகளை மணந்து கொள்ளும் முறை இன்றும் உள்ளது. இது சொத்து வெளியே போகாமல் தடுப்பதற்கு அமைந்த ஏற்பாடாகும்.

*சாதிய இறுக்கம் இன்னும் கட்டுக் குலையாமலிருப்பதற்குக் காரணம் சமுதாயத்தில் நிலவும் அகமண முறைதான். கலப்பு மணங்களால் சாதி ஆதிக்கத்தில் விரிசலை ஏற்படுத்த முடியும்*[6]

என்ற நிலை இன்று பரவலாக உள்ளது

எனவே, வாரிசுரிமைக்காகவும், சொத்துரிமைக்காகவும் பிறப்பு அடிப்படையில் உருவான குடிவழி அகமணமுறையானது, அரசியல் கட்டாயமாயிற்று. சாதியின் முதல் இறுக்கம் பிறப்பு என்றால், அதன் இரண்டாவது இறுக்கம் அகமணமுறையாகும். எனவே தமிழகத்தைப் பொறுத்தவரை தலைமைக்குவழி அல்லது அரசுக்குடிவழி ஆகியவையே சாதித்தோற்றத்திற்குக் காரணமாக இருந்திருக்கவேண்டும் என்பது புலப்படுகிறது.

**3. தொழிலால் உயர்வும் தாழ்வும்**

தமிழர்கள் தொழில் அடிப்படையில் பிரிந்திருந்தனர். தொடக்கத்தில் தொழிலில் உயர்வு தாழ்வு இல்லை.

*சங்க காலத்தில் நிலம், தொழில், பண்பு, சிறப்பு பற்றி உண்டான பெயர்கள் காலப் போக்கில் சாதிப்பெயர்களாக மாறிவிட்டன.*[7]

இன்றைய 21ஆம் நூற்றாண்டில் அறிவியல் விரைவான வளர்ச்சியடைந்திருக்கின்ற போதும் சாதியின் ஆதிக்கம் வேர்விட்டு விருட்சமாக இருப்பதைக் காண்கிறோம். சாதியின் பெயரால் ஏற்பட்டுவிட்ட சாபக்கேட்டை ஒழிக்கவேண்டுமானால் ஒருவர், தான் எந்தச் சாதியையும் சாராதவர் என்று தன்னைப் பதிவு செய்து கொள்ளச் சட்டபடி உரிமை வழங்கப்பட வேண்டும். சமுதாயம் ஒத்துக்கொள்ளா விட்டாலும் “சட்டப்படி சாதியை ஏற்காதவர்கள்” என்ற ஒரு பிரிவு ஏற்பட்டால் அதை ஆதரிப்பவர்கள் எண்ணிக்கையும் நாளடைவில் பெருகும். படிப்படியாகச் சாதிப்பிரிவுகள் அற்றுப் போகும்.

*கி.மு.6 ஆம் நூற்றாண்டில், ஆரியர் விந்தியம் தாண்டித் தென்மாநிலங்களில் பரவினர்.*[8]

இவ்வாரியர் வருகைக்குப்பின் இழிவாகப் பேசப்பட்ட உழவுத்தொழில் முன்பு உயர்வாகப் பேசப்பட்டது. அத்துடன்

*வேட்டைத் தொழில் சிறப்பாகக் கருதப்பட்டது. மீன் பிடித் தொழில் உயர்வாகக் கருதப்பட்டது. ஆடுமாடு மேய்க்கும் தொழிலும் உயர்வாகக் கருதப்பட்டதை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலப்*

*பிரிவுகளும் அவற்றிற்குரிய தொழில்களும் தெளிவு படுத்துகின்றன. முருகன் வேட்டைத்தொழில் செய்யும் கடவுளாகவும், திருமால் மாடுமேய்க்கும் தொழில் செய்யும் கடவுளாகவும், கொற்றவை போர்த்தொழில் செய்யும் கடவுளாகவும், போற்றப்பெற்றனர். இவர்கள் அனைவரும் உழைப்புடன் தொடர்புபடுத்தப்பட்டனர். ஐந்திணைக் கருப்பொருள்களில் எங்கும் பிராமணர் களுக்குரிய கற்றல், கற்பித்தல் பேசப்படவில்லை*[9]

என்பது கருதத்தக்கது. உழவு, வேட்டையாடுதல், மீன்பிடித்தல், கால்நடை மேய்த்தல் ஆகியவற்றில் ஈடுபடும் மக்கள், சமமான தலைமக்களாக ஏற்றுக்கொள்ளப் பெற்றனர் என்பதை,

*குறிஞ்சி: குறவன் குறத்தி; பாலை: எயினன் எயிற்றி;*
*மருதம்: உழவன் உழத்தி; நெய்தல்: நுளையர் நுளைச்சியர்;*
*முல்லை: ஆயர் ஆய்ச்சியர்*[10]

என்பதன் மூலம் உணரலாம்.

நுணுக்கமிக்க பானைவனைதல், நெசவு, தச்சு என்பன, மானுட இனத்தின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றோடு தொடர்புடைய தொழில்களாகவும், கைநுணுக்கம் வாய்ந்ததாகவும் இருந்தன. ஆண்டுகள் செல்லச் செல்ல, இத் தொழிலுக்குரியோர் திருமணம் செய்ய நேரிடும்பொழுது, அந்தந்தத் தொழில்நுணுக்கம் அறிந்தவர்களையே திருமணம் செய்தனர். இத்தொழில்கள், பொருள் நிமித்தமாகவும், இலாபம் நிமித்தமாகவும் உற்பத்தி அதிகமானபொழுது, தொழில்நுணுக்கம் தொழில் இரகசிய மாயிற்று. இத்தொழில் இரகசியத்தை வெளியே விட விரும்பாத கைவினைஞர்கள் அகமணமுறையைக் கட்டாயம் ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு உந்தப்பட்டனர். எனவே காலப்போக்கில் அந்தந்தத் தொழிலை யுடையோர் அந்தந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்போரை மணப்பதும்; வாழ்வதும் வழக்கமாயிற்று. இது காலப்போக்கில், பிறப்பு அடிப்படையில் தீர்மானிக்கின்ற நிலைக்கு வந்தது.

உற்பத்தியோடு தொடர்புடைய உழவர், நெசவாளர் போன்ற மக்களே மேல்நிலையில் இருந்தனர்; அது இயல்பானதும்கூட. ஆயின் அந்நிலை மாற்றப்பட்டது. உழைப்பினுக்குத் தாழ்வு ஊட்டப்பட்டதுடன், உழைக்கும் மக்கள் தொழில் அடிப்படையில் கீழிறக்கப்பெற்றனர். உற்பத்தியோடு தொடர்பில்லாத உழைக்காத மக்கள், மேலேற்றப்பட்டனர். மேல்நிலைக்கு உயர்த்தப்பட்ட அவர்களின் வழிபாடும், மதத்தின் தேவையும் அக்காலக் குழுத்தலைவன் அல்லது மன்னனுக்குத் தேவைப் பட்டன. மன்னன் மகனே மன்னன் என்பதற்குப் பொதுமக்கள்

எதிர்ப்பினை எழுப்பாமல் ஒத்துக்கொள்ள வேண்டுமெனில், மன்னன் மற்றவர்களைக் காட்டிலும் மேலானவன் என்று காட்டப்பட வேண்டும். அவ்வாறு காட்டுவதற்கு, மதம் கைகொடுத்தது. மதம், மன்னனை ஆண்டவன் என்றே அறிவுறுத்தியது. அவனுக்குப் பக்கத்தில், அரசனுக்கு அடுத்த நிலையில், மதத்தைக் கையில் வைத்திருந்த புரோகிதம் இடம்பெற்றது. இயற்கையால் மழைபெய்வதற்கும், பொய்ப்பதற்கும் மன்னனே காரணம் என்று நம்பவைத்தது.

*மன்னன் இறைவனாக்கப்பட்டதை மனுதர்ம சாத்திரம் ஏழாவது அத்தியாயம்.*

- *உலகம் அழியாதிருக்கும் பொருட்டே இறைவன் மன்னனைப் படைத்தான்.*
- *இந்திரன், வாயு, எமன், சூரியன், அக்னி, வருணன், சந்திரன், அழகேசன் ஆகிய திசைக் காவலர்கள் அனைவரின் தன்மைகள் அனைத்தும் ஓர் உருவெடுத்ததுபோல் தோன்றியவனே அரசன்.*
- *அரசன் தனது மகிமையால், அவ்வப்போது தீயாகவும், காற்றாகவும், சூரியனாகவும், சந்திரனாகவும், எமனாகவும், குபேரனாகவும் இருப்பான்*[11]

என்று மிகத் தெளிவாக விரித்துரைக்கிறது.

அரசுரிமை, அரசகுடும்பத்தில் பிறந்தவர் மட்டுமே அடையமுடியும்; ஏனையோர் தடுக்கப்பெற்றனர்.

*வேதங்களைப் பிராமணர் குடும்பத்தில் பிறந்தவர் மட்டுமே ஓதமுடியும், ஏனையோர் ஓதமுடியாது தடுக்கப் பட்டனர். பிறதொழில் செய்தோர் மறைமுகமாக அவ்வத்தொழில் நிலைபெறுமாறு ஆக்கப்பட்டனர். எனவே, சாதியானது அரசவழி தோற்றம்கொண்டு, தொழில்வழி தமிழகத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். இந்நிலைப்பேற்றிற்கு ஆரியர்களின் வரவும் உறவும் பெருங்காரணமாக இருந்தன.*[12]

**4. தமிழகத்திலும், தமிழிலக்கியத்திலும் சாதியம்**

சாதியம் என்பது சாதியைப்பற்றி ஒவ்வொரு சாதியினிடையேயும் காணப்படும் உணர்வாகும். அவ்வவ் மக்கள் குழுவின் தனித்துவத்தைப் பேணுவதற்கான உணர்வாகும். தமிழகத்தைப் பொறுத்தவரையில் குலக் குழுக்களே பெரும்பாலும் சாதிகளாக உருவாகியமையால், சாதிகளின் அகவமைப்பில் உள்ளார்ந்த ஓர் இயைபு காணப்படுகிறது. பங்காளிகள்,

கூட்டம், உறவின்முறை ஆகிய கருதுகோள்கள் இவ்வுண்மையைப் புலப்படுத்தும்.

> *இவ்வண்ணம் இயங்குகின்ற குழுக்கள், ஒன்றோடு ஒன்று தொடர்பு கொள்கின்றபோது, பாரம்பரியமான அதிகார வரையறைகளையும் அந்தஸ்து சின்னங்களையும் பேண விரும்புகின்றன. அத்துடன் அமையாது, அவற்றை, மாறிவரும் சமூகச்சூழ்நிலைகளிலும் நிலை நிறுத்த விரும்புகின்றன. இதுவே சாதியமென்னும் உணர்வும் அவ்வுணர்வின் அடிப்படையாக ஏற்படும் போராட்டங்களும் தோன்றுவதற்கான வாயிலாக அமைகிறது*[13]

என்கிறார் கா.சிவத்தம்பி.

சாதி, மதம், கடவுள், புராணம், மூடநம்பிக்கை ஆகியன இந்தியப் பொருளாதாரத்தை அழிப்பவை. இவற்றின்மீது ஒட்டுண்ணி வாழ்க்கை நடத்தும் சாமி, பூசை, உற்சவம், புண்ணியம், யாத்திரை, சடங்குகள் ஆகியன தனிமனிதர்களின் செல்வத்தையும் விரயமாக்குகின்றன. இந்தியாவின் பொருளாதாரத் துறையைச் சீர்படுத்துவதற்கு வருணாசிரம முறை முதலில் ஒழிய வேண்டும்; இரண்டாவது மதசம்பந்தமான எண்ணங்கள் அகற்றப்பட வேண்டும்; மூன்றாவது, மூடநம்பிக்கை ஒழிக்கப்பட வேண்டும். வேதங்களும் புராணங்களும் மக்களை நால்வகை வருணத்தாராகப் பிரித்து வைத்திருக்கின்றன. அந்த நால்வகையிலும்கூடப் பார்ப்பனர்கள், சூத்திரர்கள் என்ற இரண்டு வகை பிரிவுகள்தான் நடைமுறையில் இருக்கின்றன. 'இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்' என மனித குலத்தை 'இரு சாதி'யாகப் பிரிக்கிறார் ஔவையார். நம்மில் அனைவரும் நாம் உயர்ந்த சாதி என்று எண்ணிக்கொண்டிருக்கிறோம். ஆயின், நடைமுறையில் பார்ப்பனரைத் தவிர மற்ற அனைவரும் சூத்திரர்களாகத்தான் உள்ளோம். அதனால்தான் சில உணவுவிடுதிகளில் பிராமணர்கள் சாப்பிடுமிடம், இதராள்கள் சாப்பிடும் இடம் என்று எழுதி வைக்கப்பட்டிருந்தன. பிராமணர்களைத் தவிர மற்றவர்களனைவரும் இதராள்கள். அஃதாவது சூத்திரர்கள். இந்த மேலாதிக்கத்தைப் பெரியாரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதனால் இதனை எதிர்த்தார். எனினும்,

> *நிர்வாகப் பண்பாட்டு மாற்றங்கள் தமிழ்நாட்டைத் தாக்கத் தொடங்கியபோது, தமிழ்நாட்டின் சாதியமைப்பை, பிராமணர், பிராமணரல்லாதோர், அரிசனங்கள்*[14]

என்று வகுத்துக் கூறுவது மரபாக இருந்தது.

*அரசியல் தன்னை ஆட்கொண் டெழுந்து*
*முரசம் முழங்க முடியும் பூண்டது*
*சாதியின் வலியுடைச் சக்திநம் தமிழகம்*
*மீதில்இன் றிலை* (ப. 323)

என்று கவிஞர் குலோத்துங்கன் கூறுவதுபோல், இந்தியாவில் குறிப்பாக தமிழகத்தில் சாதியம் அரசியல் வன்மையுடைய சக்தியாக மேற் கிளம்பியுள்ளது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆங்கிலேயர்கள் சென்னை நகரத்தை, தென்னாட்டின் அரசியல் தலைமையிடமாக மாற்றினார்கள். இன்றியமையாத பொருளாதார முடிவுகள் அனைத்தும் சென்னையில் முடிவெடுக்கப்பட்டன. கோயில் சொத்துக்களைத் தம்முடைய பிடிக்குள் வைத்திருந்த நிலப்பிரபுக்கள், முதலாளிகள், இவர்களைப் போன்று வேறு பிரிவினர்கள் ஆகியோரின் காரியம் அனைத்தும் அந்தந்த உள்ளூரிலேயே நடந்தேறின. ஆயின் சென்னையைத் தலைமையிடமாக மாற்றிய காரணத்தால் ஆங்கில அதிகாரிகளை அணுகிக் காரியமாற்ற இவர்கட்கு ஆட்கள் தேவைப் பட்டனர். அதே நேரத்தில், சென்னை மாகாண அரசியலின் மைய இடமாகச் சென்னை மாறியதால், அரசியல்வாதிகள் சென்னையில் நிரந்தரமாக வந்து தங்கினர். இவர்கள் பெரும்பாலும் வழக்கறிஞர் களாகவும் ஆங்கில அறிவு மிக்கவர்களாகவும் இருந்தனர். எனவே, இவர்களே மேற்கண்ட செல்வந்தர்களின் காரியங்களைக் செய்து கொடுத்தனர். இதனால் ஆங்கிலேய அதிகாரிகளிடம் நெருக்கமானார்கள். அதே நேரத்தில் ‘உத்தியோகங்களை இந்தியமயமாக்குதல்’ என்ற ஆங்கிலேய அரசின் முடிவிற்கேற்ப இவர்களுக்கு உயர்நீதிமன்ற நீதிபதிகள், மாவட்ட நடுவர்கள், உதவி கலெக்டர்கள், உதவிப் பொறியாளர்கள், ஆட்சிமன்ற உறுப்பினர்கள் போன்ற உயர்ந்த பதவிகள் கொடுக்கப்படுகின்றன. பொதுவாக இவர்களை ‘மைலாப்பூர் குழு’ என்று அழைப்பார்கள். இது ஆரம்பத்தில் காங்கிரசோடு இணைந்திருந்தது. அனைவருமே பிராமணர்களாக இருந்தனர். இக்குழுவினரின் செல்வாக்கு சென்னை மாகாணம் முழுவதும் பரவியது. இவர்கள் உள்ளூர் விவகாரங்களில் தலையிட்டனர். சென்னை மாகாணத்திலுள்ள கோயில்களின் சொத்தைத் தாங்களே அனுபவிக்க, கோவில் சீர்திருத்தம் என்ற பெயரில் ‘தர்மரட்சணசபா’ என்ற சபையை ஆரம்பித்துப் பிராமணர்களைப் பொறுப்பாளர்களாக நியமித்தனர். இதற்கான அங்கீகாரத்தையும் கவர்னரிடம் பெற்றனர். மைலாப்பூர் குழுவை எதிர்த்து பி. தியாகராய செட்டியார், டி.எம். நாயர், ஆர்க்காடு இராமசாமி முதலியார் போன்றவர்கள் செயல்பட்டனர். பின்னர் இராமநாதபுரம், பொப்பிலி, காலஹஸ்தி மன்னர்கள் இக்குழுவில் இணைந்தனர். இவர்கள்

ஆரம்பித்த 'தென்னிந்திய நலவுரிமை சட்டத்தின்' ஒருமித்த குரலாக பிராமண எதிர்ப்பு இருந்தது. எனவே, சமூக வர்க்கங்களில் கூறினால் இது பிராமணர் அல்லாத நிலப்பிரபு - வணிகர் - அறிவாளிகளின் இயக்கமாகும்.

> *தாழ்த்தப்பட்ட சாதியினரைப் 'பறையர்' என்றும் 'பஞ்சமர்' என்றும் அழைக்கப்பட்டு வந்த நிலையை மாற்ற வேண்டும் என்று தாழ்த்தப்பட்டோர் தலைவர்கள் பலர், சென்ற நூற்றாண்டின் தொடக்கத் திலேயே இடைவிடாது வற்புறுத்தி வந்தனர். அக்கோரிக்கையின் பலனாக, அன்றைய சென்னை நகராட்சி மன்றத்தில், நீதிக்கட்சி உறுப்பினர் டாக்டர் நடேசமுதலியார் 1921ஆம் ஆண்டில் கொண்டு வந்த தீர்மானத்திற்கிணங்க, சென்னை நகராட்சி மன்ற ஆவணங்களில் 'ஆதிதிராவிடர்' என்பது இடம்பெற்றது. பின்னர் 1922ல் சென்னை சட்டசபையில் எம்.சி. ராஜா கொண்டு வந்து நிறைவேற்றிய தீர்மானத்தின்படி, தாழ்த்தப்பட்ட சமூகத்தவரை 'ஆதி திராவிடர்' என அரசாங்க ஆவணங்களில் குறிக்க வேண்டும் என்ற ஓர் அரசாணையை அன்றைய நீதிக் கட்சி அரசாங்கம் பிறப்பித்தது. பின்னர், சிலர் எழுப்பிய ஐயப்பாடுகளை நீக்கும் பொருட்டு, அன்றைய சென்னை மாகாணத்தில் இருந்த தமிழ்ப்பகுதிகளிலுள்ள அனைத்துத் தாழ்த்தப்பட்ட சாதியினரையும் இச்சொற்டொடர் குறிக்கும் என்று மற்றொரு அரசாணையைப் பிறப்பித்தது.*[15]

இவ்வாறு பிராமணர் அல்லாதோர் இயக்கம் தொடங்குவதற்கான தளங்கள் இருந்தபோதிலும், இதற்கான தூண்டுதல் வேலைகளும் நடந்தன. மக்களிடையே உள்ள முரண்பாடுகளைத் திசைதிருப்பி, அவற்றைத் தவறான வழியில் கூர்மைப்படுத்தி அவர்களைப் பகை சக்திகளாக்கி மோதவிட்டுத் தாங்கள் என்றென்றும் வசதியாக ஆள்வதற்கு ஆங்கிலேய ஆட்சியாளர் வழிதேடிக்கொண்டிருந்தனர்.

மேலும், 1838இல் தமிழகம் வந்து சமயப்பணி செய்த கால்டுவெல் அவர்கள் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் வெளியிட்டார். இதில் காணப்படும் அரிய - புதுமையான - விஞ்ஞான நீதியான மொழியியல் கருத்துக்களினூடே பார்ப்பனக் காழ்ப்புணர்ச்சி திணிக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது. ஆராய்ந்து பார்த்தால், இத்தகு பிரச்சாரம் தேவையுமிருந்தது. அன்றைய நேரத்தில் வைதிகக் கலாச்சாரத்திற்கு - சரியாகக் கூறின் நிலப்பிரபுத்துவக் கலாச்சாரத்திற்கு - ஆரியர்கள் தலைமை தாங்கிக் கொண்டிருந்தார்கள். அத்தலைமையை மாற்றினாலன்றிக் கிருத்துவம் பரவ வாய்ப்பில்லை என்று உணர்ந்த

பாதிரியார்கள் பார்ப்பனர்களுக்கும் பார்ப்பனர்கள் அல்லாதவர்களுக்கும் இடையே பேதங்களை வளர்த்தனர். இதனைப் பாரதியாரும்,

> *ஹிந்து மதத்தை வேரறுத்து, இந்தியாவில் இருந்து மதத்தை ஊன்றுவதே முக்கிய நோக்கமாகக் கொண்டு வேலை செய்துவரும் பாதிரியார்கள், ஹிந்து மதத்தில் இதுவரை பிராமணர்களே காப்பாளிகளாக இருந்து வருவதைக் கண்டு அந்தப் பிராமணரைப் பிற ஜாதியினர் பகைக்கும்படி செய்தால்தான் தம் நோக்கம் நிறைவேறும் என்று யோசிக்கத் தொடங்கினார்கள். மற்ற ஜாதிப் பிள்ளைகளுக்கு ஹிந்து மதத்தில் துவேஷ புத்தி யுண்டாவதற்கு அடிப்படையாகப் பிராமணத்துவேஷம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமெனக் கருத்துடையோர் இவர்கள்*[6]

என்று கூறுகிறார்.

பிராமண எதிர்ப்புப் போக்கை முன்னிறுத்தித் தமிழகத்தில் நீதிக்கட்சி இயங்க ஆரம்பித்தது. மக்கள் தொகை அடிப்படையில் பிராமணர் அல்லாதவர்களுக்கு வேலைவாய்ப்புக் கொடுக்கவேண்டுமென 1921ஆம் ஆண்டில் கவர்னர் நிர்வாகக் கவுன்சிலுக்குத் தீர்மானம் கொடுத்தனர். இது பின்னர் டாக்டர் சுப்பராயன் அமைச்சரவையில் சட்டமாகியது. இந்த வகுப்புவாரித் தீர்மானத்திற்கு ஆதரவாக 1925இல் காங்கிரசைவிட்டு வெளியேறிச் சுயமரியாதை இயக்கம் கண்டார் பெரியார்.

பெரியார் நீதிக்கட்சிக்கு ஆதரவளித்த பிறகு கிராம மக்களிடம் இவ்வியக்கம் பரவ ஆரம்பித்தது. அதன்பின், பிராமண ரல்லாதார் இயக்கம் சமூகக் கோட்பாடாகவே உருமாறியது.

> *சமூக நீதியுணர்வுடன் முதன்முதலில் இடஒதுக்கீடு சட்டம் தமிழகத்தில்தான் வந்தது. அதுவும் படித்த, பணக்கார, வசதிபடைத்த பெருமக்களின் கட்சியாகக் கருதப்பட்ட நீதிக்கட்சி ஆட்சியில்தான். முற்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த அமைச்சர் சீர்காழி எஸ். முத்தையா முதலியார் தான் இச்சட்டத்தைக் கொணர்ந்தார். காலம் காலமாகப் படிப்பதற்கே அருகதையில்லாதவர்கள் என நாட்டின் பெரும்பான்மை மக்களை ஒதுக்கி வைத்திருந்த அநீதிக்குப் பரிகாரம் காணவே மேல்சாதியினரே மனமுவந்து ஏற்றுக்கொண்ட திட்டம்தான் 'இட ஒதுக்கீட்டுத் திட்டம்' இது அரசியலமைப்புக்கு முரணானது என உச்சநீதிமன்றம் 1950இல் தீர்ப்பளித்த*

*போது, அதற்கு மாற்றாக இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் முதல் திருத்தத்தைப் பண்டித நேருவே முன்னின்று நிறைவேற்றியது, சமூக நீதியைக் காப்பாற்றத் தான். அதனால்தான், 'கல்வியிலும் சமூகத்திலும்' என்ற சட்டவாசகத்தில் 'பொருளாதாரத்திலும்' என்ற சொல்லையும் சேர்க்க வேண்டுமென்று சிலர் வாதிட்ட போது; 'சமூக ஏற்றத்தாழ்வு வேறு; பொருளாதார ஏற்றத் தாழ்வு வேறு; இரண்டையும் குழப்பிக் கொள்ளக் கூடாது' என நேரு தெளிவுபடுத்தினார். எனவே, Educationally and socially backward என்றுதான் சேர்க்கப்பட்டது. Economically என்ற சொல்லை அதில் சேர்க்க நேரு மறுத்து விட்டார். இப்போது மீண்டும் சமூகத்தில் பிற்பட்டோருடன், பொருளாதாரத்தில் நலிந்தோரையும் இணைத்துப் பேசுவது இரு சாராருக்கும் கெடுதலாகவே முடியும்*[17]

என்கிறார் தி. சோமசுந்தர தேவர்.

பிறப்பில் உயர்வு தாழ்வு கூடாது, தீண்டாமை ஒழிப்பு, கோயிலுக்குள் நுழையும் உரிமை, சாதிப்பெயர்களை நீக்குதல், கோயில் பணத்தைச் சமூக நலத்துக்குப் பயன்படுத்துதல், பெண்கள் சமூகநிலையை உயர்த்துதல், பகுத்தறிவு கண்ணோட்டம் போன்ற சமூகக் கலாச்சார வேலைத் திட்டங்களைப் பெரியார் கொண்டு வந்தார். எனவே, பி. தியாகராய செட்டியாரின் நீதிக்கட்சியின் 'பிராமணரல்லாதாருக்கு வேலை' என்ற கொள்கையிலிருந்து 'சமூகக் கலாச்சார நீதியாகப் பிராமணர்களை எதிர்த்தல்' என்பதற்குக் கட்சி திரும்பியது. இது பெரியாரின் வருகையால் தான் செயலூக்கம் பெற்றது. காலந்தோறும் தமிழ் மக்களை நசுக்கிக் கொண்டிருந்த நிலப்பிரபுத்துவக் கலாச்சாரத்திலிருந்து விடுபடவேண்டும் என்றார். இத்தகு சீர்திருத்தக் கருத்துக்கள் பரவப் பரவ, தமிழகத்தின் மூலைமுடுக்குகளில் கலாச்சார ரீதியாக சுரண்டலுக்குள்ளான அரிசனங்கள் - பிற்படுத்தப்பட்ட மக்கள்- சிறுவிவசாயிகள் நிலமற்ற விவசாயிகள் இவர்கள் பின்னே திரண்டார்கள்.

*சுயஉழைப்பின் மூலம் சமூக அந்தஸ்தையும் அதிகாரத்தையும் பெறுவதற்கான சட்ட ஆட்சி (Rule of Law) வாய்ப்புகள் கிடைக்கும் இன்றைய நிலையில், அடிநிலைச் சிதைவுகள் காரணமாகப் புதிய அதிகார வரன்முறை தோன்றும் பொழுதும், பாரம்பரிய சமூகக் கட்டுமானங்கள் (Traditional Super Structures) தமது வலிமையைப் பிரயோகிக்கும் பொழுதும், சாதீயம் ஒரு மனிதப் பிரச்சினையாக மாறுகிறது. அடிப்படையில் பொருளாதாரப் பிரச்சினையாகவும் வெளித் தோற்றத்*

*திற்குப் பண்பாட்டுப் பிரச்சினையாகவும் இது முகிழ்ந்துள்ளது.''*[18]

நாளடைவில் சாதியக் கட்டமைப்பு முறையால் ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள் தனிமனித உரிமைகளை அனுபவிக்க முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டார்கள்.

5. ஊடகங்கள் மூலம் சாதியத் தோற்றம்

முந்தைய பாரம்பரிய இலக்கியத்திலிருந்து புதிய கூறுகளைப் பெற்ற தற்காலத் தமிழ் இலக்கியம் இன்றைய சாதிப் பிரச்சினைகளைப் பற்றிப் பேசக்கூடியதாக இருக்கிறது. இத்தகைய இலக்கிய ஆக்கங்களுக்கு இன்றைய நுகர்வு முறைகளும் புதிய அச்சுப் படைப்புகளும் காரணமாக அமைகின்றன.

> *அச்சு சாதனத்தின் பரப்பல், இலக்கிய ஆக்கத்தை முன் எப்போதுமில்லாத அளவிற்கு நுகர்வுப்பண்டம் (Consumer Product) ஆக்கியது. அது, வாசிப்போர் அனைவரையும் பொதுவாகவும் சிறப்பாகவும் கவருவதாக அமைந்த காரணத்தால், அது ஒரு சமூக ஆவண மாகியது. அத்துடன் படைப்பாளன், வாசகன் இருவரது உலக நோக்கையும் இணைப்பதாக அமைந்தது. அதே வேளையில், இலக்கியத்தில் பொருள் கையாளப்படும் முறைமை, அவ்விலக்கியத்தை வாசிக்கும்பொழுது அதனை ஒரு சமூக வாதமாகவும் (Social argument) ஆக்கியுள்ளது. இவை எல்லாவற்றுக்கும் மேலாக உலகப் பொதுவான வடிவத்தையும் பொருளையும் தமிழ்ப் படுத்தியும் தருவதாக உள்ளது. அத்துடன் வெகுசனத் தொடர்புச் சாதனங்களான பத்திரிகைகள், சஞ்சிகைகள் வானொலி, புத்தகம் என்ற முறையில் அது வெளியாகிறது.*[19]

இவ்வாறு வெளிப்பாட்டு முறையில் தனித்துவம் பெற்றிருக்கும் தற்காலத் தமிழிலக்கியம் ,

1) ஜனநாயகமாக்கப்படுதல்

2) சமயச்சார்பின்மை

எனும் இருபெரும் பொருள்களைத் தனது ஆதாரச் சுருதியாகக் கொண்டுள்ளது.

இன்றைய சனநாயகம் அரசியல் பரிமாணங்களைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. உண்மையான சனநாயக நடைமுறையில் 'மனிதன்' யாவற்றினும் மேலானவனாக வைக்கப்பட்டு அவனுடைய

தேவைகளும் வளர்ச்சியும் முதன்மைப்படுத்தப்படுகின்றன. இச்சமூகச் சனநாயகம் இலக்கியச் சனநாயகத்துக்கு வழிவகுக்கிறது. இப்பெருமாற்றம் தமிழ் பேசும் மனிதனைச் சனநாயக நெறிப்பாட்டிலிருந்து தடுத்து நிறுத்தும் சமூகக்கூறுகளைப்பற்றி இலக்கியத்தில் பேசவைத்துள்ளது. அவற்றுள் ஒன்று தமிழ் மண்ணுக்குரிய சாதியம். எனவே சமயச் சார்பின்மைக் கண்ணோட்டத்தில் சிறிதேனும் ஏற்றுக்கொள்ள முடியாத சாதியம் பிரச்சினைகளாயின. சாதியம் எவ்வாறு மனித உணர்ச்சிப் பிரச்சினையாகலாம் என்பதை அறிந்து கொள்வதற்குத் தற்காலக் கவிதைகளே முக்கியத் திறவுகோலாகும். இதன் அடிப்படையில், குலோத்துங்கன் கவிதைகளில் சாதியம் பற்றி ஆராயப்படுகிறது.

6. சாதி - புரையோடிய புண்

கடந்த 2000 ஆண்டுக்கால வரலாற்றில், ஏறத்தாழ 1300 ஆண்டுகள், அந்நியர் ஆட்சியின்கீழ்த் தமிழினம் நலிவுற்றதெனினும், தமிழினம் என்னும் உணர்வு, மங்காது சுடர்விட்டு ஓங்கியது. சாகாவரம் பெற்றதென நினைத்திருந்த இந்த உணர்வுக்கு இன்று, சாதி எனும் உருவில் பெரும் ஆபத்து வருகிறதோ என்ற கவலை அனைவரின் நெஞ்சையும் அரிக்கிறது. இதனை,

*பேரினம் முந்தை நாளில்*
*பிரளயம் கண்ட துண்டு*
*வாரியின் சீற்றம் பொங்கி*
*வழிந்த நாள்மீண் டதுண்டு.*

*காட்டிடை வளர்ந்த யானை*
*கடலெனத் திரண்டு வந்து*
*நாட்டினைச் சூழ்ந்த தன்ன*
*நாற்புறம் பகைவர் வந்து*

*தாக்கிய காலம் இந்தத்*
*தமிழினம் வென்ற துண்டு*
*தீக்குணம் அனைத்தி னுள்ளும்*
*தீயதாம் சாதிப் பற்றின்*
*நஞ்சினால் தமிழ்ச் சாதி*
*நசியுமோ என்ப தெண்ணி*
*அஞ்சினேன் அஞ்சினேன்....* (ப. 326)

என்று பாடுகிறார். என்றைக்கோ காலாவதியாகி இருக்க வேண்டிய எத்தனையோ சுமைகளை மரபின் காரணத்தாலோ, முன்னோர்கள் வழியின் காரணத்தாலோ, தரமற்றது என்று தெரிந்திருந்தும் இன்றும் தோளில் தாங்கிக்கொண்டு சுமை என்று தெரிந்தவற்றையும், இறக்கி

வைக்காது, சுமந்து கொண்டிருக்கிறோம். இறக்கி வைக்க விரும்பிய வற்றையும் இறக்கி வைக்க இயலவில்லை.

*மரபென்பர்; முன்னோர்கள் வகுத்துத் தந்த*
*வழியென்பர்; கண்மூடி வழக்கம் கோடி*
*தரமெதுவும் அறியாது தோளில் ஏற்றித்*
*தாங்குவதற் கேற்ற 'சுமை தாங்கி' யாக* (ப. 578)

நமது சமுதாயம் இருக்கிறது. இவை அனைத்திற்கும் மேலாக,

*சாதியெனும் பெரும்பாரம் தாங்கி நிற்கும்*
*சமுதாயச் 'சுமைதாங்கி' நாங்கள்; எம்மோர்*
*ஆதிமுதல் கண்டபிணி புதுமை என்னும்*
*அருமருந்து தீர்க்குமென அறிஞர் சொன்ன*
*சோதிடமும் பொய்யாகி, நாட்கள் தோறும்*
*சுமை இன்னும் கனமாகி, அசைந்து செல்லும்*
*மேதியினும் கதிகுன்றி நனைத்துத் தூக்கும்*
*வீண்செயலில் ஆற்றலெல்லாம் விரயம்* (ப. 577)

செய்துகொண்டிருக்கிறோம் என்பது தலைமுறை தலைமுறையாக நலியும் நமது சமுதாயத்தின் அழுகுரலாக உள்ளது. சாதி எனும் நலிவினைப் போக்குவதற்குத் தனிமனிதர்களும், இயக்கங்களும் முயன்றனர். ஆயினும் சாதியானது முழுமையாக ஒழியாது, வேர்விட்டு, கிளைபரப்பிக் கொண்டே இருக்கிறது. முன்னேற்றப் பயணத்தில் ஓர் இயக்கம் மூன்று வகையான மேம்பாட்டிற்குத் துணைபுரியலாம். அவை,

1) சமுதாய முன்னேற்றம்

2) அரசியல் முன்னேற்றம்

3) பொருளாதார முன்னேற்றம்.

இதுவரை பொருளாதார முன்னேற்றம்பற்றி மட்டும் சிந்திக்கப்பட்டது. அதற்கு

*அளவுகோல்களாக வாழ்க்கைத்தரம், தனியார் வருமானம், தேசிய உற்பத்தி போன்றவைகள் உருவாக்கப்பட்டன*[20]

என்கிறார் குழந்தைசாமி.

*அண்மைக் காலத்தில்தான் மனித மேம்பாட்டிற்கு - பொருளாதார வளர்ச்சி மட்டும் போதாது, சமுதாய முன்னேற்றமும் அரசியல் முன்னேற்றமும் தேவை என்பது உணரப்பட்டிருக்கிறது.*[21]

சமுதாயம் வளர்ச்சியை நோக்கிய பாதையில் நின்று பீடுநடை யிட்டுத் தொடர்ந்து செல்லவும், காலத்திற்கேற்பத் தன்னை வலுப்படுத்திக் கொள்ளவும் ஒருவனுக்குக்

*கல்வியும் தனிமனித உரிமையும் உரைகல்லாகவும் தேவையுமாக ஏற்றுக்கொள்ளப்பட்டன*[22]

என்கிறார் சுந்தர வடிவேலு.

இந்தியாவைப் பொறுத்தவரை, பொருளாதார இயக்கங்கள், அரசியல் இயக்கங்கள் ஆகியவற்றிற்கு நீண்ட வரலாறு கிடையாது. மேல்நாட்டுக் கல்வி, சிந்தனை, ஆட்சிமுறை ஆகியவற்றின் தாக்கத்திற்கு உட்பட்டபொழுதுதான், பரவலான பொருளாதார விழிப்புணர்ச்சியும் அவை தொடர்பான இயக்கங்களும் ஆங்காங்கே உருவாயின. ஆனால், சமய - சமுதாய சீர்திருத்த இயக்கங்களுக்கு நீண்ட வரலாறு உள்ளது. அது புத்தர், மகாவீரர் காலத்திலிருந்து தொடங்குகிறது. அதன்பின் வந்த பக்தி இயக்கத்தினால், நாடு முழுவதும் பரவலாகப் பலர் சமய - சமுதாயச் சீர்திருத்தங்களைச் செய்ததைத் தொடர்ந்து, தமிழகத்தில் ஆழ்வார்கள், நாயன்மார்களின் பங்கும் அதன்பின்னர், சித்தர்களின் பங்கும் போற்றத்தக்கதாக அமைந்தன.

இந்தியாவின் பிறபகுதிகளில் கபீர், குருநானக், பசவண்ணா, சைத்தன்யர் போன்றவர்கள் குறிப்பிடத்தக்க சமுதாயத்தொண்டு செய்தவர்களாவர். ராஜாராம் மோகன்ராய், தயானந்த சரசுவதி, இராமலிங்க அடிகளார், நாராயணகுரு, அம்பேத்கார் , பெரியார் போன்றவர்கள் பல சமுதாய இயக்கங்களைத் தோற்றுவித்தவர்களாவர். இதனை,

*……………; மானிடர் கருவினி லிருந்தே*
*பேதம் தாங்கிப் பிறப்பவர் என்னும்*
*வேதம் மறுத்த மெய்யறி வாளர்*
*வாழ்ந்த மண்ணிது; வாழ்வியல் கூறுகள்*
*ஆழ்ந்து தெளிந்த ஆன்றோர், சான்றோர்*
*வள்ளுவர் வழிவழி வந்தவர் தாய்நிலம்.*
*தெள்ளிய ஞானச் சித்தர் தொடர்ந்து*
*சத்திய ஞானச் சபையின் தந்தை; இப்*
*புத்துல கத்தின் புலவன் பாரதி;*
*கடலையும் கலக்கிக் காட்டையும் தாக்கித்*
*தடையென நிற்பன தகர்த்து யாவையும்*
*அடிமுதல் நுனிவரை அசைத்துப் புதுயுக*
*விடியலில் தமிழகம் விழித்தெழச் செய்யும்*

*புயலென வந்து, புரையெனும் சாதியின்*
*உயர்வு தாழ்வெனும் உணர்வினை வேரோடு*
*அழித்து சமநிலை அடிப்படை கண்டிட*
*உழைத்த பெரியார் உதித்த நாடு . . . .* (ப. 386)

என்கிறார் குலோத்துங்கன். தமிழகத்தில் சாதிப்பிரிவுகளுக்கு அதன் ஆரம்பக் காலம் முதல் எதிர்ப்பு இருந்து வந்துள்ளது. சாதி எதிர்ப்பு இயக்கத்தை திருவள்ளுவர் தொடங்கி வைத்தவர்களில் முதலானவராகிறார்.

*பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்*[23]

என்ற தனது குறள் வாயிலாக, வர்ணாசிரமத்தின் அடிப்படைகளைத் தகர்த்து விடுகின்றார். மனுவின் காலக்கட்டத்திற்கு முன்பே சாதியானது பிறப்பால் வருவதென்பதும் மனிதர்களுக்கு உயர்வு தாழ்வும் பிறப்பிலேயே அமைந்து விடுகிறது என்ற வைதீக மரபு வள்ளுவர் காலத்திலேயே தமிழகத்தில் இடம்பெற்றுவிட்டது. நீண்டகாலமாக இம்மரபு தொடர்ந்ததெனினும்

*யாரும் மக்கள் மன்றத்துக்குச் சென்று, எந்த ஓர் இயக்கத்தையும் ஆரம்பிக்கவில்லை. இதில் முன்னோடியாக இருந்தவர் 19ஆம் நூற்றாண்டில் தோன்றிய இராமலிங்க அடிகளார் சமுதாயம், சமயம் ஆகிய துறைகளில் மாற்றங்களைக் காணச் சாதி, குலம், இனம், மொழி, சமயம் என்ற எல்லைகளுக்கு அப்பாற்பட்ட சீர்திருத்த வாதியாகத் திகழ்ந்தவராவர்.*[24]

ஆனால் இன்றைக்கும்கூட உணர்ச்சிக்கு முதன்மை யளித்து வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் தமிழர்கள்.

*சாதிவெறி, மதவெறி, இனவெறி, மொழிவெறி ஆகியவை தனிப்பட்ட சிலரது ஆதாயத்துக்காகத் தூண்டப்படும் போது சுலபமாக உணர்ச்சி வசப்படும் நிலையில் தமிழர்கள் இருக்கிறார்கள்*[25]

என்பது நடைமுறை உண்மையாக உள்ளது.

*சிந்தனை செய்ய ஆரம்பிப்பது மிகவும் சுலபமான காரியம் அல்ல; ஆனால் ஒரு முறை மனிதன் சிந்திக்க ஆரம்பித்துவிட்டால் பிறகு அவன் சிந்திக்கும் பழக்கத்தைக் கைவிட மாட்டான்*[26]

என்ற ரூசோவின் கூற்று இன்றைக்குத் தேவையான ஒன்றாகும்.

*சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தேன்*
*சாத்திரக் குப்பையும் தணந்தேன்.*[27]

என்கிறார் வள்ளலார்.

*எவ்வகை வேறுபாடுமில்லாத உலக சமுதாய அமைப்பே வள்ளலாரின் சமுதாயக் கோட்பாடு.*[28]

உயரிய சமத்துவக் கோட்பாட்டிற்குக் குரலெழுப்பினார். திருவள்ளுவரையும் திருமூலரையும் வள்ளலாரையும் பெரியாரையும் ஈன்றெடுத்த தமிழ்மண்ணில் இன்று, மனிதனை மனிதன் கீழ்மைப்படுத்தும் கொடுமை கண்டு ஒவ்வொருவரும் வெட்கித் தலைகுனிய வேண்டும். நாட்டில் நிலவும் ஏற்றத் தாழ்வுகள் நீங்க வேண்டுமாயின்,

*நம் நாட்டில் பரம்பரைத் தொழில்முறை ஒழிந்து, யாவரும் சாதிவகுப்பு சம்பந்தமான உயர்வு தாழ்வு இல்லாமல் சமுதாயத்திலும் சட்டத்திலும் சமஉரிமை, சமவாய்ப்பு, சமவிநியோகம் போன்ற சலுகைகளைப் பெற்றுச் சமவாழ்வு வாழச்செய்ய வேண்டும்*[29]

என்ற வள்ளலார், மனித சமுதாயத்தின் மனக்கவலை ஏற்படுவதற்கு முதற்காரணம் சமத்துவம் இல்லாத தன்மையேயாகும் என்பதை உணர்ந்து, அவற்றின் முரண்பாடுகளைக் களைய முனைந்தார். 20 ஆம் நூற்றாண்டில் மனிதநேயத்தை (Humanism), உயர்ந்த பண்புகளின் சிகரமாக வைத்துச் சிறப்பித்து,

*வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய*[30]

அவர், ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே உலகம் கண்ட தலை சிறந்த மனிதநேயவாதி (Humanist). எனினும், அவர் மக்களின் ஏற்பைப் பெறாத நிலையில்,

*கடை விரித்தேன் கொள்வாரில்லை*
*கட்டிக் கொண்டேன்*

என்று மனம் வெறுத்த நிலையில் கூறினார். சமயச் சீர்திருத்த இயக்கங்கள் சமய அடிப்படையிலமைந்த பழக்க வழக்கங்களையும் மூடநம்பிக்கை களையும் அநீதிகளையும் எதிர்க்கும் இயக்கங்களாக இருப்பினும் பொதுவாக இவை சாதியமைப்பை எதிர்த்த இயக்கங்களாகும்.

7. சாதிய - வர்ணாசிரம எதிர்ப்பு

இந்து சமயமும் சாதியும் இரண்டறப் பிணைந்த ஒன்றாதலின், இந்து சமயத்திலிருந்து கொண்டே சாதியை ஒழிக்க இயலாது என்பது ஒருசாரார் கருத்தாகும். அதனால்தான் சாதியை எதிர்த்த கௌதமர்,

புத்தர் ஆனார்; மகாவீரர், சமணர் ஆனார்; குருநானக், சீக்கியரானார். தமது வாழ்க்கையின் இறுதிப் பகுதியில் அம்பேத்கார் புத்த மதத்தைத் தழுவினார். பெரியார் பன்முறை தாமும் தமது தொண்டர்களும் வேறுமதத்தைத் தழுவ வேண்டியிருக்கும் என்று எச்சரித்தார். ஆனால் ஆழ்ந்த பகுத்தறிவுவாதியான அவர் நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்த எந்த ஓர் ஏற்பாட்டையும் ஏற்க இயலாதவர். எனவே, மதம் மாறுவோம் எனக் கூறினும் அதனைத் தீவிரமாகச் செயல்படுத்த அவர் எண்ணவில்லை. பெரியாரின் சுயமரியாதைக் கொள்கையானது, சமுதாயத்தில் பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் இடையே உள்ள, பிறவி, உயர்வு, தாழ்வு கற்பிப்பதை ஒழிப்பதே நோக்கமாகக் கொண்டதாகும். எனவே, சமூகத்தில் மனிதரிடையே ஏற்றத் தாழ்வுகளை நியாயப்படுத்தும் இந்து மதத்தை, தன்னுடைய முதன்மைத்தாக்குதல் இலக்காகக் கொண்டு, "சாதிக்கு அடிப்படை இந்துமதம் என்னும் சாதிமுறையின் உருவாக்கத்தை வேதம் இதிகாசம் புராணம் முதலான கட்டுக் கதைகளில்"[31] காணும் சாதி, இந்து சமயத்தோடும் ஆரிய இனக் கொள்கையோடும் தொடர்பு கொண்டிருந்தது என்பதை வெளிப் படுத்தினார். இந்து மதத்திலுள்ள தீண்டாமைக் கொடுமையால்தான் சிலர் மதம் மாறுகின்றனர். 'பாப்பாப்பட்டி', 'கீரிப்பட்டி'களே இதற்குச் சான்று. 'கண்டதேவி'யில் தாழ்த்தப்பட்ட மக்கள் தேர் இழுக்கத் தடுத்த போது எந்த இந்து மதத் தலைவர்களும் இச்செயலை எதிர்க்கவில்லை.

சிலர், தம்மை உயர்வாக நினைத்ததும் வேறு சிலர் தம்மைப் பற்றித் தாழ்வு மனப்பான்மையுடன் இருந்ததும் தொடர்ந்து வந்ததைக் கண்டதனால் ஆவேசமுற்ற பெரியார்

> *மதம் சாதிக்குக் காரணமாக இருப்பதெனக் கருதப்பட்டால் மதத்தை ஒழிக்க வேண்டும், இன்றேல் மதத்தைவிட்டு விலகியாக வேண்டும்*[32]

என்று பேசி உணர்வுகளை உறக்கத்திலிருந்து எழச்செய்தார்.

> *கலப்பு மணம், சாதிக்குறிகளை நீக்குதல், சாதிப் பட்டங்களைக் கைவிடுதல் ஆகியவற்றால் சாதி ஒழியும்*[33]

என்பதை வலியுறுத்தினார். தனிமனிதக் கொள்கை, வாழ்வியல் கோட்பாடு, சமூகப் பார்வை போன்றவற்றால் ஒத்த கருத்துடைய ஆணும் பெண்ணும் காதலித்துத் திருமணம் செய்துகொண்டால் தங்களுடைய திருமணத்தை அங்கீகரிக்கச் சமுதாயத்தை அல்லது சுற்றத்தை அணுகும்போது எதிர்மறையான விளைவுகளைத்தான் சந்திக்க நேரிடும் என்று பயந்தொதுங்கிடக் கூடாது என்பதை முதலில் வெளியிட்டவரும் பெரியார்தான். அதுபோல,

*கீழ்ச்சாதித் தன்மை விடுபட வேண்டுமானால், இந்துசமயம், பார்ப்பனியச் சடங்குகளிலிருந்து விடுபட வேண்டும்*[34]

என்று தனது கருத்தைக் கடுமையாக வெளிப்படுத்தினார். கௌரவத்தின் குறியீடாகச் சாதிமுறை இருக்கும்வரை சுதந்திரச் சமுதாயம் என்பது பொருளற்றதாகவே இருக்குமாதலால்,

*தமிழ்நாட்டிற்குச் சுதந்திரம் வந்தால் உடனே சாதியை ஒழித்துவிட முடியும்*[35]

என்று சாதிய எதிர்ப்புக்காகத் தமிழகப் பிரிவினை போன்றதொரு கருத்தைத் துணிவுடன் பெரியார் தெரிவித்தார்.

*பார்ப்பனச் சாதிக்கு நிகராகச் சூத்திரச்சாதி பங்கேற்க முடியாத தடைகளை ஒழிப்பதன்மூலம், சாதியின் கொடுமைகளைப் பெருமளவிற்கு ஒழிக்கமுடியும் என்றும் நம்பினார்.*[36]

இருப்பினும் காந்தியடிகள் கோட்சேயால் கொலை செய்யப்பட்டபொழுது இந்த நாட்டின் பெயரைக் காந்திநாடு என அறிவிக்க வேண்டும்; இந்து சமயத்தின் பெயரைக் காந்திமதம் என அறிவிக்க வேண்டும் என அறிக்கை விடுத்தார்.

*இந்து மதத்தைக் காப்பாற்றிக்கொண்டு சாதியை ஒழிப்பதென்பது இயலாத ஒன்று என அவர் கருதியதால் தான் அவரது சாதி எதிர்ப்பு இந்துமத எதிர்ப்பாக உருவெடுத்தது*[37]

என்பதை மறுப்பதற்கில்லை.

இந்து சமயத்தில் இருந்துகொண்டே அதனை நவீனப்படுத்திச் சாதியை ஒழிக்க முடியும் என்று இராமானுஜர், தயானந்த சரஸ்வதி, நாராயணகுரு, விவேகானந்தர், பாரதியார், காந்தியடிகள் போன்றவர்கள் நம்பினார்கள். பேதமில்லா அன்பே மனிதத்துவம் என்றும்,

*ஒன்று பரம்பொருள்*
*நாமதன் மக்கள்*
*உலகு இன்பக்கேணி*[38]

என்றும் ஒருமையுணர்வு ஓங்கிடப் பாடினார் பாரதி 'எனது', 'உனது' என்று பிரித்துப்பார்த்தால் உறவுகள் மட்டுமல்ல, ஊரும் நாடும் பிளவுபட்டுப் போகும் என்று இன்றைய நமது 'தலைவர்கள்' கூறும் சிந்தனையை அன்றே பாரதியார் தனியாக ஓங்கிக் குரலெழுப்பி,

*ஏழையென்றும் அடிமையென்றும்*
*எவனுமில்லை ஜாதியில்,*
*இழிவு கொண்ட மனிதரென்பது*
*இந்தியாவில் இல்லையே!*[39]

என்று கம்பீரமாகக் கனவுலகில் வாழ்ந்தார் பாரதி.

நீண்டகால அளவில், இவ்வாறு சிறியதும் பெரியதுமான முயற்சிகள் அனைத்தும் ‘சாதி எதிர்ப்பு’ என்ற அளவிலேயே நின்று விட்டன. சாதி ஒழிப்புத் திட்டமாக உருப்பெறவில்லை. ‘ஆலய நுழைவு’ போன்றவையும் தாழ்த்தப்பட்டவர்களின் உரிமையை - சமத்துவத்தை நிலைநாட்டுவதாக அமைந்தவையே. விடுதலைபெற்ற இந்தியாவின் அரசியலமைப்பால்கூடத் தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிட்டது என்று கூறும் நிலை அன்றுமில்லை இன்றுமில்லை. சாதி எதிர்ப்பு, சாதி ஒழிப்புக்கான சில நடவடிக்கைகளையும் ஊக்குவித்தார் பெரியார். கலப்பு மணத்திற்குச் சமுதாய ஏற்புநிலை உருவாக்கப் பாடுபட்டார்.

பிரிக்கமுடியாத நிலையில் உடம்போடும் உயிரோடும் ஒன்றிக் கலந்த நோயைப் போன்று இழிவுமிக்கதாகச் சாதி, இறுக்கம் பெற்றுள்ள நிலையை,

*உடம்பொடும் உயிரொடும் ஒன்றிய பிணியென*
*இடம்பெறும் நெஞ்செலாம் இழிக்கும் சாதியின்*
*கீழ்மையில் தமிழினம் கெடுவதும், உளுத்துத்*
*தாழ்வதும் பார்த்திடத் தாங்குவ தாற்றிலம்*
*நெருப்பின் மெழுகெனும் நெஞ்சொடும், நிறைந்த*
*பொறுப்பின் சுமையொடும் புகலுவம்; இஃது*
*சத்தியம் : வேரொடும், தளிரொடும், முளைக்கும்*
*வித்தொடும் சாதியை வீழ்த்துவ தின்றேல்*
*சாதித் தழல்தனில் தமிழினம் வெந்தது*
*ஆதிக் குடியினர் அமரரின் றாயினர்* (பக். 323 - 324)

என்று குலோத்துங்கன் உணர்த்துகிறார். சாதியை வேரோடு ஒழிக்கா விட்டால், தமிழினம் சாதித்தீயால் வெந்துவிடும். நெருப்பில் கரையும் மெழுகுவர்த்தியின் தன்மையைப் போலச் சாதித்தீயில் கரையும் நெஞ்சங்கள், பொறுப்புடன் பணியாற்றினால் சாதியை ஒழிக்கலாம். ஆயின் நம்மில் பலர் சொல்வேறு செயல்வேறாக உள்ளனர்.

*மேடைஓ ருலகம் வீடோ ருலகம்*
*நாடகம் இன்றுநம் நடைமுறை யானது* (ப. 323)

என்று சமுதாயத்தை எள்ளி நகையாடுகிறார். அரசியல் என்பது; கொள்கையையும் குறிக்கோளையும் அடையும் வழி என்ற நிலை

வகுக்கப்பட்டு இருந்தது. இன்று, அந்நிலையானது மாறிவிட்டது; கட்சி நலனுக்காக எவ்வகை வேற்றுமையையும் வளர்க்கலாம் என்னும் நிலை பெருகிவிட்டது. இதனை

*உண்மை முற்றும்*
*கண்டதுபோல், மதம்பேசிக்*
*கொள்கை பேசிக்*
*கண்மூடிக் கருத்துலகக்*
*கதவு மூடிச்*
*சண்டையிடும் மானிடமே* (ப. 197)

என்று கூறி வேதனையுறுகிறார் குலோத்துங்கன்.

கடந்த 200 ஆண்டுகளில் இந்தியச் சமுதாயம் பல துறைகளிலும் விழிப்புற்றிருந்த காலமாகும். இக்காலப் பகுதியில், சாதி ஒழிப்பையும் சமுதாயச் சீர்திருத்தத்தையும் விரைவுபடுத்தி இருக்கலாம் என்பது சிலரின் கருத்து. ஆனால் தேசியத் தலைவர்கள், நமது தேவைகளில் முதலிடத்தைச் சுதந்திரத்திற்கும் அடுத்ததாகச் சமுதாயநீதிக்கு என்றும் வகுத்துக் கொண்டு செயல்பட்டார்கள். சுதந்திரப் போராட்டத்தோடு சமுதாயநீதிப் பிரச்சினையைக் கலந்தால், கருத்து வேற்றுமைகளுக்கு இடமேற்படும். அதன் காரணமாகச் சுதந்திரப் போராட்ட வேகம் குன்றும் என்று அச்சமுற்றார்கள். வடஇந்தியாவில் அம்பேத்கரும், தமிழகத்தில் பெரியாரும் அரசியல் விடுதலை, சமுதாயநீதி ஆகிய இரண்டும் ஒரே சமயத்தில் உறுதிப்படுத்தப்பட வேண்டும் என்று போராடினார்கள். தேசியம், சாதிஒழிப்பைத் தடுக்காவிட்டாலும், அதற்கான முயற்சிகளைத் தள்ளிப்போட உதவும் முறையில் அமைந்தது.

**8.** சமுதாய நீதி

இன்றைய சூழ்நிலையில், அரசியல் கட்சிகள் அனைத்தையும் ஆட்கொண்ட பிரச்சினையாகச் சமுதாயநீதி உருவெடுத்துள்ளது.

*சாதிகளுக்கு அவரவர் மக்கள் தொகைக்கு ஏற்பக் கல்வியிலும் வேலை வாய்ப்பிலும் இடங்களை ஒதுக்கீடு செய்வதன் மூலம், அந்தந்தத் தடைகளைக் களைந்து சாதிக்கேட்டை ஒழிக்க முடியும்*[40]

என்ற பெரியார், சமுதாய நீதிக்கு வழிவகை செய்தார். பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட சமுதாயங்களுக்கு மேம்பாட்டுத் திட்டப்பணிகளில் பங்கு என்ற கொள்கையானது அடிப்படையாக ஏற்கப்பட்டிருக்கிறது. இதனைச் செயல்படுத்த உருவாக்கப்பட்டதுதான் ‘இடஒதுக்கீட்டுக் கொள்கை’. இது தற்காலிகமானது; ஆயினும் நடைமுறையில் தேவையானதும்

தவிர்க்க முடியாததும் ஆகும். இதனால் ஏற்றத்தாழ்வுகள் குறைந்தாலும், சாதி அமைப்புகளை இது புத்துயிர் பெறச் செய்து விடுகின்றது.

*ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உயர்குலத்தோர் எனப்பட்டவர்கள் பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப் பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களை மனிதர்களாகக்கூட மதிக்கத் தயாராக இல்லை என்பது வரலாறு. இட ஒதுக்கீட்டை எதிர்த்துத் தொடரப்பட்ட வழக்கை 1950ல் விசாரித்த உயர்நீதிமன்ற நீதிபதிகளும், உச்சநீதிமன்ற நீதிபதிகளும் தயவு தாட்சண்யமின்றி இட ஒதுக்கீட்டு முறையைச் செல்லாததாக்க முடிந்தது. பெரியார் என்ற ஒரு மனிதர் இல்லாதிருந்தால் இட ஒதுக்கீட்டு முறையில் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு, அரசியல் சட்டதிருத்தம் மூலம் விடிவு ஏற்பட்டிருக்காது.*[41]

எந்தச் சாதியை ஒழிக்க, சமுதாயநீதி கோரப்பட்டதோ, அந்தச்சமுதாய நீதியின் பெயரிலேயே, ‘சாதி’ மறுபிறவி எடுப்பதுபோல் அமைகிறது. இதனை,

*அமுதூறும் என்றெண்ணிக்*
*கடைந்த பாலில்*
*அரவத்தின் நஞ்சன்று,*
*விளைந்தாற் போன்று*
*சமுதாய நீதிக்கென்*
*றிறைத்த நீரில்*
*சாதியெனும் களைவளரும்*
*தன்மை கண்டோம்* (ப. 330)

என்று குலோத்துங்கன் குறிப்பிடுகிறார்.

அரசியல், ஆட்சிமுறை, பொருளாதாரக்கொள்கை, சமுதாயநீதி என்பவை காலந்தோறும் மாறுந்தகையன. எனவே, சில குறுகியகாலப் பிரச்சினைகளின் தீர்வுக்காக நீண்டகால அமைப்புகளையும், அடிப்படைகளையும் பலியிட்டுவிடக்கூடாது. தமிழ்ச் சமுதாயம் தன் முன்னேற்றப் பயணத்தில் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும் தமிழ் உணர்வுக்கு விரோதமாகவோ சாதிஉணர்வுக்குச் சாதகமாகவோ அமைந்துவிடாத வண்ணம் எச்சரிக்கையுணர்வுடன் செயல்பட வேண்டும்.

தமிழ்ச் சமுதாயத்தில் 17 வயது முடிந்தவர்கள், தகுதியிருப்பின் கல்லூரிப்படிப்புக்குச் செல்ல இயலும். அவ்வயதில் நூற்றுக்கு ஆறுபேர் மட்டுமே இன்று கல்லூரிக்குச் செல்கிறார்கள். மீதி 94 பேருக்கு அவ்வசதி இல்லை. ஒரு குடும்பத்தில் இரண்டு தலைமுறையினர் பல்கலைக்கழகப்

பட்டம் பெற்றிருந்தால் அது பெரியதொரு வாய்ப்பாகும். அக்குடும்பத்தின் வாரிசு கல்வியில் பிற்பட்டவராக எண்ணமுடியாது; சமுதாயத்தில் பின்தங்கியவராகவும் எண்ண இயலாது. சாதிதான் பிறப்பிலேயே வந்தது; மாற்ற இயலாதது; முன்னோர்கள் உருவாக்கியது. ஆயின் நம்மால் உருவாக்கிய பின்தங்கிய பிரிவும் 'பிறப்பால் அமைந்து' தலைமுறை தலைமுறையாகச் சாதிபோல் மாற்ற இயலாததாகிவிடக் கூடாது.

கல்வி வளர்ச்சி காரணமாகவோ, பொருளாதார வளர்ச்சி காரணமாகவோ, தானாகச் சாதி ஒழியும் என்று நம்புவதற்கு இல்லை; கற்றவர்களும் செல்வர்களும் சாதியைக் கைவிடவில்லை. அவர்களில் பலர் சாதி உணர்வை வலுப்படுத்தவும் துணைபுரிகிறார்கள். இதனை,

*கற்றவர் பல்கலைக் கழகப் பட்டமும்*
*பெற்றவர் சாதியைப் பேணுதல் ஒழியார்* (ப. 351)

என்றும்,

*பதவிதேடுவர், பதவியி லுள்ளோர்*
*உதவிநாடுவர், உள்ளம் சிறுத்துக்*
*குலத்திற் சாதியிற் குழுமுவா;* (ப. 351)

என்றும் புலப்படுத்துவார். தமிழ்ச் சமுதாயத்தில் பெரும்பாலோர், உண்மையான தூய உள்ளத்தோடு சாதியை எதிர்க்காமல் போலிகளாக மாறிவிட்டிருந்தாலும், சமுதாய முன்னேற்றத்தில் கவிஞர் அவநம்பிக்கை கொள்ளவில்லை.

*சாதி யென்பது தமிழ்மர பன்று, இது*
*ஆதியி லிருந்தே அறிஞரும் பெரியரும்*
*திருத்தம் வேண்டாத் தெளிவுடன் கூறிய*
*கருத்து........* (ப. 386)

என்பதில் நம்பிக்கையுடைய சாதியை எதிர்க்கும் சில மனிதர்களாவது நம்மில் இருப்பார்களென மகிழ்கிறார். இத்தகையவர்களுடைய ஒற்றுமையினாலும் போராட்டங்களினாலும் சாதியை ஓரளவு ஒழிக்கலாம் என்ற எண்ணம் கொள்கிறார். முற்றிலும் சாதியை ஒழிப்பது பற்றி,

*சாதியை விடுத்த தமிழர் யாரடா?*
*வேதியர் சாதியை விடுப்பினும், அரசியல்*
*வாதியர் சாதியை வரமெனத் தாங்குவர்;*
*சாதியை வைத்துத் தலைவர் வாழுவர்;*
*சாதிகள் என்றடா தமிழகத் தொழிவது!* (ப. 323)

என்று வேதனையுடன் கேள்வியை எழுப்புகிறார்.

*சாதித் தீயின் கொடுமையை எண்ணி எண்ணியே கவிஞர் அனைத்துத் தமிழர்களையும் ஒட்டு மொத்தமாகச் சாடுகிறார். ஒரு காலத்தில், சாதி வேற்றுமைக்குக் காரணமாக இருந்தவர்கள் இன்றைக்குச் சாதியை விட்டுவிடினும், அரசியல்வாதிகளும் கட்சித்தலைவர்களும் விடமறுப்பதுடன், அதனை வியாபாரமாக்கியும் அதனை வைத்தே வாழுகின்றவர்களாகவும் இருக்கிறார்கள்*[42]

என்று வெளிப்படையாகவே சாடுகின்றார் புலவர் பா. வீரமணி. உழைத்த கூலியைக் கேட்டதற்காக உயிருடன் எரிக்கப்பட்ட 'கீழ்வெண்மணி'களும், நீரில் மூழ்கடித்துக் கொல்லப்பட்ட 'தாமிரபரணி'களும், மனிதக் கழிவை வாயில் திணித்த 'திண்ணியங்'களும், மக்களாட்சி உரிமையைப் படுகொலை செய்யப்பட்ட 'பாப்பாப்பட்டி'களும் 'கீரிப்பட்டி'களும் அடிப்படை உரிமைகளை மறுக்கும் நிலையில் இருக்க நாகரிக வளர்ச்சியும் மனிதநேயமும் வளர்ந்துள்ளதாகக் கருத இயலாது.

தமிழர்களின் ஒற்றுமையின்மையும் விழிப்பின்மையும் நினைத்துப்பார்த்த பாரதியார்,

*விதியே விதியே தமிழச்சாதியை எவ்வகை விதித்தாயென்*[43]

என நொந்து பாடினார். தமிழகத்தைப் பொறுத்தவரை பிற்படுத்தப் பட்டோர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர் ஆகிய பிரிவினரிலும் கல்வி, பதவி இரண்டிலும் ஒவ்வொரு இடத்திற்கும் போட்டியிடும் தகுதிவாய்ந்தோர் பலர் உள்ளனர். எனவே, ஒவ்வொரு சாதியிலும் முன்னேறியவர்கள், மற்றவர்களுக்கு வழிவிடுவதும், வழிவிடச் செய்வதும் சமுதாய நீதியை வலுப்படச் செய்வதாகும். கவிஞர் குலோத்துங்கனும் இதனை,

*...... சாதிப் பற்றின*
*நஞ்சினால் தமிழ்ச் சாதி*
*நசியுமோ .....* (ப. 313)

என்று ஐயம் கொள்கிறார். இச்சாதிப்பேயைக் கண்டு நல்லவர்களும் சமுதாயப் பொறுப்புமிக்க சான்றோர்களும் ஒதுங்கி வாழாமல் போர்க்கொடி தூக்கவேண்டும். தகுதியுடைய பெரியவர்கள் தீமையைக் கண்டு அஞ்சி, ஒதுங்கி வாழ்வதே நம் சமுதாயத்தின் பெருங் குறையாகும். நல்லவர்கள் ஒதுங்கி வாழ்வதால், அல்லவர்கள் அரசியல் போன்ற பல துறைகளிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். நல்லவர்கள் ஒதுங்கி வாழ்வதற்கு அச்சம் அல்லது சுயநலம் காரணமாக இருக்கிறது. இந்நிலை மாறவேண்டும். தீமையைக் கண்டவிடுத்து எதிர்த்துப் போராடவேண்டும் என்பதை ஒவ்வொருவரும் குறிக்கோளாகக் கொள்ள

வேண்டும். இத்தகு நிலை வருமானால் அல்லவர்கள் தீமை செய்ய அச்சப்படுவார்கள். இதனை,

*……………………; நம்*
*அறிஞர்கள் பெரிய ரென்போர்*
*போர்க்கொடி யுயர்த்தல் வேண்டும்!*
*புன்மையின் ஊற்ற னைத்தும்*
*தூர்த்திடத் துணிய வேண்டும்!*
*தூயவர் ஒதுங்கி வாழும்*
*மரபுகள் மாய வேண்டும்* (ப. 326)

என்ற கவிஞரின் வரிகள் நல்லவர்களின் ஆளுமை அதிகரிக்க வேண்டும் என்பதனை உணர்த்துகின்றன. நம்மைப் பிடித்திருக்கும் பெரிய பிணி - சாதிப்பிணியே.

> *சாதி இயக்கங்களின் தோற்றமும் வளர்ச்சியும், சமுதாயத்தின் முழுமையான தோற்றத்தைக் களங்கப்படுத்தியுள்ளன. தமிழ்ச் சமுதாயத்தில் வெறியும், வெறுப்பும், அவமதிப்பும் வளர்வது நாட்டு நலனுக்கு உகந்ததல்ல. பெரும்பாலும் இப்பணி அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியிருப்பதால், அனைவரும் ஒன்றுபட்டுப் போராட வேண்டும்.*[44]

குறிப்பாகப் பெரியவர்களின் முயற்சி மிகவும் தேவையாகும். இனியாவது பெரியோர்கள் சாதியை ஒழிக்கச் செயலில் இறங்க வேண்டும். சாதி என்னும் பழியில்லாத சமுதாயத்தைப் படைக்க வேண்டும் எனும் தன் ஆர்வத்தை,

*மார்னி டத்தின்*
*மேதைக்குப் புறம்பென்ப*
*தெதுவு மில்லை;*
*வேண்டுவன விளைகின்ற*
*கழனி காணும்*
*பாதைக்கு வகைசெய்வோம்*
*சாதி என்னும்*
*பழியறியாச் சமுதாயம்*
*படைத்து வாழ்வோம்* (ப. 331)

என்ற கருத்துமிக்க வரிகளால் வெளிப்படுத்துகிறார்.

**9. சாதி ஒழிப்பு விளைவுச் சிந்தனைகள்**

சாதி ஒழிப்பினைப் பற்றிச் சிந்தித்தவர்களும் சாதி ஒழிப்பு முயற்சிகளில் ஈடுபட்டவர்களும் கலப்பு மணத்தை ஊக்குவிப்பது ஒரு

வழியாகும் எனப் பல நேரங்களில் கூறியுள்ளனர். கலப்புமணத் தம்பதியருக்கு, அவர்களுடைய குழந்தை, அரசின் சலுகையைப் பெற வேண்டிச் சாதியைத் தேடிப்போகும் கட்டாயத்துக்கு உள்ளாக்கப்படுகிறது. இதனைத் தவிர்த்தல் வேண்டும். அடுத்து எண்ணவேண்டியது சமுதாய நீதியும் அதற்காகச் செய்திருக்கும் ஒதுக்கீடும். ஒதுக்கீடு குறித்த கருத்து ஏறத்தாழ அனைவராலும் ஏற்கப்படுகின்றது. ஆனால், இன்று கல்விக்கும் பதவிக்குமுரிய ஒதுக்கீட்டின் அடிப்படை அளவுகோலாக, சாதி ஆக்கப்பட்டுவிட்டது. தாழ்த்தப்பட்டவர்கள், மலைசாதியினர், மிகவும் பிற்படுத்தப்பட்டவரில் மிகச் சிலரைத் தவிர்த்து, மற்ற சாதி எதிலும் அனைவரும் பிற்பட்டவரென்றோ முற்பட்டவரென்றோ கூறமுடியாது. எனினும் பெரும்பான்மையின் அடிப்படையில், முழுமையாக முன்னேறியவை, பின்தங்கியவை, மிகவும் பின்தங்கியவை என்று பட்டியலிடப்படுகிறது. இதன் குறைகளை நன்கு அறிந்திருப்பினும், சமுதாயநீதியை நடைமுறைப்படுத்த வேறு வழியில்லை என்ற முடிவால், இது ஏற்கப்படுகிறது. இதுவரை சாதி தவிர்த்த சமுதாய நீதியை நடைமுறைப்படுத்த இயலுமா என்று நினைப்பதற்கும் நாம் துணிய வில்லை. சாதியைத் தவிர்த்துச் சமுதாய நீதியை நடைமுறைபடுத்துவதற்கு இயலாதெனில், அதில் சாதியைத் தளர்த்தும் வழிகளையாவது காணவேண்டும்.

சலுகைக்காகச் சாதியை நாடுவது படிப்படியாகக் குறைக்கப்பட வேண்டும். இன்றைக்கு இட ஒதுக்கீட்டின் இன்றியமையாமையை உணரும் அதே நேரத்தில், சமுதாயத்தின் எல்லாப் பிரச்சினைகளையும் அது தீர்க்கும் என்ற மாயையிலிருந்தும் விடுபடவேண்டும். பிற்பட்ட சமுதாயத்தில் வசதிபடைத்தவர்களும் சலுகைகள் மூலம் வசதி பெற்றவர்களும், தொடர்ந்து சலுகை அனுபவிப்பதையும், அதே சமுதாயத்தில் மற்றவர்களுக்கு அச்சலுகைகள் கிடைக்காமலேயே இருந்து வருவதையும் தவிர்க்க வேண்டும். இதனை,

> *சலுகையால் வசதி பெற்றவர்கள் ஒதுங்கி நின்று அதே சமுதாயத்து மற்ற மக்களுக்கு வழிவிட வேண்டியது உட்சாதி சமுதாய நீதியாக*[45]

அமையும். சாதியின் பெயரைக்கூறி, அதே சாதியில் வசதியுள்ளோர் ஏழை எளியவர்களுடைய எண்ணிக்கையையும் வலிமையையும் தங்களுடைய நன்மைக்குப் பயன்படுத்துவதையும் தடுக்க வேண்டும்.

பொதுவாக ஒதுக்கீடு என்பது தகுதி திறமைக்கு எதிரானது என்ற கருத்து பரவலாக உள்ளது. அறிவுநலம், தகுதி, திறமை என்பது எந்த ஒரு சமுதாயத்திலும் அடித்தளம் முதல் மேல்தளம் வரை அனைத்து நிலைகளிலும் பிறக்கும் குழந்தைகளிடம் ஆங்காங்கே

பரவலாக அமைந்திருக்க இட ஒதுக்கீட்டில், இரண்டு வகையான மாற்றங்கள் தொடர்ந்து ஏற்பட்டன.

*சலுகைபெறத் தகுதியுடைய சாதிகளாகக் கருதப்பட்ட சாதிகளுக்குள்ளேயே ஒப்பீட்டளவில் முன்னேறியவை, பின்தங்கியவை என அடையாளம் காணப்பட்டு, உட்பிரிவுகள் உருவாக்கப்பட்டன. இந்துக்களைப் பொறுத்த மட்டில் பிராமணர், பிராமணரல்லாதார் எனும் பிரிவை 1951இல் முன்னேறியவர், பிற்படுத்தப்பட்டவர் எனப் பிரிக்கப்பட்டது. மீண்டும் 'பிற்படுத்தபட்டவர்' பட்டியலில் இடம்பெற்றுள்ளவர்களுக்குள் சிலரை ஒப்பீட்டளவில் அதிகமாகப் பின்தங்கியிருப்பதாகக் கருதி, அதைப் பிற்படுத்தப்பட்டோர், 'மிகவும் பிற்படுத்தப் பட்டோர்' என 1989இல் இரண்டாகப் பிரிக்கப்பட்டது.*[46]

இது இந்த அளவோடு நின்றுவிடக் கூடியதன்று. மேலும் இதில் பிரச்சினைகள் உருவாகும்போது கூடுதலான சில பிரிவுகள் தோன்றலாம்.

ஆரம்பக் காலத்தில் பிராமணர், பிராமணரல்லாதார், கிறித்தவர், முகம்மதியர், ஆங்கிலோ இந்தியர் ஆகியோருக்குத் தனித்தனியே ஒதுக்கீடு இருந்தது. 1951இல் பொது நிலை (Open Competition), பிற்படுத்தப்பட்டவர், தாழ்த்தப்பட்டவர் மற்றும் மலைவாழ் மக்கள் எனப் பிரிக்கப்பட்டு, முறையே 60, 25, 15 சதவிகித இடங்கள் ஒதுக்கப்பட்டன. மொத்தத்தில் 40 சதவிகிதம் ஒதுக்கீட்டின்கீழ் வந்தது. இது 1971இல் 51, 31, 18 என உயர்ந்து, 49 சதவிகித இடங்கள் ஒதுக்கீட்டிற்கு ஒதுக்கப் பட்டன. 1980இல் பிற்பட்டோருக்கான ஒதுக்கீடு 50 சதவிகிதமாக உயர்த்தப்பட்டு முறையே 32,50,18 சதவிகிதம் ஆயிற்று. 1989இல் இது முறையே 31,50,19 என மாறி, ஒதுக்கீடு 69 சதவிகிதமாயிற்று. ஒதுக்கீட்டுக்கான இடங்கள் தொடர்ந்து சதவிகித அளவில் அதிகப்பட்டு வந்திருக்கின்றன. ஒதுக்கீடு தொடர்பான கோரிக்கை இத்துடன் முற்றுப் பெறாது என்றே தோன்றுகிறது. எனினும், சாதி பற்றிய நினைவும் மரபுவழி சார்ந்த பழக்கவழக்கங்களும் தொடர்கதையாயினும், சாதியின் பெயரில் மக்களை ஒன்றாகத் திரட்டுவதும் சங்கம் அமைப்பதும் சாதியின் புது அவதாரமாகும். இதனை,

*ஆதியில் இலாத சாதி*
*அமைப்புகள் உருவம் பெற்று*
*சங்கமாய் அங்கும் இங்கும்*
*தழைத்தன; பையப் பைய*
*எங்கணும் கிளைகள் தோன்ற*
*எழுந்தது...* *(பக். 332 - 333)*

என்று படம்பிடித்துக் காட்டுகிறார் கவிஞர். இப்படிப்பட்ட நிலைமை உருவாவதற்கு ஒதுக்கீடும் ஒரு காரணமாக அமைந்துவிட்டது. சாதி உணர்வை வலுப்படுத்தும் கருவியாக இவ்வொதுக்கீடு அமைந்துவிட்டது. இதனை,

*சமநீதி பாற்கடலை மீண்டும் மீண்டும்*
*சாதியெனும் கயிறிட்டுக் கடைந்தீர்; மேலும்*
*அமுதேனும் காணவிலை; சாதி நஞ்சு*
*அனல்போல பரவுதடா!.......* (ப. 328)

என்று கவிஞர் குறிப்பதைப் போன்று ஒதுக்கீடு அமைந்துவிட்டது. நாம் ஒதுக்கீட்டைத் தவிர்க்க இயலாது. அதே நேரத்தில் அது, சாதிஉணர்வுப் புயலுக்கு மையமாக அமைவதையும் ஏற்பதற்கில்லை.

**10.** தமிழின உணர்வு

கடந்த இரண்டாயிரம் ஆண்டுக்கால வரலாற்றில், ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் (1600 - 1900) அந்நியர்களின் பண்பாட்டுத் தாக்குதலின் கீழ், தமிழினம் துன்பமடைந்தது. அவ்வாறு துன்புற்ற காலத்திலும்கூட, தமிழின உணர்வு ஒளிர்விட்டே பிரகாசித்தது. ஆனால் இன்று,

*குளமுறையும் தவளையென நமக்குள் நாமே*
*குலப்பெருமை பேசுவதும் கொடுமை* (ப. 346)

யாகத் தங்கள் சாதியை உயர்த்துவதன் மூலம் தமிழினத்தையும் உயர்த்துவதாகச் சமாதானம் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது ஏற்றுக் கொள்ளக்கூடியதன்று. சாதிஉணர்வு தமிழினத்தைப் பிரிக்கிறது. தமிழினம் என்ற உணர்வைச் சிதைக்கிறது. இதனை,

*சாதி உணர்வும், தமிழின வாழ்*
*மேலும் தகையின; முன்னது வாழின்*
*என்னருந் தமிழுக் கெதிர்வரு நாட்களில்*
*உன்னதப் பெருநிலை உறுதியா யில்லை* (ப. 394)

*தன்குல வளர்ப்பும் தமிழின வளர்ப்பெனும்*
*வன்மொழித் தத்துவம் வழங்குவர்க் குரைப்பேன்*
*என்குல மென்பது இதயத்திடம்பெறின்*
*தன்மொழித் தன்குடும்பம் தாங்குவர் அவரலர்* (ப. 323)

என்பதே முடிவான தீர்ப்பாகும் என்கிறார்.

*கரையாளர், பிள்ளை, கோனார், செட்டியார், முதலியார் என்று தங்களைப் பெருமிதத்துடன் அழைத்துக் கொண்டிருந்த தமிழ்ப்பெருமக்களுக்கு அடுத்த வீட்டுத்*

*தேவரும், நாடாரும் அந்நியர்களாகிவிட்டனர். உத்திரப்பிரதேசம், பீகார் ஆகிய மாநிலங்களிலுள்ள யாதவர்கள் எங்கள் சாதியினர் என்றும், எங்கள் உறவினர் என்றும், கருதும் மனநிலை வரும்பொழுதும் - அம் மனநிலையை வளர்க்கும் பொழுதும் - தமிழின உணர்வு என்பது எப்படித் தோன்ற முடியும்*[47]

என்ற வினாவை எழுப்புகிறார் கவிஞர் குலோத்துங்கன். சாதிப்பிரிவும் அதனடிப்படையில் எழும் பொறாமை, பகையுணர்வு ஆகியவற்றைத் தன்னலத்திற்குப் பயன்படுத்தும் கயமைக்குணமும் உள்ளவரை, முன்னேற்றப் பயணத்தில் தமிழினம் எந்தச் சிகரத்தையும் எட்டமுடியாது என்பதே உண்மையாகும்.

தமிழகத்துக் காவேரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, பொருநை ஆகிய நதிகளில், சங்க காலத்தில் வற்றாது நீர் ஓடிக் கொண்டிருந்தது. அண்டை மாநிலத்தார் அணைகளைக் கட்டித் தமிழகம் வரும் தண்ணீரைத் தடுக்காத காலமது. அன்றைய தமிழகத்து மக்கட் தொகையும் மிகவும் குறைவாகவே இருந்தது. இருப்பினும், அக் காலத்திலேயே வறட்சி, வறுமை, பசிப்பிணி ஆகியவற்றைப் பற்றிப் புலவர்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். அன்னம் குவியும் அமுதசுரபி தமிழ்க் கவிஞன் படைப்புத்தான். இன்று தமிழக மக்கட் தொகை ஏழு கோடி. இந்தியாவில் நீர்வளம் குன்றிய பகுதிகளில் தமிழகமும் ஒன்று. கனிவளம் குறிப்பிடத்தக்க அளவு அமைந்திருக்கவில்லை. இச் சூழ்நிலையில், தமிழகத்தில் பொருளாதார வளர்ச்சித் திட்டத்தை முன்வைத்தோ, பொதுவான மேம்பாட்டுத் திட்டத்தை முன்வைத்தோ அல்லது தமிழ்மொழி, தமிழினப் பாரம்பரிய வளப் பாதுகாப்புப் பெருக்கத்தை முன்வைத்தோ மக்களை அணுகும்முறை மறைந்து, சாதி உணர்வை வைத்துத் தலைமை தேடுவதும் சாதிப்பகையை வளர்த்து விட்டுத் தங்களுடைய தலைமையைத் தக்கவைத்துக் கொள்வதுமான சூழ்நிலை உருவாகி வருவதைக் காணமுடிகிறது. இதனை,

*சாதிவெறித் தீ*
*தணியாது காத்திடுவார்*
*வேற்றுமைக்கு வித்தாக்கி*
*விதைத்தற்கு நீரிட்டு*
*நாற்றுகளாய் மாற்றி*
*நடவுசெய்து தம்பசிக்குச்*
*சோறுகண்டு வாழுபவர்* (பக். 520 - 521)

*... பதவிதேடும்*
*அரசியல் தலைவர் சாதி*

*அமைப்பினை அரவ ணைத்தும்*
*பரவியும், சலுகை தந்தும்*
*பதவியில் பங்கு தந்தும்*
*மன்றிலே சாடி னாலும்*
*மறைவிலே குலவும் வண்ணம்* (ப. 333)

*வகுப்பற்ற சமுதாய மாண்புபேசும்*
*சொல்லாரும் திரைமறைவில் சாதிகூட்டித்*
*தொடர்பேற்றுச் செயலாற்றும் கொடுமை சூழ்ந்த*
*பொல்லாத நிலை....* (ப. 317)

*பசியெனச் சோறு தேடும்*
*சாதியின் சங்க மேன்; எம்*
*தமிழர்தம் ஒருமை கொன்று*
*ஊதியம் தேடி வாழும்*
*ஊழலர் வளர்வ தேன்* (பக்.382 - 83)

*தாரகையின் ஒளியென்ன மின்னும் தூய*
*சமுதாயக் குறிக்கோளைத் தாழ்த்தித் தாழ்த்திச்*
*சேறனைய அரசியலில் சேர்த்தீர்; சாதித்*
*தீமூட்டிக் குளிர்காயும் சிறுமை செய்தீர்* (ப. 328)

என்று கவிஞர் சாடுகிறார். காலம் முழுவதும் சாதியை அரவணைப் பதையே தம்முடைய கொள்கையாக மனத்தில் கொண்டு வாழும் சில அரசியல் கட்சியினர் ஆலகால விஷத்தைப் போன்ற கொடிய சாதி ஒழிக்கப்பட வேண்டுமென்று பொய் முழக்கம் செய்வதை,

*காலமெலாம் சாதிக்குக்*
*கைபிடித்தல், கால்பிடித்தல்*
*சீலமெனும் கொள்கையொடு*
*செயலாற்றும் கட்சியினர்,*

*"ஆலமெனும் சாதி*
*அழிக" வென மேடையெலாம்*
*ஓலமிடும் நாடகத்தை*
*உலகம் பொறுப்பதுவோ* (ப. 321)

என்று கூறுவதன் மூலம் அரசியல் கட்சியின் பொய்முகத்தைத் தோலுரித்துக் காட்டுகிறார்.

*இந்திய அளவில் தனிக்கட்சி ஆட்சிமுறை மறைந்து விட்டது. வருங்காலத்தில் கூட்டணி ஆட்சிதான் தோன்றும். எனினும் தேசியக்கட்சி என்பவற்றுடன் சேர்ந்த மாநிலக் கட்சிகளால்தான் அது அமையும். மத்தியில்*

*இதுவரை தேசியக் கட்சிகளிலிருந்துதான் ஒருவர் பிரதமராக வர முடிந்திருக்கிறது. இம்முறையால்தான், 43 உறுப்பினர்களை மட்டுமே வைத்துக்கொண்டிருந்த தேவகௌடா பிரதமராக முடிந்தது.*[48]

*எனவே, தமிழகம் தேசியத் தலைவர்களை உருவாக்க வேண்டும்.* சாதி அரசியல் வளர்ந்தால், இது இயலாதுபோய்விடும். தமிழகத்தில் சாதி அரசியல் தான் வளர்ந்து வருகிறது என்பதை,

*...................... அருந்தமிழ்நாடு*
*தேய்வது கண்டீர் செய்வது ஒன்றிலையோ?*
*செயலில் சிந்தையில் செலுத்தும் ஆட்சியின்*
*இயலில் தேர்தலில் எங்கும் சாதியே*
*உயர்வு கொண்டதே* (ப. 315)

என்று குலோத்துங்கனின் குமுறலை அவரது கவிதையில் காணமுடிகிறது.

இந்திய மக்கள் தொகையில் தமிழகத்து மக்கட்தொகை ஏறத்தாழ 8 சதவிகிதம். ஆனால் மைய அரசுகளின் நிர்வாகவியல் (Central Services) முதன்மைத் தேர்வுக்கான I.A.S., I.P.S., மற்றும் இருபத்தைந்து துறைகளில் தமிழர்கள் நீண்டகாலமாக 3 அல்லது 3.5 சதவிகிதம் மட்டுமே தேர்வுபெற்றுள்ளனர். இந்தியத் துணைக்கண்டத்தில் அரசியலிலும், ஆட்சியிலும் நாம் கணிசமான இடங்களைப் பெறவேண்டும் என்று ஆசைப்படுவது தவறாகாது. நமது எண்ணிக்கையைக் கணக்கிடுவது குறுகிய நோக்கமாகாது. சாதியை வைத்து, அரசியல் நடத்தும் தலைவர்கள், சுதந்திர இந்தியாவில் தமிழர்களை ஒரு புதுமையான அடிமைத்தனத்திற்குத் தங்களையுமறியாமல் கொண்டு செல்கிறார்கள். அவர்கள் தங்களுடைய சாதியினருக்கும் நன்மை செய்யவில்லை. தமிழர்களுக்கும் நன்மை செய்யவில்லை. இதனை,

*நல்வழி தவிர்ந்தனம் நாடு தாழ்வுறச்*
*செல்வது கண்டீர் செய்வதொன் றிலையோ* (ப. 315)

என்று கவலை கொள்கிறார் கவிஞர். பெரியாரின் பெருந்தொண்டால், தமிழகத்திலுள்ள இளைஞர்களின் பெயர்களிலிருந்து சாதி அறவே மறைந்துவிட்டது. சாதியுடன் கூடிய பெயர்களில் இருந்த தெருப்பெயர்கள் அனைத்திலும் சாதிப்பெயர் நீக்கப்பட்டமை பெரியாரின் தொண்டுக்குக் கிடைத்த வெற்றியாகும். இதனைப்பற்றிக் கவிஞர் கூறும்போது,

*வீதிப் பெயரிலவை*
*விலக்கினமை போற்றிடினும்* (ப. 320)

என்று கூறுகிறார். சாதி உணர்வு இலைமறைவு காய்மறைவாக மனதில் இருந்தாலும், அதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்வதற்கு

வெட்கப்படும் நிலைக்குச் சமுதாயம் முன்னேறியது. அத்தமிழ்ச் சமுதாயத்தில் இன்று, தன்னலவாதிகள் ,

*............................ ஆட்சி*
*வேட்கையில் திசைஇ ழந்து*
*வாக்குகள் வங்கி நோக்கி*
*வணங்கிடும் தலைவர் தங்கள*
*போக்கினால்* (ப. 333)

சமூகநலவாதிகளாக வேடம்பூண்டு, தமிழ் மக்களுடைய தமிழினம் என்ற உணர்வை அழித்து, சாதி எனும் உணர்வை விதைத்து, தமிழர்களுக்குள் உட்பகையை உருவாக்கி, முன்னேற்றப் பணிகளில் ஈடுபட்டிருந்தவர்களை திசைதிருப்பி, ஏழ்மையும் இருளும் எளியர்கட்கு நிரந்தரமாக இருக்க உதவுகிறார்கள்.

**11.** சமத்துவபுரமும் சாதி ஒழிப்புத்திட்டமும்

*ஆதியில் மதத்தை அண்டி நின்றஇப்*
*பேயது சமயப் பிடிகள் குன்றவும்*
*காய கல்பம் கண்டது போன்று*
*அரசியல் தன்னை ஆட்கொண் டெழுந்து*
*முரசம் முழங்க முடியும் பூண்டு* (ப. 323)

என்ற இந்நிலையை நினைப்பின் நெஞ்சு கனக்கிறது. சாதியற்ற சமுதாயத்தைக் காணலாம் என்றிருந்த நம்பிக்கையனைத்தும் பொய்யாய், கனவாய், பழங்கதையாய்ப் போய்விட்டதோ என்ற கவலை ஆட்கொள்கிறது. இப்பின்னணியில் தமிழகத்துச் 'சமத்துவபுரத் திட்டம்' சாதி எதிர்ப்பின் சின்னமாக மட்டுமின்றி, சாதியொழிப்பு முயற்சியாகவும் அமைகிறது.

சமத்துவபுரம் சுமார் நூறு குடும்பங்களைக் கொண்டது. தமிழகத்தின் பல கிராமங்கள், இதைவிடச் சிறியவையே. இது ஒரு புதுமையான சிற்றூராகும். இதில், தமிழகத்து முக்கியமான சாதிகளைச் சேர்ந்தவர்களின் குடியிருப்புகள் அமைந்துள்ளன. இதிலுள்ள ஒருவருடைய வீட்டுக்கு வலதுபுறத்திலிருப்பவர் வேறுசாதியாகவும் இடபுறத்திலிருப்பவர் மற்றொரு சாதியாகவும் இருப்பர். இது, தங்களுடைய சாதியை மறந்து, தமிழர்களாக வாழ உருவாக்கப்பட்ட சூழ்நிலையாகும். இயற்கையாக அமைந்தது அன்று; செயற்கையாக உருவாக்கப்பட்டது. இருப்பினும் இது புதிய அனுபவம். ஒரு புதிய பாடத்தின் பிறப்பிடம்.

சமத்துவபுரத்தால் சாதி ஒழிந்துவிடுமா என்ற கேள்வி எழுவது இயல்பு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நிலைபெற்று,

சமுதாயத்தின் ஒவ்வொரு அடியிலும் வேர்விட்டு, அருகுபோல் பரவியிருக்கும் இக்களையை (சாதியை)ச் சில சமத்துவபுராங்களால் ஒழிக்க முடியாது. ஆயின் இதனையொத்த பல முயற்சிகளின் கூட்டுச் சக்தியால், சாதியை ஒழிக்க முடியும். வறுமை ஒழிப்பைப்போலச் சாதி ஒழிப்பும் இச்சமுதாயத்தின் அடிப்படைத் தேவையாகும். சாதிகளின் சுமைகளைத் தாங்கிக்கொண்டு உள்ள சமுதாயம், எந்தக் குறிக்கோளையும் எட்ட முடியாது. சாதித்தீ தமிழின உணர்வைத் தீய்த்துவிடும். வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்து நாம் பேணிக்காத்து வந்த அடையாளத்தை அழித்துவிடும். தமிழகம் சாதியுணர்வின் கோரப்பிடியிலிருந்து விடுதலை பெறவேண்டுமெனில் ஒன்றை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். சாதியை எதிர்ப்பதன் மூலம் சாதி ஒழியாது. தானாகவும் சாதி அழியாது. எனவே, 'சாதி ஒழிப்புத் திட்டம்' ஒன்றைச் சர்வகட்சி திட்டமாக்கி நடைமுறைப் படுத்தவேண்டும். ஒவ்வொரு அரசியல் கட்சியும் தனது தேர்தல் பிரகடனத்தில் ஏனைய திட்டங்களுடன் சாதியை ஒழிப்பதற்கு தாம் மேற்கொள்ளவிருக்கும் திட்டத்தையும் கூறவேண்டும். கட்சிகள் சாதி ஒழிப்பிற்குத் தங்கள் திட்டங்களைக் கூறவேண்டுமென அறிஞர்கள் வலியுறுத்த வேண்டும். வாக்காளர்கள் கோரிக்கையை எழுப்பவேண்டும். கோரிக்கை எழுப்பும் சூழ்நிலையை உருவாக்க வேண்டும். மேலும்,

*பதவியென் றொருவர்; பள்ளி*
*பல்கலைக்கல்வி வாய்ப்பில்*
*உதவியென் றொருவர்; தேடும்*
*உரிமைகள் அனைத்தும் சேர்க்கும்*
*கருவியென் றொருவர்; ஆட்சிக்*
*கட்டிலில் இடம்பிடித்துத்*
*தருமென ஒருவர்; தானோர்*
*தலைவனென் றுலவுதற்கு*
*வழியென ஒருவர்; ஆட்சி*
*வழங்கும் சலுகை மற்றும்*
*தொழில்பல துவங்கு தற்குத்*
*துணையென ஒருவர் என்னத*
*தனிநலம் பேணி நிற்போர்* *(ப. 325)*

சாதியை வளர்த்துக் கொண்டிருப்பவர்களாவர். இவர்களை விட்டுவிட்டு,

*உயர்ந்தவர் அறிஞர் ஒன்றாய்*
*நின்றிவண் சாதி பேசும்*
*நீசத்தை ஒழிப்ப ராயின்*
*பாதையும் காண்போம்; வெற்றிப்*
*பயணமும் காண்போம்* *(ப. 327)*

சாதிகளற்ற சமுதாயம் உருவாகிடுவதற்கான சரியான பாதையைக் கண்டு, வெற்றிப் பயணத்தைத் தொடர்ந்திட அறிஞர்கள் ஒன்றாய் நின்று, சாதி பேசும் இழிவான செயலை ஒழிக்க வேண்டும். தமிழக மக்களின் மனங்களில் இன்று ஓரளவு சாதிய உணர்வு மெல்லமெல்லத் தலையெடுத்து வருவதற்கு அணையிட்டுத் தடுக்க அறிஞர்களின் பங்கு அளப்பரிய ஒன்றாகும் என்பது குலோத்துங்கனின் கவிதைகளிலிருந்து உணர வேண்டும்.

## கருத்துக்களின் முடிவு

- சாகாவரம் பெற்றிருந்த தமிழின உணர்வுக்கு இன்று சாதிப்பற்று பெரும் ஆபத்தாக உருவெடுத்துள்ளது.
- சாதிமுறை, இந்நாட்டின் அனைத்து நிலைகளிலும், ஆட்டிப் படைக்கும் தனி ஆற்றலாக விளங்குகிறது.
- பிறப்பு, அகமணமுறை வாயிலாகச் சாதியின் இறுக்கம் அதிகரிக்கிறது. எனவே தமிழகத்தைப் பொறுத்தவரை தலைமைப் பொறுப்பேற்கக் குடிவழி அல்லது அரசுக் குடிவழி சாதியத் தோற்றத்திற்குக் காரணமாக அமைகிறது.
- சமுதாயநீதி எனும் இட ஒதுக்கீடு காரணமாகச் சாதிகளிடையே யுள்ள ஏற்றத்தாழ்வுகள் ஓரளவு ஒழிந்தன. எனினும் சாதி மறுபிறவி எடுப்பதற்குக் காரணமாக அதுவே அமைந்துவிட்டது.
- பெரும்பான்மையோரின் வறுமையையும் சிறுபான்மையோரின் வளமையையும் சமமாக்குவதற்காகக் கொணரப்பட்ட ஒதுக்கீட்டு முறை, சாதிய உணர்வுக்கு மையமாவது தடுக்கப்பட வேண்டும்.
- மனிதனை மனிதன் அடிமையாக்கும் மனுநீதி ஒழியக் காலந் தோறும் கவிஞர்கள் முயன்றிருக்கின்றனர். சாதி, முன்னேற்றத் திற்குத் துணைபுரிந்த போதிலும், சாதிக்கொடுமை ஒழியவில்லை. ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு இச்சாதிகள் தடையாக இருத்தல் கூடாது. .

## அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியர் - தொல்காப்பியம் - மரபியல் நூற்பா 44.
2. மேற்படி நூற்பா. 64.
3. அறவாணன், க.ப., சாதிவழக்கு சமூகநோயியல் பக். 59-60.
4. பெரியார், சாதி (கட்டுரை) விடுதலை. 11.04.1964.
5. Ambedkar, Who were the shudras, pp. 14 - 15.

6. தமிழேந்தி, தினமணி, 03.08.2004.

7. இராசமாணிக்கம். மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும். ப. 14.

8. அறவாணன். க.ப., தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப. 107.

9. அறவாணன், க.ப., வேரும் விழுதும். ப. 72.

10. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத்திணை இயல் நூற் 23, 24.

11. அறவாணன், க.ப., தமிழ்ச்சமுதாயம் நோயும் மருந்தும். ப. 74.

12. அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப. 107.

13. சிவத்தம்பி, கா., தற்காலத் தமிழ் இலக்கியத்தில் வறுமையும் சாதீயமும், ப. 8.

14. குருசாமி, குத்தூசி , விடுதலை தலையங்கம். 15.09.1951.

15. ராஜதுரை, எஸ்.வி., தினமணி, 07.02.2001.

16. பாரதியார், சுதேசமித்திரன் 11.12.1920.

17. சோமசுந்தர தேவர். தி. தினமணி, 17.06.2003.

18. சிவத்தம்பி. கா., தற்காலத்தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதீயமும். ப. 10.

19. மேற்படி, பக். 11 - 12.

20. குழந்தைசாமி. வா.செ., தினமணி, 04.03.96.

21. மேற்படி.

22. சுந்தரவடிவேலு, நெ., கல்வி (கட்டுரை), விடுதலை, 06.06.65.

23. திருவள்ளுவர், திருக்குறள், குறள் எண்: 972.

24. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி I, ப. 103.

25. குடந்தையான், தமிழர் பண்பாடு அன்றும் - இன்றும், ப. 90.

26. கோமேதகவேலு. எம்.கே., சிந்தனையாளர் ரூசோ, ப. 57.

27. இராமலிங்க அடிகள், திருவருட்பா - தொகுப்பு. பாடல், 18. ப. 21.

28. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி I, ப. 103.

29. நன்னன். மா., பெரியாரியல் கணினி தொகுதி I, ப. 296.

30. ஊரன் அடிகள் (ப.ஆ), திருவருட்பா பாடல் - 3471.
31. பெரியார், விடுதலை. 10.01.1947, ப. 2.
32. பெரியார், குடியரசு. 10.01.1947, ப. 4.
33. பெரியார், விடுதலை. 10.01.1947, ப. 4.
34. பெரியார், விடுதலை. 16.02.1959.
35. மேற்படி.
36. கமலக்கண்ணன். ப, இலக்கியம் மொழி,கலை,குறித்த பெரியாரின் சிந்தனைகள், ப. 154
37. பெரியார், குடியரசு, 28.07.1935.
38. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 24.
39. மேற்படி, ப. 54.
40. பெரியார், விடுதலை, 13.02.1968.
41. சுந்தரமகாலிங்கம், தெ., தினமணி, 17.06.2003.
42. வீரமணி, பா., செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 78 பரல் - 2, ப. 9.
43. பாரதியார், பாரதியார் கவிதைகள்.
44. வீரமணி, பா., செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 78 பரல் - 2, ப. 9.
45. குழந்தைசாமி, வா.செ., பசையிளர் நீக்கம் (கட்டுரை), தினமணி, 31.05.97.
46. குழந்தைசாமி, வா.செ., காலவரம்பு தேவை (கட்டுரை), தினமணி, 18.12.99.
47. குழந்தைசாமி, வா.செ., சமத்துவபுரம் (கட்டுரை), தினமணி, 06.11.2000.
48. தினமணி, சமுகநீதி (கட்டுரை), 17.12.99.

# 4. தமிழுணர்வுச் சிந்தனைகள்

மொழி என்னும் சாதனம், உலகின் மற்ற உயிர்களிடமிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டுகிறது. உலக மொழிகள் மக்களின் அல்லது நாட்டின் பெயரால் அமைந்திருக்கின்றன. தமிழைப் பொறுத்த வரையில், மக்களுக்கு மொழியின் பெயரால் தமிழர் எனப் பெயர் அமைந்ததோடு, நாட்டுக்கும் தமிழ்நாடு எனவும் அமைந்திருக்கிறது. கவிஞர் குலோத்துங்கன் கவிதைகளில் காணப்படும் தமிழுணர்வுக் கருத்துக்களை,

1. மொழியின் தோற்றமும் வளர்ச்சியும்,
2. தமிழ் வளர்ச்சியில் சமயமும் சமுதாயமும்,
3. தமிழின் மேம்பாடும் பயன்பாடும்,
4. மொழிக்கொள்கையும் குழுக்களும்,
5. தமிழ் இணையப் பல்கலைக்கழகமும் தமிழ் வளர்ச்சியும்,
6. இலக்கணத்தை எளிமைப்படுத்துதலும் எழுத்துச் சீர்திருத்தமும்

ஆகிய தலைப்புகளில் விளக்கலாம்.

### 1. மொழியின் தோற்றமும் வளர்ச்சியும்

மனிதன் படைத்த கருவிகள் பலவற்றுள் மொழி எனப்படும் கருவி, ஏனைய அனைத்துக் கருவிகளிலும் வேறுபட்டது; உயர்ந்தது; அளவிடற்கரிய ஆற்றல் வாய்ந்தது. சமுதாயம் என்ற அமைப்பின் அடிப்படை, சமுதாயச் சக்கரத்தின் அச்சு மொழியாகும். ஓர் இனத்தை, அடையாளம் காட்டுவது மொழிதான். அவ்வினம் தனது மொழியை இழந்தால் தன்னுடைய அடையாளத்தை இழந்துவிடும்.

மொழியைப் பற்றி மொழிநூலார்,

*மொழி என்பது மக்கள் படைத்துக்காக்கும் அரியதொரு கலை. மொழியே மக்களின் அறிவை வளர்த்து உயர்த்தும் அரிய கருவியாகவும் உள்ளது[1]*

என்கிறார் டாக்டர் மு.வ. எனவே, மொழி என்பது கலையாக மட்டுமில்லாமல், மக்களின் அறிவை வளர்த்து அறியாமையைப் போக்கும் கருவியாகவும் விளங்குகிறது.

*சமுதாய வாழ்வுக்கு அறிகுறியாக உள்ள மொழியே அந்தச் சமுதாய வளர்ச்சிக்கும் காரணமாக உள்ளது. சமுதாயத்தால் வளர்ந்து, சமுதாயத்தை வளர்த்து வருகிறது.*[2]

*மொழியாவது மக்கள் தம் கருத்தை ஒருவருக்கொருவர் வெளியிடுவதற்குரிய கருவியாம் ஒலித்தொகுதி*[3]

அதேபோல் பல்வேறு குறிப்புகளைப் பகிர்ந்தளிக்கும் ஒலியின் கூட்டமாகவும் உள்ளதாக மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் கூறுகிறார்.

*மொழி என்பது கருத்துப் பரிமாற்றத்திற்குரிய ஒருகருவி எழுத்து வடிவமும் பேச்சு வடிவமும் கருத்துப் பரிமாற்றத்திற்கான இருவகை ஊடகங்களாகும்.*[4]

மொழியானது கருத்தைப் பரிமாறிக்கொள்ள எழுத்து, பேச்சு ஆகிய இருவகைப் பணிகளுக்கும் முக்கியமானது என்கிறார் ஆரோக்கியநாதன்.

*மொழி பொதுவாகக் கருத்து வெளிப் பாட்டிற்குரிய ஒரு கருவி என்று கூறுவார்கள். மொழி கருத்து வெளிப் பாட்டிற்கு மட்டும் உரிய கருவியல்ல. உணர்ச்சி வெளிப்பாட்டிற்கும் உரிய கருவியாகும்*[5]

என்கிறார் பொற்கோ. இவ்வாறு மொழிநூலாரின் பார்வையில் மொழியானது கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்த மக்களிடையே ஒரு சாதனமாகப் பயன்படுகிறது.

மொழி என்றால் மொழிதல் என்று பொருள்படும். மொழியைத் திருந்திய மொழிகள், திருந்தா மொழிகள் என்ற இரண்டு வகைக்குள் அடக்குவர். திராவிட மொழிக் குடும்பங்களுள் தமிழானது திருந்திய மொழியாகவும் மூலமொழியாகவும் உள்ளது. தமிழ்மொழியின் திருந்திய தன்மையையும் மென்மையையும்,

*It is one of the most copious refined and polished language spoken by men*[6]

என்று டெய்லர் கூறியுள்ளது வலிமை சேர்ப்பதாக உள்ளது.

*தமிழ் மொழியானது நமது மேன்மைக்கு நமது தகுதிக்கு முற்போக்குக்கு ஏற்ற மொழியாகும். மேலும், இந்திய நாட்டுப் பிறமொழிகளைவிட நாகரிகம் பெற்று விளங்குகிறது*[7]

எனத் தமிழைத் தகுதிவாய்ந்த மொழியாகப் பெரியார் காட்டுகிறார். சாதி, மதம், சமயம் ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல் மொழி தன்னிச்சையாக இயங்க வேண்டுமென்பது பெரியாரின் விருப்பம். அதனால்,

> *தமிழ் என்றைக்குச் சமயத்தில் போய்ப்புகுந்ததோ, சமயத்துக்காரன் எப்போது தமிழ் கதவைத்திறந்தது; இறந்தவனை எழுப்பியது என்று சமயத்திலே கொண்டு போய்ப் புகுத்தினானோ அன்றே தமிழும் முன்னேற முடியாமல் கெட்டுப் போய்விட்டது. மதம் தமிழைக் கெடுத்தது[9]*

என்று சாடுகிறார்.

தமிழில் ஆக்க இலக்கியங்கள் தோன்றவில்லை என்பது மட்டுமல்ல ஆக்க இலக்கியங்களே அநேகமாக இல்லை. பழங்காலந் தொட்டுக் கூறிவந்த புராணங்கள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் என்று பழமைபற்றியே படித்தும் பேசியும் வருகிற நமது தமிழுக்கென்று புதிய வரவுகள் எதுவுமில்லை என்பது பெரியாரின் கருத்து. விஞ்ஞானம், பகுத்தறிவு, சுயமரியாதையறிவு போன்றவற்றை உள்ளடக்கிய இலக்கியங்களை ஆக்க இலக்கியம் என்றும், தமிழில் அத்தகைய இலக்கியங்களே இல்லையென்றே உரைக்கிறார்.

> *ஒரு மொழியானது காலத்துக்கு ஏற்றாற்போல் புதிய படைப்புகளைக் கொண்டதாக இருக்கவேண்டுமென்றும், அப்போதுதான் அம்மொழியின் சிறப்பை முழுமையாக நம்மால் சுவைக்க முடியும் என்றும் அறிஞர்கள் கருதுவார்கள். அத்தகைய கருத்தை வலியுறுத்தும் வகையில் பெரியாரின் கருத்துக்கள் அமைந்துள்ளன[10]*

என்று தமிழ் பற்றிக் கமலக்கண்ணன் கூறுவது சிந்தனைக்குரியது.

சிந்தனையை வளப்படுத்தி, அறிவின் தரத்தை உயர்த்தி வாழ்க்கையை உயர்த்துவதே கவிதையின் நோக்கமாக இருக்க வேண்டும். அறியாமையை நீக்குவதும் அறிவை வளர்ப்பதுவும் ஒரே செயல்தான். ஒரு பாடலின் ஆற்றல் ஆயிரம் செங்கோல்களைவிட உயர்ந்தது. குப்பைத் தொட்டியில் குப்பை என்ற பெயரில் எதை வேண்டுமானாலும் போடலாம். தங்கப்பேழையில் அவ்வாறு செய்தல் கூடாது. தங்கப் பேழையில் வைக்கும் பொருள், அப்பேழையின் மதிப்பைவிட உயர்ந்ததாக இருக்க வேண்டும். கவிதையில் பொதிந்துள்ள பொருளும் அப்படித்தான் இருக்க வேண்டும்.

சமூதாயத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கும் மக்களுடைய சிந்தனை ஓட்டத்திற்கும் ஏற்றவாறுதான் கவிதைகள் அமையமுடியும். கவிதையின் பாடுபொருளையும் வடிவத்தையும்கூட இவையே நிர்ணயிக்கின்றன. எனவே, சமுதாயச் சட்டத்திற்கு ஏற்றவாறு கவிதை இருக்கவேண்டியுள்ளது. இருபதாம் நூற்றாண்டில் தேசிய எழுச்சி ஏற்பட்டதால் கவிதைகளில் எழுச்சியும், உணர்ச்சியும் பாடுபொருளாக மிளிர்ந்தன. பகுத்தறிவு உணர்ச்சி, பகுத்தறிவு இயக்கம் ஆகியவற்றின் செல்வாக்கினால் கவிதைகளில் சீர்திருத்தம், அறிவியல்நோக்கு ஆகியவற்றைப் பார்க்கமுடிகிறது. சமுதாய நீரோட்டத்தின் சிந்தனைப் போக்குகளின் உணர்ச்சி பிரதிபலிப்புகளைக் கவிதைகளில் நாம் பார்க்கிறோம். இதைக் காத்து வளர்க்க வேண்டும்.

சங்ககாலத்தில் முதன்முதலாகத் தமிழ்மக்களின் ஆற்றல்களையும் தமிழரசர்களின் ஆற்றல்களையும் தமிழின்மேல் ஏற்றுவதாக வரும் ஒரு தொடர் சிலப்பதிகாரத்தில் ‘அருந்தமிழ் ஆற்றல்’ என்று வருகின்றது. சேரன் செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் படையுடன் புறப்படும்பொழுது

*அருந்தமிழாற்றல் அறிந்தவர் ஆங்கென்*[10]

எனக்கூறிப் புறப்படுகிறான். இங்கு அருந்தமிழாற்றல் என்பது அருந் தமிழர் ஆற்றல் அல்லது அரசர்களுடைய ஆற்றல் என்பதாகும். அதனைத் தமிழின்மேல் ஏற்றித் ‘தமிழ் ஆற்றல்’ என்று கூறுகிறான். இங்குத் தமிழ் என்பதற்கு ‘வீரம்’ என்று பொருளாகிறது. திருமந்திரத்திற்குத் தமிழ் மூவாயிரம் என்று பெயர். திருமூலர்,

*என்னை நன்றாக இறைவன் படைத்தான்*
*தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே*[11]

என்று பாடுகிறார். இங்குத் தமிழ் என்பதற்கு ‘இறைமை’ என்று பொருள்படுகிறது. சம்பந்தரைப் பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம், ‘நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன்’ என்று குறிப்பிடுகிறோம். இங்குத் தமிழ் என்பதற்குச் ‘சைவ சமயம்’ என்றாகிறது.

தமிழ் இலக்கியங்கள் பாடுபொருள் என்ற அடிப்படையைக் கொண்டே அமைந்துள்ளன. எந்த ஒரு பொருள் குறித்தும் பாடப் பெறுவது - அது இயற்கைப் பொருளாயினும் செயற்கைப் பொருளாயினும் அல்லது கற்பனைப் பொருளாயினும் - பாடுபொருள்களாக அமைவது உலகப் பொதுக்கோட்பாடாக இருக்கிறது. தமிழ் இலக்கியங்களில் பாடு பொருள்களாக இருந்தவை மொழியுணர்வுக்கும் மொழியுணர்ச்சிக்கும் ஏதோ ஒரு வகையில் உதவியிருக்கின்றன.

*கால்டுவெல் காலத்துக்குப் பின்பு மொழி என்பது ஒன்று உண்டு; பாடுபொருளெல்லாம் மொழியாகிவிட்டது என்ற*

*தெளிவான உணர்வு தோன்றுகிறது. இந்த அடித்தளத்தைக் கொண்டுதான், பின்னர்த் தனித்தமிழ் இயக்கம் தோற்ற மெடுத்தது. தனித் தமிழ் இயக்கம் தோன்றிய போதுதான், பாடுபொருளும் மொழியும் வேறு என்பதை மக்கள் மனம் சரியாகவும் தெளிவாகவும் உணர்ந்து கொள்கிறது*[12]

என்று தெளிவுபடுத்துகிறார் பொற்கோ.

**2. தமிழ் வளர்ச்சியில் சமயமும் சமுதாயமும்**

தமிழகத்தில் கி.பி. 13ம் நூற்றாண்டில் முகமதியர்களின் படையெடுப்பால் பலகோயில்கள் கொள்ளையடிக்கப்பட்டன. சைவர்கள், தங்களுடைய கோயில்களைப் பாதுகாத்துக்கொள்ளப் பல மடங்களைத் தோற்றுவித்து வலுப்பெறச் செய்ததால் சைவசித்தாந்தச் சாத்திரங்கள் உருப்பெற்றன. இச்சூழலால் தமிழைக் காப்பாற்றுகின்ற ஒரு பெரிய பொறுப்பு சைவர்களுக்கு ஏற்பட்டது. சைவத்தைச் சார்ந்தவர்கள் சமணத்தின் மேலாதிக்கத்தைத் தாங்கமுடியாமல் அதனை எதிர்த்துப் போராடினர். முகம்மதியர்களின் படையெடுப்பும் நடைபெற்றது. சைவர்கள் நேரடியாக அரசர்களோட மோதமுடியாமலும் புதியதாக வந்த படையெடுப்புகளோடு மோதமுடியாமலும் ஆகிவிட்ட சூழ்நிலைகளில்தான், மடங்களைத் தனியாக நடத்தினர்; மக்களுடைய ஆதரவு பெருகியது.

ஒரு காலக்கட்டத்தில் சைவர்கள் சமணத்தை எதிர்த்த வேகத்தில் சைவ இலக்கியங்களைத் தவிர வேறெந்த இலக்கியங்களும் தமிழில் இருக்கக் கூடாதென்று மற்ற இலக்கியங்களை எதிர்த்ததால், சங்க இலக்கியங்களும் புறக்கணிக்கப்பட்டன. இச்சூழலில் சைவசமயத்தைக் காப்பவர்கள் வடமொழியையும் தமிழையும் சமமாகவாவது நடத்த வேண்டும் என்று விரும்பினர். ஆனால், வடமொழியாளர் ஏற்காததோடு, குடமுனியின் குதத்திலிருந்து தமிழ் பிறந்ததாகக் கேலி செய்து எழுதியதால் தமிழுணர்ச்சியானது சுயமரியாதைப் பிரச்சினையாகவும் தன்மானப் பிரச்சினையாகவும் உருவெடுத்தது. கோயில்களில் இறைவனைப் பாடும்பொழுது வடமொழியும் தமிழும் சமம் என்ற நிலையைச் சைவர்களால் நிலைநாட்டிக் கொள்ள இயலவில்லை. அத்தருணத்தில் தமிழை உயர்த்திப் பேச ஓர் அணி சைவர்களிடம் திரண்டது. சைவசமயத்திலிருந்து அவர்கள் வடமொழி மேலாதிக்கத்தை எதிர்த்தார்கள். இந்த எதிர்ப்பின் சிறந்த அறிகுறியாகப் படிப்படியாக வளர்ந்து குறிப்பிட்ட காலத்தில் சிகரம் வைத்தாற்போல மறைமலையடிகள் உருவில் வெளிப்பட்டது.

சமயம் வளர்த்த தமிழ் உணர்ச்சியின் காலத்தில், சமுதாய அடிப்படையிலும், அரசியல் அடிப்படையிலும் ஒரு மொழியுணர்வு

தேவைப்பட்டது. மறைமலையடிகள், பெரியார் ஆகியோரின் தொடர்பு இதற்கு வழிவகுத்தது.

> *பெரும்பாலான மக்களுக்குத் தமிழ் எந்தளவிற்குப் பயன்பட வேண்டும், தமிழ் உணர்ச்சி எந்த அளவிற்கு வளர வேண்டும் என்பதில் அக்கறை காட்டியவர்கள் சுயமரியாதை இயக்கத்தவர்களும் திராவிட இயக்கத்தவருமாவர். வகுப்புவாரி உரிமைச் சிந்தனைகள் படிப்படியாக வளர்ந்து, திராவிடர்களுக்கு 50 விழுக்காடு உரிமை வேண்டும் என்று கேட்குமளவிற்கு உயர்ந்தது. இராஜாஜி, பெரியாரைக் காங்கிரசில் சேருமாறு அழைத்த போது, இந்த 50 விழுக்காடு உரிமைக்கு இராஜாஜி இணக்கம் தெரிவித்தார். ஆனால் செயல்படுத்தாததால் பெரியார் காங்கிரசிலிருந்து வெளியேறிச் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார்.*[13]

1938இல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை பெரியார் நடத்தியபோது மறைமலையடிகள் தலைமையில் ஒரு மாநாடு நடத்தப்பட்டது. இவர்கள் இருவரும் தமிழின்மேல் நிகழும் ஆதிக்கத்தைத் தமிழ்நாட்டில் எதிர்ப்பது என்ற கருத்தொற்றுமையுடன் செயல்பட்டனர்.

தமிழ் உணர்ச்சி என்பதால் சமயம் சார்ந்த உணர்ச்சியும் சமுதாயம் சார்ந்த உணர்ச்சியும் இணைந்தபோது தமிழறிந்தவர்களும் புலவர்களும் சுயமரியாதை இயக்கத்தோடு தங்களைத் தொடர்பு படுத்திக்கொண்டனர். சுதந்திரப் போராட்டத்தின் மூலம் ஏற்பட்ட தேசிய எழுச்சி, மொழி உணர்ச்சியையும் எழுப்பிற்று. தேசிய எழுச்சி ஏற்பட்ட போது ஒவ்வொரு மாநில மொழியாரும் தங்களுடைய மொழியைச் சிந்தித்ததுபோலத் தமிழகத்தில் தமிழ்மொழி பற்றிச் சிந்திக்கத் தொடங்கியதால் தேசிய எழுச்சியை அடிப்படையாகக் கொண்டு தமிழ் உணர்ச்சி தோன்றியது. அதற்கு வ.உ.சி, திரு.வி.க., பாரதியார் போன்றோர் உறுதுணையாய் விளங்கினார்கள். சமய உலகிலிருந்தாலும் தமிழ் உணர்வு தலைதூக்கிட உதவிய யோகி சுத்தானந்த பாரதி,

> *தமிழ் மறுபிறப்பு எடுத்துள்ளது. இனி, பழைய நிலைக்குத் திரும்பாது. சில பழம் பாடல்களை வைத்துக்கொண்டு எமது தமிழே பெரிது என்றால் உலகம் ஒப்பாது. சிவனைத் தூதனுப்பியதும், முதலை விழுங்கிய பாலகனை அழைத்ததும், எலும்பைப் பூங்கோதை யாக்கியதும், கல்லைத் தெப்பமாக்கியதும் எமது தமிழ் தானே என்று புராணம் பேசிய காலம் போய்விட்டது*[14]

என்றார். மேலும் தனித்தமிழ் முயற்சி மட்டும் போதாது என்பதையும், சமுதாய உயர்வுக்கு வேண்டிய அறிவுச் செல்வத்துடன் திகழ வேண்டுமென்பதையும்,

*உலகம் ஒரு பாஷையை மதிக்க வேண்டுமானால், அது உலகைப் புறக்கணித்துத் தனிச் செருக்குடன் வாழக் கூடாது. அதில் உலகம் மதிக்கும்படியான அறிவுச் செல்வம் நிரம்பி இருக்கவேண்டும். இலக்கிய உலகில் இன்று ஒரு ஜனநாயகம் நடக்கிறது. பழம் பண்டிதர்கள் கையிலிருந்து இலக்கியம் பொது ஜனங்கள் கைக்கு வந்துவிட்டது. ஆசிரியர்க்கும் பொதுமக்களுக்கும் இடையே விமரிசகன் இருக்கிறான். அவன் பொதுஜன வர்க்கத்தின் பிரதிநிதியாகவே பேனாவை ஓட்டுகிறான். ஆகவே தமிழை இனிமேல் தனிமைப்படுத்தி வைத்துக் கொள்ளமுடியாது. அது மக்கள் மயமாகிவிட்டது.*[15]

என்றும் கூறுகிறார். மேலும், தமிழ் உணர்ச்சி உள்ளவர்களாக அனைவரும் திகழ வேண்டுமென்பதையும்,

*நான் தமிழன். எனது நாடு தமிழ்நாடு. எனது மொழி தமிழ்மொழி. தமிழ் மொழியாளர் எல்லாம் என் உறவினர். என் சமூகம் தமிழ்ச்சமூகம். என் சாதி தமிழ்ச்சாதி. தமிழர் நலமே என் மதம். என் கடமை தமிழ்நாட்டு ஊழியம். என் தெய்வம் தமிழணங்கு. என் மந்திரம் தமிழ். என் தோத்திரம் எந்தாய் வாழ்க என்று தமிழ் நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் தலைநிமிர்ந்து கர்சிக்க வேண்டும்*[16]

என்றும் விரும்புகிறார். இந்த உணர்ச்சிகளெல்லாம் வளர்ந்து வரும்பொழுது புலவர்களும் கலைஞர்களும் உணர்ச்சியை ஏற்றுவதற்குத் தம்மால் இயன்ற பணிகளைச் செய்கின்றனர். எந்த ஒரு கவிஞர் கவிதைத் தொகுப்பு வெளியிட்டாலும், அங்கே தமிழ் என்றொரு பகுதி இருக்கும்.

மனோன்மணியம் நாடக ஆசிரியர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை 'நீராரும் கடலுடுத்த' என்ற பாடலில் முதல்முறையாக வடமொழியையும் தமிழையும் ஒப்பிட்டுத் தமிழ் உயர்ந்தது என்றும், இதிலிருந்து பிறந்த இன்னின்ன மொழிகள் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றதால் தமிழ்தான் உயர்ந்தது என்பதை,

*சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே*[17]

என்று பாராட்டுகிறார். அவர் தொடங்கி வைத்த இப்பணி தொடர்வதோடு மேலும் மேலும் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

*சான்றோர் வரிசையில் குலோத்துங்கன் நினைவுகளில் இடம் பெறுபவர்கள் பாரதி, பாரதிதாசன், அண்ணா, பெரியார், குன்றக்குடி அடிகளார் ஆவர். இப்பட்டியலில் உள்ள பெரும்பாலோர் தமிழ் உணர்வுள்ளவர்கள். தமிழனின் எதிர்கால வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டவர்கள். இப்பரம்பரையின் குறியீடாக அமைபவர் குலோத்துங்கன். தமிழார்வம் என்பது இவர்களுக்குக் கைவிட்டுப்போன ஒரு பொற்காலத்தின் மீட்டெடுப்பு அல்ல. அது உலகு தழுவிய தமிழ் முனைப்புக்கான திட்டமிட்ட ஒரு செயற்பாடாகும்.*[18]

ஆனால், குலோத்துங்கன் காண விரும்புவது எதிர்காலச் சவால்களுக்கு ஈடு கொடுக்கும் தன்மையே முக்கியப்படுத்தப்படுகின்றன. ஒரு சமுதாயத்தின் மேம்பாட்டுக்கு அச்சமுதாயத்தின் மொழி வளர்ச்சி மிகவும் இன்றியமையாது. சமுதாயமும் மொழியும் ஒன்றோடொன்று நெருக்கமான தொடர்பு கொண்டவை.

இயல்பாகவே தமிழ்ச் சமுதாய முன்னேற்றத்தில் நமக்குள்ள அக்கறையும் இன்றைய அறிவியல் தொழில்நுட்பத் தேவைகளுக்கேற்ப நம் தமிழ்மொழியும் மேம்பட்டு விளங்க வேண்டும் என்ற வேட்கையுடன் குலோத்துங்கன் தம் கவிதைகளில் வெளிப்படுத்துகின்றார். தமிழ்மொழிக்கு நமது பங்களிப்பு தமிழ் மேம்பாடு, பயன்பாடு, வளர்ச்சி என்ற மூன்று தன்மைகளில் ஒன்றுடனொன்று தொடர்புடன் அமையும். வளர்ச்சி மேம்பாடு என்பன ஒன்றுபோலத் தோன்றினாலும் வெவ்றோனவை. இருப்பது, இருந்தவாறே விரிவடைவது வளர்ச்சி. இல்லாத பரிமாணங்களை உருவாக்கி, இருக்கின்ற தரத்தை உயர்த்துவது மேம்பாடு.

மேம்பாட்டிற்கும் பயன்பாட்டிற்கும் உள்ள தொடர்பு சேற்றில் நடப்பது போன்றது. ஒரு காலை நன்றாக அழுத்தி வைத்துத்தான் அடுத்த காலை எடுத்து வைக்க வேண்டும். அந்தக் காலை நன்றாகப் பதித்தப்பின் அடுத்த அடி எடுத்து வைக்க வேண்டும். இந்த இரண்டும் வளர்ச்சிக்குத் துணைசெய்யும். ஒரு மொழியின் வளர்ச்சிக்கும் பயன்பாடு விரிவடைவதற்கும் மேம்பாடு என்பது அடிப்படைத் தேவை. இம்மூன்றையும் இணைத்துச் சுருங்கக்கூறின் நமது மக்களின் அரசியல் சமுதாயப் பொருளாதாரத் தேவைகளை நமது மொழி முழுமையாகப் பூர்த்தி செய்ய வேண்டும் என்பதை,

*எண்ணொடு கருவி கண்டோம்;*
*எழுத்தொடு கலைப டைத்தோம்;*
*மண்ணொடு நின்ற காலம்*
*மாறியாம் கடல்கள் வென்றோம்* (ப. 232)

என்று குலோத்துங்கன் கூறுகிறார். நாம், நமது மொழித்தேவைகளை முழுமையாகப் பூர்த்தி செய்யத் தவறுமிடத்து, பூர்த்தி செய்யும் நிலையிலுள்ள மொழியை நாடத் தொடங்கி விடுவார்கள்.

**3.** தமிழின் மேம்பாடும் பயன்பாடும்

எந்த ஒரு இனமும் சமுதாயமும் தனது பழம்பெருமை பற்றிப் பெருமிதத்துடன் எண்ணுவதும் பேசுவதும் இயல்பு. பாரம்பரியம் மரத்தின் ஆணிவேரைப் போன்று அசையாது நிலைத்து நிற்க அதுதான் அடிப்படை. பாரம்பரியம் என்பது கழித்த நாட்களின் கணக்கன்று; அது முன்னோர் அனுபவங்களின் தொகுப்புச்செல்வத்தைப் பாதுகாத்து வைத்திருக்கும் கொள்கலனாக (Container) மொழி அமையும். தான் தாங்கி நிற்கும் கருவூலத்தை வழிவழியாகப் பாதுகாத்து, நாளைய தலைமுறைக்கு விட்டுச் செல்வதால், ஓர் இனத்தின் பெருமையை அவ்வின மொழிதான் பிரதிபலிக்கிறது என்பதை,

*எண்ணின் இனிப்பது தமிழாம் - எங்கள்*
*இன்பத் தமிழ்மொழி வாழ்க* (ப. 337)

என்று காட்டுகிறார் குழந்தைசாமி. எனவே, மாபெரும் நாகரிகங்கள் மகத்தான மொழியை உருவாக்கத் தவறியதுமில்லை, வரலாற்றுப் பெருமையில்லாத மக்கள் வளமிக்க மொழியை உருவாக்கியதுமில்லை. மூவாயிரம் ஆண்டுகள் பாரம்பரியம் உள்ள இந்திய நாகரிகம் கண்ட தமிழ், வடமொழி ஆகிய இரண்டு மொழிகளுக்கும் தொன்மைச் சிறப்புண்டு; இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய இலக்கணம் உண்டு. கவிதை, இலக்கியம் மற்றும் காப்பியங்களும் உண்டு. உலகில் பெருமையுடைய மொழிகளாகிய ஆறினுள் இந்தியா இரண்டு மொழிகளின் தாயகமாகத் திகழ்கிறது. இப்பெருமை உலகில் வேறு எந்த நாட்டுக்கும் இல்லை. தமிழைப் பலநிலைகளில் ஆராய்ந்த ஏ.வி. சுப்ரமணிய அய்யர்

*தமிழுக்கு இணையாக விளங்கிய சமஸ்கிருதத்தில் அகப்பாடல்கள் இருப்பினும் தமிழ்ப்பாடல்களில் உள்ள கதையழகோ, கற்பனைப் பண்புகளோ, மனோதத்துவ ஆழமோ அவற்றில் காணப்படவில்லை*[19]

என்கிறார். இது தமிழின் மேம்பாட்டினை விளங்க வைப்பதாக அமைகிறது.

புதிய கண்டுபிடிப்புகளுக்குரிய ஆய்வுகளுக்காக உலகின் முன்னேறிய நாடுகள் செலவிடும் தொகை 94 விழுக்காடாக அமைகிறது. இந்தியா போன்ற முன்னேறும் நாடுகள் செய்யும் செலவு 6 விழுக்காடுதான். புதியன காண்பதற்கு நம் தமிழகப் பங்களிப்பு மிகமிகக்

குறைவாகத்தான் அமையும் என்பது இதிலிருந்து விளங்குகிறது. அறிவியல் தொழில்நுட்பம் சார்ந்த துறைகளில் மூலநூல் சமுதாயமாக நாம் இன்னும் மாறவில்லை. மொழிபெயர்ப்புச் சமுதாயமாகத்தான் இருந்து வருகிறோம். நம்மொழி வளமுடையது, வலிமையுடையது. ஆயின் நாம் புதியன படைப்பவர்களல்ல. அறிவியல் தொழில்நுட்பம், பொருளாதாரம், சமுதாயம், மேலாண்மை ஆகிய அனைத்திலும் நாம் மேலை நாட்டினரின் கண்டு பிடிப்புகளையே பயன்படுத்தி வருகிறோம். இதனை,

*ஏற்றும், நாம்பல ஈந்தும் முன்செலும்*
*முடிவறு பயணமே முந்நீர் உடுத்த*
*படிதரு வாழ்வாம்* (ப. 353)

என்று குலோத்துங்கன் கூறுகிறார். தேவைப்படும்வழி ஏற்று வாழ்கிறோம். அறிவுத்துறைகளில் நாம் இன்னும் கொடுத்து வாழும் நிலைக்கு வளரவில்லை. வளர்வதே நம் குறிக்கோளாக அமைய வேண்டும். அவ்வண்ணம் அமைவதே உயிர்த்துடிப்பாகும். இதனை,

*வாழ்வும் மொழியும் வளரும் பொருளாம்*
*ஆழ்திரை விரையும் ஆற்றின் நீரென*
*ஓட்டம், புதுமை, உயிர்த்துடிப் பிவையதன்*
*ஈட்டமாம்; தேக்கம் இறப்பின் வாயிலாம்* (ப. 353)

என்று கூறுகிறார் கவிஞர். உலகமொழிகள் அறிவியலால் முன்னேற, தமிழ் பின்தங்கியுள்ளது. தமிழும் அறிவியல் நூல்களில் முன்னேற வேண்டுமென்பதை,

*அந்நிய மொழிக்குலம் முன்நடக்கும் - புது*
*அறிவின் துறைகளை வழிநடத்தும்,*
*என்னுடை மொழிஅவண் இல்லையடா - அது*
*எங்கோ தேங்கி ஏங்குதடா* (ப. 362)

என்று, முன்னேறா நிலைகண்டு ஏக்கமுறுகிறார். 'யுனெஸ்கோ' பெற்றுள்ள இருபத்தைந்து துறைகளிலும் தமிழில் சிறந்த நூல்கள் வெளிவர முயற்சி மேற்கொள்ள வேண்டும். அந்நூல்களை அவ்வத்துறை வல்லுநர்கள்தாம் எழுத இயலுமென்பதால் அவர்களனைவரும் தமிழ் அறிஞர்களாக இருக்க வாய்ப்பில்லை; தெரிந்த தமிழில் இயன்றமுறையில் எழுத அவர்களை ஊக்குவிக்க வேண்டும். அவ்வாறு எழுதப்பட்ட நூல்கள் பயன்படுத்தப்படாவிட்டால் மேலும் நூல்கள் வர வாய்ப்பில்லாது போய்விடும். இங்குத்தான் மேம்பாடும் பயன்பாடும் இணைந்து செயல்பட வேண்டும்.

தமிழக அரசு பல நிறுவனங்களை அமைத்துத் தமிழ் வளர்ச்சிக்கு உதவி செய்கிறது. உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சொற்பிறப்பு அகரமுதலித்திட்ட இயக்ககம், தமிழ் வளர்ச்சி இயக்ககம், திருக்குறள் ஆய்வு மையங்கள், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், தென்மொழி அறக்கட்டளை, இயல் இசை நாடக மன்றம், தொல்பொருள் ஆராய்ச்சித் துறை போன்றன அவற்றுள் சில. அரசு சார்பில் இவை அனைத்தும் தம்மால் இயன்ற பணிகளைச் செய்து வருகின்றன. ஆட்சியிலும் நீதியிலும் கல்வியிலும் வழிபாட்டிலும் தமிழின் செல்வாக்கு மேலும் வரவேண்டும்.

> *தமிழகத்தில் 1956இல் தமிழ் ஆட்சிமொழிச்சட்டம் வந்தது. அதன்பின்னர்த் தமிழைப் பையப் பைய ஆட்சியில் உயர்த்த முயன்றனர். ஆட்சிமொழிச் சட்டம் செயல்படுவதற்கு ஆட்சிமொழிக்குழு 1957இல் அமைந்தது. ஆட்சிமொழிக் குழுவிற்கு உதவிசெய்வதற்காக 1959இல் தமிழ் வளர்ச்சி மன்றம் அமைக்கப்பட்டது. நீதிமன்றங்களில் தமிழில் தீர்ப்பு வழங்கும் ஆணை 18.01.1982இல் பிறப்பிக்கப்பட்டது. அதேபோல் 21.06.1978இல் தமிழில் கையெழுத்து இடல் வேண்டும்*[20]

என்ற ஓர் ஆணையும் பிறப்பிக்கப்பட்டது. தமிழ் மேம்படுவதற்கான வாய்ப்பளிக்கப் பட்டும் முழுமையாகத் தமிழ் வளராதுள்ளது.

1963க்குள் அந்தந்த மாநில மொழிகளில் கல்வி வழங்க வேண்டுமென்பது மைய அரசின் குறிக்கோளாக இருந்தாலும் அது நிறைவேற்றப்படவில்லை. தமிழகக் கல்வியமைச்சராக இருந்த அவினாசிலிங்கம் செட்டியார் தமிழில்தான் கல்வி வழங்கப்பட வேண்டும் என்பதில் ஆழ்ந்த கருத்துக்கொண்டிருந்தார். அவரைத்தொடர்ந்து கல்வியமைச்சரான சி. சுப்பிரமணியம்,

> *சட்டசபையைத் தமிழில் நடத்தினால் மட்டும் போதாது. சர்வகலாசாலைப் பாடங்களும் தமிழிலேயே போதிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஆனால் அது என்றைக்குச் சாத்தியமாகும் என்று எனக்கே தெரியவில்லை. இதை சர்வகலாசாலை செய்ய வேண்டும். இல்லையேல் மக்கள் சார்பில் அரசாங்கம் தலையிட்டுத் தீரவேண்டிய அவசியம் ஏற்படும்*[21]

என்று கூறினார். இதன் எதிரொலியாக, அன்று கோவை அரசு கல்லூரியில் தமிழ் மூலம் கல்வி வழங்கப்பட்டது.

*ஒரு நாட்டில் ஆட்சிமொழி யாவதற்குத் தாய்மொழி என்னும் தகுதிக்கு ஈடாக வேறு எந்தத் தகுதியும் ஒரு மொழி பெற்றிடத் தேவையில்லை*[22]

என்று கூறி, தமிழை ஆட்சிக் கட்டிலில் ஏற்றினார் அன்றைய முதல்வர் அண்ணா. ஆயின் தமிழ் முழுமையான ஆட்சிமொழியாகிட மொழிச்சிக்கல் காரணமாக இருந்தது. இந்தி ஒரு மொழிச்சிக்கல் என்பதெல்லாம் நாமே உருவாக்கிக் கொண்டது. இந்தி, வடமொழி, ஆங்கிலம் ஆகியவற்றை எதிர்ப்பதால் தமிழ் வளர்ந்துவிட முடியாது. தமிழை வளர்த்துக் கொண்டுதான் மற்றவற்றை எதிர்க்க வேண்டும். தமிழை வளர்ப்பதற்குரிய முயற்சிகளில் நாம் முழுமூச்சாகச் செயல்படவேண்டுமேயொழிய மற்ற மொழிகளை எதிர்க்கத் தேவையில்லை. அவை தானே ஒடுங்கிவிடும்.

வள்ளுவர் வாழ்ந்த காலத்தில் தமிழகம் வேதமரபை அறிந்தும், சமண, பௌத்த மதங்களின் தாக்கத்தைப் பெற்றும், வணிகத்தால் கீழை மேலை நாடுகளின் தொடர்பைப் பெற்றுமிருந்தது. அன்றைய நாளில் இடம் பெற்றிருந்த உலகச் சிந்தனை மரபுகளை அறியத் துணை செய்யும் நூல்களில் திருக்குறள் முக்கியமானது. திருவள்ளுவர் படைத்திருக்கும் வாழ்வியல் தத்துவமாகிய இதனை,

*வாழ்வியல் படைத்த மேதை,*
*வள்ளுவன் தந்த முப்பால்*
*சூழ்நிலை அனைத்தும் தன்னுள்*
*சூழ்ந்தொரு பாதை காட்டும்*
*மானிட வேதம்* (பக். 407-408)

என்று கவிஞர் புகழுகிறார். வேத மரபில் அமைந்த சமயச் சடங்குகளும், நம்பிக்கைகளும், மதங்களும், கடவுள்களும், நாத்திகமும் வழக்கத்திலிருந்த அக்காலத்தில் – சமயச் சார்பின்மை என்பது ஒரு கொள்கையாக இடம்பெற்றிராத நாட்களில் – சமயச் சார்பற்ற, காலத்தைக் கடந்து நிற்கும் வரையறைகளைக் கொண்ட ஒரு வாழ்வியல் தத்துவத்தைத் திருவள்ளுவர் முன்வைத்தார். வள்ளுவம் இந்தியத் தத்துவ மரபிற்குத் தமிழ் நிலம் தந்த இணையற்ற பங்களிப்பாகும். இதனை,

*இந்தியத்தின் பண்பாட்டின் விழிகள் என்ப*
*இன்தமிழும் வடமொழியும் என்னும் உண்மை*
*விந்தியத்தின் வடக்கேயும், கடல்கள் தாண்டி*
*மேல்நாட்டு மன்றத்தும் விளக்க வேண்டும்* (ப. 464)

என்று குறிப்பிடுகின்றார். நீண்ட பண்பாட்டு வளர்ச்சிக்குச் சொந்தக்காரர்களான தமிழர்களின் ஒப்பற்ற பிரதிநிதி வள்ளுவருக்குக் குமரி

முனையில் 01.01.2000 இல் சிலை நிறுவப்பட்டது தமிழ்ப்பற்றின் உண்மையான பிரதிபலிப்பாக அமைகிறது. இதனை,

*போற்றுவதும் தகுந்தவரைப் புகழ்வதும் நம்*
*பொறுப் பென்னும் நெறியுடையோம்* (ப. 209)

என்கிறார். மனிதனின் வயது அதிகரிக்கும் பொழுது, அனுபவத்தில் முதிர்கிறான். அவ்வனுபவம் அவனுடைய அகமனத்தில், எண்ணத்தில், சிந்தனையில் தாக்கம் செய்கிறது. இது குலோத்துங்கனைப் பொறுத்தமட்டில் முழுமையும் உண்மையாகும். அதனால்தான்,

*இன்பத் தமிழ் அலவோ - எம*
*தெண்ணப் பெருவெளி தன்னில் ஒளிர்நிலா*
*அன்புக்கடல் அடடா — தேறல்*
*ஆறாய்ப் பெருகிக் கரைபுரள் காட்சிகாண்;*
*மன்பதைத் தோழர்களே - ஓடி*
*வாரீர் - தெவிட்டாது வாரிப்பருகுவோம்.* (ப. 339)

என்று அழகாகப் பாடமுடிகிறது.

*சங்கம் கண்டதும், தம்துறை தெளிந்தோர்*
*அங்கமர்ந் துறுபொருள் ஆய்ந்த மாட்சியும்,*
*வள்ளுவன் ஔவை வாழ்ந்ததும், புதுமலர்க்*
*கள்ளுயர் காவியம் கம்பன் தந்ததும்*
*மன்னவன் இளங்கோ வரிச்சிலம் பொலியிலுன்*
*இன்னிசை முழங்க இழைத்த பெற்றியும்*
*கல்லும் தம்கலைக் கைபடப் பேசும்*
*வல்லுநர் நுண்கலை வகுத்த காலமும்,*
*கங்கை கொண்டதும் கடலிகந் துன்னினம்*
*சிங்களம் கீழைத் தீவகம் வென்றதும்,*
*பனிவரை உன்கொடி பறக்க, நீபுகழ்*
*நுனியிடை இன்பம் நுகர்ந்த நாளெல்லாம்*
*கனவோ? பண்டைக் கதையோ? காலப்*
*புனலோ டேகிய பொருளோ?* (பக். 350 – 351)

என்று தமிழின் பெருமையையும்

*கல்வியில், கலைகளில், கருத்தின் நுண்மையைச்*
*சொல்வதில், உண்மையைத் துருவி ஆய்வதில்*
*மாண்புடைக் காவிய மரபின் உச்சியைக்*
*காண்பதில் எம்மினம் கண்ட வெற்றியை* (ப. 385)

நினைத்து மகிழ்ச்சி கொள்ளமுடிகிறது என்கிறார் குலோத்துங்கன். திருவள்ளுவரின் திருக்குறளால் மன்பதை ஒன்று என்னும் கானம்

பிறந்தது. நெஞ்சம் விரிந்தது. ஞானம் மலர்ந்தது. முப்பால் அமுதுண்டதால் ஈனம் அழிந்தது. எனவே, தமிழ் மறையாம் திருக்குறளைக் கூறின் உலகம் இன்பத்தைப் பெறும். தமிழின் மேம்பாட்டைக் கவிஞர் குலோத்துங்கன் இவ்வண்ணம் சிறப்பித்துள்ளார்.

தமிழின் பயன்பாடு மிகுந்திட மிகுந்திடத் தமிழுக்கு மரியாதை வரும். தமிழின் பயன்பாட்டை வளர்க்காமல் தமிழைப் போற்றிப் புகழ்வதில் பயனில்லை. கவிஞர்கள் தங்களுடைய தாய்மொழி மீது அளவற்ற காதலும் பக்தியும் கொண்டவர்கள். இவர்களுள் பெரும் பாலோர் பண்டைய பெருமையைப் போற்றிக் கொண்டிருப்பார்களே யன்றி, நிகழ்கால நிலையிலிருந்து வருங்காலத் தேவைகளுக்கு ஏற்ப மொழி மாற்றம் அமைய வேண்டுமென்றோ வளர்ச்சியடைய வேண்டுமென்றோ சிறிதும் எண்ணமாட்டார்கள். தமிழின் அளப்பரிய ஆற்றலையும் வளத்தையும் குலோத்துங்கன் உணர்ந்ததால் அவர் பார்வை பக்திப் பார்வையில் அமையவில்லை. பக்திப் பார்வை ஒரு பக்கம் சாயத்தக்கது; குறை உணராதது; நடுநிலையைப் பேணாதது. குலோத்துங்கன் பகுத்தறிவுப்பார்வை கொண்டவர். அவர் நாளைய வளர்ச்சியை எண்ணி ஆழ்ந்து சிந்திப்பவர். அடிப்படையில் இவர் ஓர் அறிவியல் கவிஞராதலின் இவருடைய பார்வை வேறுபட்டதாக உள்ளது.

*இன்பத் தமிழ்மொழித் தாயே — உயிர்*
*ஏறிக் கலந்த உணர்வே!*
*துன்பம் துடைக்கும் மருந்தே - மாந்தர்*
*தோன்றிய ஞான்றுனைக் கண்டார்;*
*திண்மை அருள்மறம் வீரம் - யாவும்*
*சேர்த்ததுன் தீஞ்சுவைப் பாலே!*
*அன்பை வளர்த்தனை வாழி - உயிர்*
*அறிவொளி யாண்டும் விரித்தாய்* (ப. 337)

என்று தொடக்கக் காலத்தில் தமிழின் இனிமையைப் பேசுபவராக இருப்பினும், அங்கும் அன்பை வளர்த்தாய், அறிவை விரித்தாய் என்று பயன்பாட்டை நோக்கியே சிந்திக்கின்றார். பழம்பெருமையைப் பேசிப் பேசியே காலங்கழித்தவர்களால் பலன் எதுவும் பெறாமலும், பண்பாட்டை அறியாதவர்களாகவும் இருக்கின்றவர்களால் ஒரு பயனும் விளையப் போவதில்லை என்பதை,

*எதைநம்பிப் பேசுகிறீர்; தமிழர் நம்மோர்*
*ஏற்றத்தின் ஊற்றறியீர்; ஆய்வில் லாது*
*கதை சொல்லி என்னபயன்; தமிழர் பண்டைக்*
*கலைச் செல்வம் முழுமையையும் கண்ட ரில்லை* (ப. 363)

என்று கூறுகிறார். அத்துடன் உலகத்தின் துறையனைத்தும் தமிழ் மொழியில் வளரவேண்டும் என்ற தமது விருப்பத்தை வெளிப்படுத்துகிறார்.

உலகின் பெரும்பாலோர் தத்தம் தாய்மொழியிலேயே அறிவியலைக் கற்கிறார்கள். தாய்மொழியில் அனைத்து நூல்களையும் துணைநூல்களையும் இயல்பாகவும் எளிதாகவும் கற்கமுடிகிறது. தாய்மொழியில் கற்றால் சிந்தனையாற்றல் நன்குபெருகிப் பயன்கிட்டும். அனைத்துப் பகுதியினருக்கும் தாய்மொழிவழி அறிவியல் சென்று சேர்ந்தால், ஆயிரமாயிரம் பேர் அறிவியல் அறிஞர்களாக மாறுவர். இந்த நிலை நம் தமிழகத்தில் இல்லை. மாறாக எண்ணற்ற தடைகளே உள்ளன. பிறநாடுகள் வேகமாக முன்னேற, நம்நாடு மிகப் பின்தங்கி யுள்ளதைப் 'புவிமுந்துதடா' என எச்சரிக்கின்றார் கவிஞர். பல துறைகளில் உலகமொழிகள் வளர்ந்துள்ள நிலையில் நம்மொழியைப் பல துறைகளில் வளர்க்கவில்லை என்பதை,

*நாளும் நம்மொழி பிந்துதடா - புவி*
*நம்மைப் பிரிந்து முந்துதடா.*
*ஆளுமை தருவது கல்வியடா - நமக்கு*
*அன்னை மொழித்துணை இல்லையடா* (ப. 362)

என்று வெளிப்படையாகக் கூறுகிறார்.

*திருக்குறளும் சிலம்பொலியும் கம்பன் செய்த*
*சித்திரமும் தேவையெலாம் தீர்ப்பதுண்டோ* (ப. 346)

என்று கூறும் கவிஞர் குலோத்துங்கன் வள்ளுவர், இளங்கோ, கம்பன் ஆகியோரிடம் மிகுந்த மதிப்புக் கொண்டவர். ஒரு நாட்டின் வளர்ச்சி வெறும் இலக்கியத்தில் மட்டுமின்றி அறிவியலிலும் நாம் கவனம் செலுத்த வேண்டும். ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு அறிவியல் கல்வி மிகவும் இன்றியமையாதது. அறிவியலில் முன்னேறிய நாடுகளே இன்று முன்னேற்றம் மிக்க நாடுகளாக உள்ளதால் அறிவியலைப் புறக்கணித்துவிட்டு நாம் வாழ்ந்துவிட முடியாது. அதனால் மருத்துவம், பொறியியல், அணுவியல் போன்ற துறைகளைத் தமிழில் கற்கும்நிலைவர வழிசெய்தல் வேண்டுமென்பதை,

*வள்ளுவரும் இளங்கோவும் மற்றும் இங்கு*
*வாழையடி வாழையென வந்த மேதைத்*
*தெள்ளுதமிழ்ச் சான்றோரும் எண்ணி எண்ணித்*
*தேர்ந்தனவும் தெளிந்தனவும் கடந்து நிற்கும*
*புதியதுறை புதியகலை நாளும் நாளும்*
*புலர்கிறது வையத்தில்; புதிய காணும்*

*கதிநிதமும் வளர்கிறது; காலம் வெல்லக்*
*கன்னிமொழி பெறவேண்டும்* (ப. 404)

*இனியதமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும்*
*எதிர்காலத் தேவையெலாம் ஏற்கவேண்டும்* (ப. 405)

*வளமுண்டு சொல்லமைப்பில், புதிய சேர்க்கும்*
*வாய்ப்புண்டு தமிழ்மரபில், மாற்றம் ஏற்கும்*
*அளவுண்டு மொழிநூலில், துறைகள் தோறும்*
*ஆய்வுடையார் தலைமையுடன் அமர வேண்டும்* (ப. 365)

என்று உறுதிபட உரைக்கிறார். பிற நாடுகளில் அறிவியல் துறைகள் மிகவும் வேகமாக முன்னேறிட, நாம் செய்யவேண்டிய பயணம் மிகவும் நீண்டதென்பதை எண்ணி, காற்றின் வேகம் போல் செயற்பட வேண்டும். எவ்வகை மாற்றத்தையும் எதிர்கொள்ளுமாற்றல் தமிழுக்குண்டு. அறிவியலறிவு மக்கள்மயமாகி, எண்ணற்ற அறிவியல் அறிஞர்கள் உருவாவர். இதனால் தமிழர்கள் நிலை உயர்ந்து தமிழும் உயரும். தமிழர் உயர்வில்லாமல் தமிழ் உயர்வில்லை என்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

கல்வி, ஆன்மீகம், தகவல் தொடர்பு, மாநில ஆட்சி, மைய ஆட்சி எனப் பல மட்டங்களிலும் மொழியின் பயன்பாடு வளர அரசியல் கட்சிகளிடையே ஒருங்கிணைந்த மொழிக்கொள்கை வேண்டும். பல மாநிலங்களில் அரசியல் கட்சிகளுக்குள் மொழிக்கொள்கையில் வேற்றுமையில்லை. தேசிய மற்றும் மாநிலக் கட்சிகளின் மொழிக் கொள்கை ஒன்றாகத்தான் உள்ளதெனினும், தமிழகத்தில் இவற்றின் மொழிக்கொள்கை வேறானவையாக உள்ளது. மொழிக்கொள்கையைப் பொறுத்தவரை தமிழகத்து அரசியல் கட்சிகள் தங்களுக்குள் குறைந்தபட்ச செயல்திட்டம் (Common minimum program) ஒன்றைக் காணவேண்டும். இதனை,

*தமிழர் நம்மொழியும் வாழ்வும்*
*சிறப்புற வழிஎஃ தென்ற*
*தெளிவு உள்ளத் துண்டோ?* (ப. 178)

என்று கேட்கிறார். மொழிக்கொள்கையில் தெளியவேண்டுவது நமது கடமையாகும் என்பதைக் கூறாமல் கூறிச் செல்கிறார். தெளிந்தால் மொழியும் நாடும் நலம்பெறும்.

மத்திய அரசு நிறுவனங்கள் நாடு முழுவதும் அதாவது மாநில, மாவட்ட, பஞ்சாயத்துகளில் ஆங்கிலம், இந்தி ஆகிய இருமொழிகள் மட்டுமே பயன்படுத்தப்படுகின்றன. மாநில மக்களுக்குப் புரியாததொரு மொழியில் மத்திய அரசின் அலுவல்கள் நடத்துவது மக்களாட்சித்

தத்துவத்திற்கு ஏற்றதல்ல. ஆங்கிலம் இந்தியுடன் எம்மாநிலத்தில் மத்திய அரசு அலுவலகம் உள்ளதோ அம்மாநில மொழியையும் பயன்படுத்த வேண்டுமென்பதை,

*மைய அரசின் மாநில அரசுகளின் பணிகள் நாட்டின் ஒரு பகுதியில் வாழும் மக்களோடு நேரடியாகத் தொடர்பு கொள்வதாக இருக்கும்பொழுது இப்பணிகள் அம்மக்களின் மொழி யிலேயே நடைபெற வேண்டும். மக்கள் நல ஆட்சியில் இது மிகவும் முக்கியமானதாகும். எல்லாப் படிவங்களும் விண்ணப்பத்தாள்களும், கடிதங்களும் இரசீதுகளும் அறிக்கைகளும் அந்தப் பகுதி மக்கள் பேசும் மொழியிலும் ஆட்சிமொழியிலும் இருக்க வேண்டும். மொழிச் சிறுபான்மையினரைக் கணிசமாகக் கொண்ட பகுதிகளில் மாநிலங்கட்கும் இக்கொள்கை முக்கியமானதாகும்*[23]

என்று சர்க்காரியா குழு வலியுறுத்துகிறது.

இன்றைக்குத் தமிழைப் பேசுபவர்களும் எழுதுபவர்களும் ஆங்கிலச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்துகிறார்கள். இதற்குப் பல காரணங்கள் உள்ளன. அறிவியல் தொழில்நுட்பத் துறைகளில் மட்டுமின்றிச் சாதாரண பேச்சுவழக்கில் பயன்படுத்தப்படும் பல ஆங்கிலச் சொற்களுக்கு நேரான தமிழ்ச்சொற்கள் அறிமுகப்படுத்தப் படவில்லை. பாண்டியன் அமைத்த தமிழ்ச்சங்கம் இன்று நான்காவது தமிழ்ச்சங்கமாக மறுபிறவி பெறுமாயின் அதன் புலவர்கள் கவிதை காவியம் படைத்து, படைத்தவற்றை எடைபோட்டு ஏற்பவர்களாகவோ புறக்கணிப்பவர்களாகவோ மட்டுமன்றி அங்குப் பன்மொழிப் புலமையும் பல்துறை வல்லமையும்கொண்ட அறிஞர்கள் இடம்பெறுவார்கள்.

*உலகின் பல பாகங்களிலும் நாளொரு புதுமையும் பொழுதொரு கண்டுபிடிப்புமாக முன்னேறிவரும் அறிவுத்துறைகளில் ஆங்காங்குப் படைக்கப்படும் புதிய சொற்கள் அவ்வப்பொழுது தமிழில் இடம் பெற வேண்டும்*[24]

என்று நா. பார்த்தசாரதி கூறுவதற்கேற்ப,

*கன்னிநம் தமிழென் கின்றோம்*
*கவிஞரின் கூற்றச் சொல்லை*
*உன்னிநன் கோர்ந்தி டாது*
*ஓதுதல் தொழிலாக் கொண்ட*
*புலவருக் குரைப்போன்: கன்னி*

*புதுமையி லன்ற லர்ந்த்*
*மலரெனும் தரத்தள்; சற்றும்*
*வாடுதல் அறியாள்; என்றும்*
*இற்றையொ டிணைந்து நிற்போர்க்*
*கியல்வது இளமை; முந்தைப்*
*பற்றொடு, புதுமை சேர்க்கும்*
*பண்பிலார் வளர்வ தில்லை* *(ப. 355)*

என்று கவிஞர் குலோத்துங்கன் படம்பிடித்துக் காட்டுகிறார். மொழி பெயர்ப்பு ஒரு முடிவில்லாத, விழிப்புடன் தொடர்ந்து செய்யவேண்டிய வினை; புலமை நுட்பமுடையாரின் புனிதமான கடமை.

**4. மொழிக் கொள்கையும் குழுக்களும்**

தமிழகத்தில் மற்ற மாநிலங்களுக்கு இல்லாததொரு மொழிப் பிரச்சினை இருக்கிறது. மற்ற மாநிலங்கள் மும்மொழிக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகின்றன.

1. தாய்மொழி
2. ஆங்கிலம்
3. இந்தி அல்லது ஏதாவது ஓர் இந்திய மொழி

மூன்றாவது மொழியாக ஏதாவது ஓர் இந்திய மொழி எனக் கூறப்பட்டாலும் இந்தி பேசாத மாநிலங்களில் இந்திதான் மூன்றாவது மொழியாகக் கருதப்படுகிறது. இந்தி பேசாத மற்ற மாநிலங்கள் மும்மொழித் திட்டத்தைச் செயல்படுத்த, தமிழகம் இதில் வேறுபடுகிறது. 1968இல் தமிழகத்தில் இருமொழித்திட்டம், அதாவது முதலாவது மொழியாகத் தமிழும் இரண்டாவது மொழியாக ஆங்கிலமும் நடைமுறைபடுத்தப்படும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனால் அரசு பிறப்பித்த ஆணையில் இவ்வாறு வரையறுத்து,

1. தமிழ்
2. ஆங்கிலம்

எனக் குறிப்பிடப்படவில்லை; குறிப்பிடவும் இயலவில்லை. ஒவ்வொரு மாநிலத்திலும் அந்த மாநில மொழி அல்லது வெவ்வேறு இந்திய மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்ட இந்தியக் குடிமக்கள் இருக்கிறார்கள். இந்திய அரசியலமைப்புப்படி ஒரு மாணாக்கனுக்குத் தன் தாய்மொழியைக் கற்கும் உரிமையைக் கல்வித்திட்டம் வழிவகுக்க வேண்டும். எனவே அரசு பிறப்பித்த ஆணை மற்ற மொழியாரின் குழந்தைகளும் தங்கள் தாய்மொழியைக் கற்க வாய்ப்புக் கொடுக்கும் வகையில் முதற்பகுதி. பிராந்திய மொழி அல்லது தாய்மொழி,

இரண்டாவது பகுதி ஆங்கிலம் என்று குறிப்பிடுகிறது. இதனால் தமிழகத்தில் தமிழ் படிக்காமலேயே முதல் வகுப்பு முதல் பட்ட வகுப்பு வரை படித்துப் பட்டம் பெறலாம். 1968இல் பிறப்பிக்கப்பட்ட பிராந்திய மொழி அல்லது தாய்மொழி என்று இருந்ததை மாற்றித் தமிழ்நாடு அரசு 19.11.1999இல்

*அனைத்துப் பள்ளிகளிலும் தமிழ் அல்லது தாய்மொழியே முதல்மொழியாகப் பயிற்றுவிக்க வேண்டும்*[25]

என்று மறுஆணை பிறப்பித்தது.

முந்தைய ஆணையில் பிராந்திய மொழி அல்லது தாய்மொழி என்று குறிப்பிட்டதற்கு மாற்றாகத் தமிழ் அல்லது தாய்மொழி எனப்புதிய ஆணை குறிப்பிடுகிறது. இதிலும் பெரிய மாற்றமில்லை; இப்பொழுதும் தமிழைத் தாய்மொழியாகப் பெறாத மாணாக்கர் தமிழ் படிக்காமலே தங்கள் தாய்மொழியைப் படித்துப் பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடிக்க முடியும். நமது அரசியலமைப்புப்படி ஒரு மாணாக்கன் தன்னுடைய தாய்மொழியைக் கற்பதற்கான வாய்ப்பினை மறுக்க இயலாது. இரு மொழிக் கொள்கையைக் கடைபிடிக்கும் வுரை தமிழ்மொழியைக் கல்விக் கூடங்களில் அனைவருக்கும் கட்டாயமாக்க முடியாது.

மத்திய அரசு, தேசியச் சுவடிகள் குழு (National Commission for Manuscripts) என்ற ஒரு குழுவை உருவாக்கியிருக்கிறது. இதனுடைய கடமை இந்திய மொழிகளிலுள்ள பழஞ்சுவடிகளை - அவைகள் இலைகள், ஏடுகள், மரப்பட்டைகள், காகிதம் எனப் பல ஊடகங்களில் இருப்பதை - அடையாளம் கண்டு வகைப்படுத்திக் காப்பதாகும். எட்டு உறுப்பினர்களைக் கொண்ட இக்குழுவில் பெரும்பாலும் வடமொழிக் குடும்பத்தைச் சார்ந்தவர்களே உள்ளனர். இந்தியாவின் தொன்மையான மொழிகளில் வடமொழிக்கு ஒத்த நிலையில் தமிழ்மொழி பழஞ் சுவடிகளின் வளம்கொண்டது.

*அழிந்துவிட்டது போக இன்றும் ஏறத்தாழ 70000 சுவடிகள் உள்ளன*[26]

என்று கூறப்படுகிறது.

இன்று தமிழ் ஓலைச்சுவடிகளின் நிலை கவலைக்குரிய ஒன்று. ஏனெனில் ஓலைச்சுவடிகளை அதிகபட்சம் இருநூறு ஆண்டுகளுக்குள் திரும்ப எழுதப்படவில்லையேல் அவை அழிந்துவிடும். சுவடிகளின் தொன்மையும் எண்ணிக்கையும் நமது பண்பாட்டின் அடிப்படையை உலகுக்கு அறிமுகப்படுத்துவதில் இன்றியமையாதவை. ஆதலால் தேசியச் சுவடிகள் குழுவில் தமிழறிந்த ஒருவராவது இடம்பெற்றிருக்க வேண்டும். தமிழ்ச் சுவடிகள்பற்றிய அக்கறை சிறிதும் பிரதிபலிக்காதது

வியப்பையும் வேதனையும் தருகிறது. நாம் இந்தியாவின் பண்பாட்டுப் பாரம்பரியத்தில், பல்வகை அறிவுத்துறைகளில் வடமொழியின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடவில்லை. ஆனால் தேசியச் சுவடிக்குழு என்ற ஒன்றை அமைத்து, அதனுடைய உறுப்பினர் தேர்வு வடமொழிச் சுவடிகள் போன்று அமைக்கப்பட்டுள்ளது. இது மற்ற மொழிகளின் பயன்பாட்டிற்குத் தவறிழைப்பது மட்டுமின்றித் தேசியம் என்று எண்ணுவதற்கும் பேசுவதற்கும் எதிர்மறையான போக்காகும். பாரதத்தின் பன்மையை மறப்பது, அதன் வலிமையான அடிப்படையைத் தகர்ப்பதாகும். இத்தொலைநோக்கில்லாத ஆர்வலர்கள்,

> பாரத ஒன்றியம் பன்மையின் கூட்டெனும்
> உண்மை ஏற்கிலார் ஒற்றுமை தகர்க்கும் வன்கணர் (ப. 397)

என்பதை உணரவேண்டும் என்கிறார் கவிஞர் குலோத்துங்கன். இந்த வன்கண்மை வளர்வது நாட்டின் ஒற்றுமைக்கும் உயர்வுக்கும் எதிர்கால நலனுக்கும் ஏற்றதல்ல.

தமிழகத்தில் புதிதாக அமைக்கப்பட்டு வரும் நாற்கர (Quadrilateral) தேசிய நெடுஞ்சாலையின் தொலைவுக் கற்களில் (Milestone) ஊர்ப்பெயர் இந்தியில் மட்டுமே எழுதப்பட்டதை 5.3.2003இல் மக்களவையில் எழுப்பப்பட்டபோது அப்போது சமாஜ்வாடி கட்சியைச் சேர்ந்த பிரபுநாத்சிங், இந்தி இந்த நாட்டின் தேசியமொழி அதைத்தான் பயன்படுத்த வேண்டும் என்றார். இந்தி தேசிய மொழி என்று இவர்மட்டும் கூறவில்லை, பல நேரங்களில் பல தேசியத்தலைவர்கள் பல இடங்களில் கூறியுள்ளனர். இது ஐயத்திற்கு இடமில்லாத அரசியலமைப்பு அங்கீகாரம் பெற்ற உண்மை போலப் பேசப்படுகிறது.

> *நமது அரசியலமைப்பில் தேசிய மொழி என்ற தகுதி எந்த ஒரு இந்திய மொழிக்கும் கொடுக்கப்படவில்லை. இந்திய தேசிய ஒன்றியத்து அரசு அலுவல்மொழி (The Official Language of the Union) தேவநாகிரி. வரி வடிவத்திலுள்ள இந்தி இந்திய ஒன்றியத்து அரசு அலுவல் மொழியாக இருக்கும்*[27]

என்றுமட்டும் உள்ளது. நமது அரசியலமைப்புப்படி இந்தி மத்திய அரசின் அலுவல்மொழி. இந்தி மொழியின் கூடுதல் தகுதி, இதுமட்டுமேயன்றி, தேசிய மொழியன்று. தேசிய மொழி என்பது வேறு; அலுவல் மொழி என்பது வேறு. மத்திய அரசின் அலுவல்மொழி என்பது மற்ற இந்திய மொழிகட்கு இல்லாத ஒரு கூடுதல் பயன்பாட்டை மட்டும் குறிக்கிறது. ஆனால், அதனை இந்தியாவின் தேசிய மொழி என்று குறிப்பிடுவதன் மூலம் மற்ற மொழிகளுக்கு இல்லாத ஒரு புனிதத் தன்மைய்யை அதற்குக்

கொடுத்துவிடுவதுபோல் அமைகிறது. அப்படிப்பட்ட புனிதத்தன்மையை எந்த ஒரு மொழிக்கும் கொடுத்துவிடவில்லை.

> *நமது அரசியலமைப்பை வகுத்தபெருமக்கள் பாரதத்தின் பண்பை அறிந்தவர்கள். பழமை வாய்ந்த மொழிக் குடும்பங்களின் வரலாற்றையும் மொழிகளின் வளப்பத்தினையும் அறிந்தவர்கள். இந்திய மொழிகள் அனைத்துமே தேசிய மொழிகள்தாம். அது சிம்மாசனத்தில் தனியாக எந்தமொழியையும் உட்கார வைக்க வில்லை. இந்திய அரசமைப்பின் எந்த ஒரு இடத்திலும் தேசிய மொழி என்ற சொற்றொடர் இடம்பெறவில்லை*[28]

என்று தெளிவுபடுத்துகிறார்.

அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிகள், ஒரு சமுதாய சிறுபான்மையினரின் தனித்தன்மைக்கும், உலகில் சிறுநாடுகளின் தனித்தன்மைக்கும் எதிரான விளைவுகளை உருவாக்குகின்றன. பெரும்பான்மையினரின் பழக்கவழக்கங்கள், நாளடைவில் சிறுபான்மை யினரின் வாழ்க்கை, மொழி, பண்பாடு இவற்றை ஆக்கிரமிப்பதால் பெரும்பான்மையினரில் கரைந்து அடையாளத்தை இழந்து வருகின்றனர். ஒரு சில சடங்குகளில் மட்டுமே தங்களைச் சிறுபான்மையினராக அடையாளம் காட்டும் நிலையிலுள்ளனர்.

*இந்தியத் துணை கண்டத்தின்*
*எல்லைகள் கடந்து, பூமிப்*
*பந்திடை அமைந்த நாடு*
*பலவினும் பரவி வாழும்*
*செந்தமிழ் மக்கள்* (ப. 12)

என்று கவிஞர் கூறுவதுபோல், தமிழர்கள் மொரீஷியஸ், ரெயூனியன், தென்னாப்பிரிக்கா, பிஜி போன்ற நாற்பதுக்கும் மேற்பட்ட நாடுகளில் பரவி வாழ்பவர்கள் தங்கள் தாய்மொழியை (தமிழை) மறந்துவிட்டார்கள். தீ மிதித்தல், அலகு குத்துதல், காவடி தூக்குதல் போன்ற சமயம் சார்ந்த பழக்கங்களும் கோவில் வழிபாடுகளுந்தான் அவர்களைத் தமிழர்கள் என்று அடையாளம் காட்டுகின்றன. மொரீஷியஸ் தமிழர்களைப் பற்றிக் கவிஞர் குலோத்துங்கன்,

*பெயரினில் தமிழைக் கண்டேன்*
*பெருகிடும் அன்பின் பண்பின்*
*உயர்வினில் தமிழைக் கண்டேன்*
*ஒளிர்நகை மலரும் பெண்டிர்*

*அணிகளில் தமிழைக் கண்டேன்;*
*ஆடையில் தமிழைக் கண்டேன்;* (ப. 370)

*நாவினில் அலகு தைக்கும்*
*நடப்பினில், முருகனுக்குக்*
*காவடி தோளில் தாங்கும்*
*காட்சியில் தமிழைக் கண்டேன்* (ப. 370)

*மூச்செனை மரபு காத்த*
*மொரீசியத் தமிழர் தங்கள்*
*பேச்சினில் தமிழைக் காணேன்*
*பெரிதவர் ஏக்கம் கண்டேன்* (ப. 371)

என்று பாடுகின்றார்.

**5. தமிழ் இணையப் பல்கலைக்கழகமும் தமிழ் வளர்ச்சியும்**

இருபதாம் நூற்றாண்டில் போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட வளர்ச்சி தொலைத்தகவல்தொடர்புத் துறையிலும் தகவல் தொழில் நுட்பத்திலும் ஏற்பட்ட புரட்சிகரமான மேம்பாடு, உலக வணிக வளர்ச்சி, பரவலாக்கப்பட்ட கல்வி ஆகியவை சேர்ந்து, இந்த உலகைச் சுருக்கி விட்டன. இத்தகைய மாற்றத்தின் தாக்கம் ஒரு நாட்டின் சிறுபான்மை யினராக வாழும் மக்களுடைய நாகரிகம் பண்பாடு மொழி தனித்தன்மை ஆகியவற்றைக் காப்பது கடினமாக உள்ளது. உப்பு, தண்ணீரில் கரைவதுபோல் சிறுபான்மையினரின் தனித்துவம் கரைந்து மறைந்துவிடும் ஆபத்து வளர்ந்து கொண்டே வருகிறது. ஓர் இனத்தின் நாகரிகப் பண்பாட்டிற்கு அடிப்படைக் கொள்கலனாக இருப்பது மொழி. தன்மொழியை இழந்த இனம் தன் தனித்துவத்தை இழந்துவிடும். உலகத் தமிழர்களில் ஏறத்தாழ 20 சதவிகிதத்தினர், தமிழக எல்லைகளுக்கு அப்பால் வாழ்கின்றனர். அவர்கள் காக்கப்பட வேண்டுமானால், தமிழ்மொழியோடு தொடர்பறாது வாழவேண்டும். தமிழ்க்கலைகளுடனும் இலக்கியத்துடனும் உறவுள்ளதாக அவர்களுடைய வாழ்வு அமைய வேராக அமைவது மொழி. இதற்கு அவர்கள் தமிழ் கற்க வேண்டும்; அவர்களுக்குத் தமிழ் கற்க வாய்ப்பு வேண்டும். இதனடிப்படையில் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் தொடங்கப்பட்டு உலகு தழுவிய தமிழர்களை ஒன்று சேர்க்கத் தமிழ் பயன்படுகிறது.

*வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்*
*தமிழ்கூறும் நல்லுலகத்து*[29]

என்று தமிழ்பேசும் எல்லைகளைப் பனம்பாரனார் வகுத்துக்காட்டினார். வடக்கிலும் மேற்கிலும் இவை சுருங்கிவிட்டதெனினும் உலகளவில் தமிழுலகின் எல்லைகள் விரிந்துள்ளன. தமிழர்கள் இப்பொழுதுதான்

முதன்முதலாகத் தமிழின் பயன்பாட்டை, தமிழ் சார்ந்த பிரச்சினையை உலகு தழுவிய ஒரு மொழியின் பிரச்சினையாகப் பார்க்கின்றனர். அவ்வாறு பார்ப்பதற்குத் தகுந்த சூழ்நிலையை உலகின் அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி நமக்குத் தருகிற, அதே சமயத்தில் அவ் வளர்ச்சியை நமது எதிர்கால வலிமைக்கும் வளர்ச்சிக்கும் பயன்படுத்திக் கொள்ளும் அளவிற்கு நாமும் வளர்ந்திருக்கிறோம். நாம் நமது சிந்தனைத் தடத்தைத் திருத்தி அமைத்துக் கொண்டு மொழிப் பிரச்சினையை ஒரு மாநில அல்லது தேசிய அளவுகோலுடன் பார்க்காமல் உலகக் குடிமக்கள் என்ற மனநிலையோடு வருங்காலத்தை எதிர்கொண்டு தமிழின் பயன்பாட்டைப் பெறுவது சிறப்புடையதாகும்.

தாங்கள் வாழும் நாடுகளில் தமிழ் பெற்றிருக்கும் நிலையைக் கொண்டு உலகம் முழுவதும் வாழும் தமிழர்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. இந்தியா, இலங்கை வாழ் தமிழர்கள்,
2. மலேசியா, சிங்கப்பூர், மொரிஷியஸ் போன்ற நாடுகளில் வாழும் தமிழர்கள்,
3. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் வாழும் தமிழர்கள்.

ஒரு மொழியைத் தாய்மொழியாகப் பேசும் மக்கள் இருந்தால்தான் அம்மொழி உயிர் வாழும்; இல்லாவிடில் வழக்கிழந்து விடும். வளமிக்கதும் இலக்கண இலக்கியங்களைக் கொண்டதுமாகிய கிரேக்கம், இலத்தீன், வடமொழி ஆகியவற்றைப் பேசுவோர் இன்மையால் வழக்கிழந்துவிட்டன. உலகில் இன்று தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட 7.5 கோடி மக்களில் 1.5 கோடி மக்கள் தமிழகத்துக்கு வெளியே வாழ்கின்றனர். இவர்களில் மொரீஷியஸ், பிஜி, ரெயூனியோன், தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளில் வாழும் பெரும்பாலோருக்குத் தமிழ் தெரியாது. பிறப்பால், பாரம்பரியத்தால், பழக்கவழக்கத்தால், சடங்குகளால் தமிழர்களாக வாழ்கிற இவர்களிடையே தங்கள் வேர்கள் பற்றிய எண்ணமும் பாரம்பரியம் பற்றிய சிந்தனைகளும் மீண்டும் தங்கள் கலை மொழி பண்பாட்டோடு தொடர்பு கொள்ள வேண்டும்.

ஒருமொழி எந்த மாற்றத்தையும் எதிர்கொள்ள வேண்டும். இன்று உலகம் முழுவதும் பரவிவாழும் தமிழ் மக்களின் தமிழ்ப்பயன்பாடு நாட்டுக்கு நாடு மாறுபட்டிருக்கிறது. எதிர்காலத்தில் இன்னும் பல மாற்றங்கள் ஏற்பட்டு, தமிழுக்குச் சாதகமாகவோ பாதகமாகவோ அமையக்கூடும். இம்மாற்றங்கள் அந்தந்த நாடுகளில் ஏற்படும் அரசியல் பொருளாதாரம் சமுதாய மாற்றங்களைப் பொறுத்திருக்கும்.

உலகமேடையில் நிற்கும் தனிமனிதன் தன்னை அடையாளம் காட்டிக்கொள்ள ஒரு சொந்தம் வேண்டும்; பாரம்பரியம் வேண்டும். ஒருவன் தனது தொழில், சமயம் குடியுரிமை ஆகியவற்றை மாற்றிக் கொண்டாலும் அவன் பிறந்த இனம் உடலோடும் உயிரோடும் ஒன்றியது. அந்த இன அடையாளத்திற்குத் துணையாக நிற்பது அவனுடைய தாய்மொழி. இதை மாற்றிக்கொள்ள முடியாது; மாற்றினால் அது இயற்கையாக இருக்காது. ஒருவருக்கொருவர் தொடர்பின்றி மனித சமுதாயம் உருவாக முடியாது. இத்தொடர்பு மொழியின்றி அமையாது.

இந்தியா இலங்கை சிங்கப்பூர் ஆகிய மூன்று நாடுகளில் தமிழ் தேசிய அளவில் அல்லது மாநில அளவில் ஆட்சிமொழியாக ஏற்கப் பட்டிருக்கிறது. குடியரசு என்பது மக்கள் பங்கேற்க வேண்டிய அரசு. மக்களுக்குத் தெரிந்த மொழியில் ஆட்சி நடந்தால்தான் மக்களின் ஈடுபாடு முழுமையாக உருவம் பெறும். தமிழகம் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் ஏறத்தாழ ஆயிரத்து முந்நூறு ஆண்டுகள் பண்பாட்டு ஆதிக்கத்திற்குப் பின்னரும், தமிழ்மொழி வழக்கொழியாதும் இலக்கிய வாழ்வு பட்டுப்போகாமலும் இருப்பது வரலாற்றுச் சாதனையாகும்.

கடந்தகால வரலாறு எவ்வாறிருப்பினும் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் தமிழர்கள், நாட்டு ஆட்சியில் முழுமையாகப் பங்குகொள்ள வேண்டும். ஆட்சித் தமிழுக்கென ஒரு நடையும் இலக்கணமும் இலக்கியமும் உண்டு. நாடாளுமன்ற நிகழ்வுகளில் ஆங்கிலம், ஹிந்தி ஆகிய இருமொழிகளுடன் தமிழைப் பயன்படுத்தத் தடையில்லை எனினும் பெரும்பாலோருக்குப் புரியும் ஆங்கிலத்தில்தான் தமிழர்கள் பேசுகின்றனர். எனவே தேசிய அளவில் பங்குகொள்ளும் தமிழர்கள், தமிழோடு ஆங்கிலம் அல்லது இந்தி கற்றிருப்பது தேவைப் படுகிறது. இலங்கையின் சொந்த மொழிகள் சிங்களம், தமிழ் என்ற இரண்டுடன் அந்நியமொழியான ஆங்கிலம் அலுவல் மொழியாக அங்கீகாரம் பெற்றுள்ளது. இந்தியாவில், தமிழ் தேசியமொழிகளில் ஒன்று; ஆனால் மாநில அளவில் மட்டுமே ஆட்சி மொழி. இலங்கையில் சிங்களம் தமிழ் இரண்டுமே தேசிய அளவில் ஆட்சி மொழிகள் என்ற தகுதியைப் பெற்றிருக்கின்றன. இன்றுள்ள இனப்பிரச்சினை தீருமானால் தமிழ், இலங்கையின் ஆட்சி மொழிகளில் ஒன்று என்ற தகுதியில் ஐக்கிய நாடுகள் அவையின் அங்கீகாரம் பெற்ற மொழியாகவும் இடம்பெறும். சிங்கப்பூரில் வாழும் தேசிய இனங்களின் தாய்மொழிகளை தேசியமொழி என்ற தகுதியோடு நிறுத்தி, ஆட்சிமொழியாக ஆங்கிலத்தையே பயன்படுத்தி வருகிறது. எனவே, அங்கு இன்றைய நிலையில் அரசியல் மொழி, ஆட்சி மொழி என்ற தகுதியில் தமிழை எதிர்பார்ப்பதற்கு இல்லை. மலேசியா, மொரிஷியஸ் போன்ற நாடுகளில் தமிழ் அங்கீகரிக்கப்பட்ட மொழி ஆனால் அரசியல்

மொழி, ஆட்சி மொழி என்பது வேறு மொழி எனவே அங்கு இன்றைய நிலையில் அரசியல், ஆட்சி போன்ற துறைகளில் தமிழ் நிறைவேற்ற வேண்டிய தேவை குறிப்பிடத்தக்கதாக இல்லை.

இன்று இசையில் ஆர்வம் கொண்டு கற்பவர்கள், சுவைப்பவர்கள் அதிகரித்து வருகின்றனர். அதைப் பயிற்றுவிக்கும் இசைப் பேராசிரியர்களும் இசைக்கல்லூரிகளும் கழகங்களும் செய்து வரும் அரும்பணிகள் அளப்பரியன. இதே வளர்ச்சியும் கலைத்திறனும் சுவை விருப்புடன் பழந்தமிழ் நாட்டில் நாடகம், இசை முதலான நுண்கலைகளைப் பழந்தமிழர் பேணிப் பெருவிருப்போடு சுவைத்து வந்தனர். இசைக் கலையை நுணுகி ஆய்ந்து குணம், குற்றம், இலக்கணம், வழு ஆகிய வரையறைகளைக் கண்ட திறமை பழந்தமிழருக்கு இருந்துள்ளது. அதனை நோக்குமிடத்து அவர்தம் உயர்ந்த கலைவாழ்க்கையின் பண்பட்ட நிலையை அளவிடும் கருவியாக அமைகிறது.

> *உயர்ந்த பண்பாடும் வாழ்க்கையும், வாழ்க்கையைச் சூழ்ந்திருக்கும் கலைகளை அடிப்படையாகக் கொண்டே கருக்கொள்ளத் தொடங்குகின்றன.*[30]

உலகில் அடையாளம் காணத்தக்க அளவில், உயர்ந்த மொழிகள் அனைத்திலும் இலக்கியத்தோடு இசை, நடனம், நாடகம் ஆகியவை இருக்கின்றன. ஆங்கிலத்திற்கு இசைவளமும் நாடகவளமும் உண்டெனினும் அது ஆங்கிலம் என்று மட்டுமே குறிக்கப்படுகின்றது. பிறமொழிகளிலும் அவ்வாறே குறிக்கப்படுகின்றன. தமிழில் மட்டும்தான், அதில் இடம்பெற்றுள்ள இயல் இசை நாடகம் எனும் மூன்றையும் முன்னிலைப்படுத்தும் வகையில் முத்தமிழ் என வழங்கப்படுகிறது. தமிழ் படிப்பவர்கள் இலக்கியத் தமிழைப் படிப்பவர்களாக இருக்கின்றார்களேயொழிய இசை, நாடகம், நாட்டியம் என்ற முத்தமிழ் அவர்களுக்குப் புறம்பாகவே இருக்கிறது. பள்ளியிலிருந்து பல்கலைக் கழகம் வரை நமது பாடத்திட்டத்தில் இசை இடம்பெறல் வேண்டும். தமிழில் பட்டம் பெற்றவர்கள் தமிழ் இசையின் நுட்பங்களைத் தெரிந்திருக்க வேண்டும். இசை, நாட்டியக்கலைகள் அனைவரையும் ஆட்கொள்ளும் திறன் வாய்ந்தவை. தமிழ் மக்களுடைய வாழ்வின் பிறப்பு தொட்டு இறப்புவரை ஒவ்வொரு நிலையிலும் இசை இயைந்திருக்கின்றது.

தமிழ் வளர்ச்சியைத் தனிமனிதர்கள் மட்டும் செய்துவிடவில்லை. பல அமைப்புகள், சங்கங்கள், நிறுவனங்கள், அரசமைப்புகள், பத்திரிகைகள், பதிப்பகங்கள், இதழ்கள் போன்றவை தம்மால் இயன்றளவு அவ்வப்போது செய்து வந்துள்ளன.

*கவிஞர்கள் வாழ்க்கை வளர்ச்சிக்கும் வரலாற்றுத்*
*திருப்பத்திற்கும் முன்னோடியாக விளங்குபவர்கள்*[31]

என்று அறிஞர் பொற்கோ கூறுவதற்கிணங்க கவிஞர் குலோத்துங்கனுடைய 'தமிழ் வளர்ச்சி' பற்றிய கருத்துக்கள் ஆராயப் படுகின்றன. தமிழ் வளர்க, தமிழ் வாழ்க என்று நாம் கூறுவதால் தமிழ் வளர்ந்துவிடுமா? என்ற வினாவை எழுப்பித் தமிழ் வளர்ச்சி குறித்து நம்மைச் சிந்திக்கச் சொல்கின்றார். மேலும், ஒரு சிலர் எப்பொழுதும் பழம்பெருமைகளைப் பேசிக்கொண்டே இருப்பதைப் பார்க்கமுடிகிறது. அத்தகையவர்களைப்பார்த்து,

*வளர்க தமிழ் வாழ்க தமிழ் என்பீர்; கூடி*
*வழுத்துவதால் தமிழ்வளர வசிட்டரா நீர்;*
*அளவிலது பழம்பெருமை புகழ்வீர்; வையம்*
*அறியும்வழி எடுத்தோத அறிந்தீ ரில்லை;* (ப. 346)

பழம்பெருமைகளைச் சொல்லிக்கொள்வதில் ஒரு பயனும் விளையப் போவதில்லை. உலகம் அறியும் தமிழை மற்ற இடங்களுக்கும் பரப்பும் வழிகளை நாம் உருவாக்கிக் கொள்ளவில்லை என்கிறார்.

*உளதரிய கலைப்புதையல் எனினும் அண்டை*
*உள்ளவரும் உணர்ந்தேத்த உரைத்ததில்லை* (ப. 346)

தமிழகத்தின் அண்டை மாநிலமொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளில் தமிழை மொழிபெயர்த்து விளக்காமல், ஒரே இடத்தில் உறையும் தவளைகளைப் போல் நமக்கு நாமே நம்முடைய தமிழ்ப் பெருமையோடு நிற்காது குலப் பெருமையையும் பேசிக்கொண்டு காலங்கழிப்பது கொடுமையான செயலாக இருக்கிறது என்பதை,

*குளமுறையும் தவளையையென நமக்குள் நாமே*
*குலப்பெருமை பேசுவதும் கொடுமை யன்றோ!* (ப. 346)

என்கிறார்.

*வாழ்ந்த பழந் தமிழர்எழு கடலில் தங்கள்*
*வணிகர்கலம் ஓடியநாள்; எண்ணி றந்த*
*ஆழ்ந்தகலைத் திறனுடையார் சங்கம் கூடி*
*அறிவுவளம் பெருக்கியநாள் தமிழ்வ ளர்த்தார்;*
*சூழ்ந்தமர்ந்து சிந்திப்பீர் வளர்ச்சி குன்றிச்*
*சுடர்மங்கி நிற்கின்றோம் உலக மன்றில்* (ப. 346)

*தாழ்ந்த இனம் உயர்ந்த மொழி*
*சமைத்த தில்லை*
*தானாக எம்மொழியும் வளர்ந்த தில்லை* (ப. 346)

நாம் பெருமை பேசுவதும், பெருமையைப் பேசக் கேட்பதுவும் பழக்கமாகிவிட்ட பழமையையே ஆகும். பழமையைப் பேண வேண்டுவதும் போற்றவேண்டியதும் அவசியமானதொன்றெனினும் அப் பழமையையே வழிபட்டுக் கொண்டிருக்கக் கூடாது. இதனைச் சிந்தித்துப் பார்ப்பின் எதிர்கால வளர்ச்சிக்குரிய வழியைக் காணமுடியும் என்று தமிழ் வளர்ச்சிக்குரிய ஊக்கு சக்திகளாக நம்மை மாற்றுகிறார். மனிதன் தாழ்ந்துபோனால் அவனுடைய செயலும் தாழ்ந்து, உயர்ந்த காரியங்களைச் செய்ய இயலாது போகும். தானாக எம்மொழியும் வளராது. உயர்ந்த தமிழ்மொழியைச் சமைத்தவர்கள் உயர்ந்தவர்களே. அந்த உயர்ந்த மொழிகூட, தானாக வளரும் தன்மையுடையதன்று. அதனை வளர்ப்பதற்கு உயர்ந்த உள்ளம் படைத்தவர்களாக மாற வேண்டுமென்கிறார். மேலும்,

*கருத்துலகப் பூம்பொழிலின்*
*விரிவில் கோடி*
*கலைமலர்தல் காணீரோ!*
*அவை யனைத்தும்*
*திருத்தமிழில் கண்டீரோ!*
*அணுயுகத்தைச்*
*செந்தமிழில் பார்த்தீரோ?* (பக். 346 - 347)

என்று அணு, விண்வெளிப் பயணம்பற்றித் தமிழ்மொழியில் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவற்றைச் செந்தமிழில் மொழிபெயர்த்தோ, மூலநூலாகவோ கொண்டு வருவதற்குரிய வழிவகைகளைக் காணுங்கள் என்று கூறுகிறார்.

*மொழி வளர்க்க*
*மருத்துவரின் பொறிவலரின்*
*அறிவியல் நூல்*
*வல்லுநரின் துணை தேட*
*வழி செய்தீரோ?* (ப. 347)

மருத்துவர்கள், பொறியாளர்கள், அறிவியல் அறிஞர்கள் ஆகியோரின் துணை கொண்டோ அல்லது அவர்கள் மூலமாகவோ அவரவர் துறைகளில் தமிழ் நூல்கள் வருவதற்குரிய செயல்களைச் செய்ய வேண்டும்.

*ஊசிசெயும் சிறுதொழிலின் நுட்பம் கூற*
*ஒரு கோடி நூல்வேண்டும் தமிழில்* (ப. 347)

பல்துறைகளின் நுட்பங்களைத் தமிழில் கூறவேண்டுவதுபோல, ஊசி போன்ற சிறிய தொழில்நுட்பங்களையும் தமிழில் கொண்டு வரவேண்டும்

என்கிறார். மனித இனம் விண்ணை எட்டிப்பிடிக்கிறது. நாமும் மனிதஇனம்தான். ஆனால் நாம் எவ்வளவு தொலைவில் ஒதுங்கி இருக்கிறோம் என்பதைச் சுட்டிக்காட்டி அந்த அளவிற்கு நம் தமிழும் தனித்து நின்று வளரவேண்டும், உயரவேண்டும் என்ற நோக்கத்துடன்,

*காசினியில் இன்றுவரை அறிவின் மன்னர்*
*கண்டுள்ள கலைகளெலாம் தமிழில் எண்ணிப்*
*பேசிமகிழ் நிலைவேண்டும்; விண்ணை எட்டிப்*
*பிடிக்கிறது மனித இனம்; முன்னோர் செல்வ*
*ஆசியிலே வாழ்கின்றோம்; கால மெல்லாம்*
*அதன்பெருமை' பேசுகின்றோம். அவலமன்றோ! (ப. 347)*

என்று பழையவற்றைப் பொதி சுமப்பதுபோல் சுமந்து கொண்டிருப்பது மட்டுந்தான் நம்முடைய பெருமையா? என்றெண்ணிப் பார்க்கும் பொழுது ஒருபக்கம் வேதனை பிறந்தாலும் மறுபக்கம் வேகம் பிறக்கிறது. அவ்வேகத்தின் பலன் தமிழ் வளர்ச்சியின் பயன்பாடாக அமையும்.

*சங்கம் கூட்டி உண்மை ஆய்ந்த*
*தமிழர் வாழ்வின் தகைமை இடையில்*
*மங்கநேர்ந்த கொடுமை எண்ணி*
*வாடும் நெஞ்சே, வளமும் கலையும்*
*பொங்க மீண்டும் தமிழர் பண்டைப்*
*புகழின் மிஞ்சி முதன்மை யாங்கும்*
*தங்க வாழ்வர் என்ற செய்தி*
*தரணி பேசும் நாளும் வருமோ? (ப. 343)*

*…………… எங்கள்*
*அன்னை அமுதத் தமிழின் செல்வம்*
*அவனி விழையும் நாளும் வருமோ? (ப. 343)*

என்று பாடி ஆர்வங்கொள்ளும் கவிஞர்

*தமிழரின், தமிழின் - பண்டைய புகழ் உலகிடைப் பரவவேண்டும் என்று கூறுவதுடன் நம்மை பரப்பச் செய்யும் முயற்சிக்குத் தூண்டுகிறார்*[32]

என்று அ.ச. ஞானசம்பந்தன் குறிப்பிடுகிறார்.

*முன் செல்ல வழிகாணும் முனைப்பில்லாது*
*மூவேந்தர் பழம்பெருமை முழங்குவோரை*
*என் சொல்ல; அவர்திருந்த என்னசெய்ய? (ப. 70)*

என்று துயரப்படும் கவிஞர் குலோத்துங்கன்

*……………………… வாழ்வில்*
*தலைமுறைகள் மூத்ததொரு தகுதி அன்று; ……*
*முன்பிறந்தோம்; மன்பதையில் முதல் யாம் என்னும்*
*மூடர்களே! முதுமை என்ன முயன்றா பெற்றீர்? (ப. 211)*

எனச் சினத்துடன் கேட்கின்றார். நம் தமிழின் பெருமை எதுவென்ற கவிதையில், ஆழ்ந்த சிந்தனையில் தோன்றிய வினாக்களுடன் வெளிப்படுத்துகிறார்.

*செந்தமிழின் பெருமைஎனச் செவிகள் கைப்பத்*
*தினந்தோறும் பேசுகிறீர்; ஒரு சொல் கேளீர்!*
*நந்தமிழின் பெருமை எது? ஆங்கி லம்போல்*
*ஞாலத்தின் பொதுமொழியா? உலக மன்றில்*
*அமர்வுடைய ஆட்சிமொழிக் குழுவில் ஒன்றா? (ப. 363)*

*மூலையிலோர் கொடிஏற்றி, அண்ணன் தம்பி*
*முறைமையினர் தமைக்கூட்டி முன்னர் வைத்துக்*
*காலையிலும் மாலையிலும் தமிழர் வாழ்ந்த*
*கதைபேசி இன்றுவரை கண்ட தென்ன?*
*ஆங்கிலமும் நன்கறியீர்; செம்மை சான்ற*
*அயல்மொழிகள் கற்பதிலும் ஆர்வம் காணீர்;*
*தீங்கிழைக்கும் வடமொழியென் றெதிர்பீர்; பேசும்*
*செழுந்தமிழின் முழுமையையும் தெளிந்தீ ரில்லை (ப. 364)*

தமிழை, ஆங்கிலம் போல் உலகப் பொதுமொழியாகவும், உலகப் பொதுமன்ற (United Nations) ஆட்சிமொழிக் குழுவில் உள்ள மொழிகளுள் ஒன்றாகவும் ஆக்க வேண்டுமென்கிறார். மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது வளர்ச்சி. தமிழ் வளர்ச்சி பெற வேண்டுமெனில் காலத்திற்கு ஏற்ற மாறுதல்களை ஏற்கவேண்டும். இதை ஏற்காதவர்களைப் பார்த்து,

*மாற்றம் என்பது வாழ்வின் மூச்செனும்*
*தேற்றமும் ஏற்கார்; திருத்துவ தாயின்*
*சங்கம் வளர்த்த தமிழையே மீண்டும்*
*இங்கு காண்பதை ஏற்குவம் என்பார்.*
*காலம் என்பது கடந்த பாதையில்*
*ஞாலம் திரும்பி நடப்பது காண்கிலம்*

*………………………………………………………*

*வினைசெய முனைந்து மேற்செலும் முடிவுடன்*
*அனைவரும் திரளஓர் அறிக்கை காணினும்,*
*எழுதிய அனைத்தும் ஏற்பினும், கருத்து*
*முழுமையும் ஒருவழி முறையுடைத் தாயினும்,*

*காற்புள்ளியில் யாம்கருத்து மாறினம்;*
*ஏற்பதற் கிலையென எழுந்து செல்லுவர்.*
*ஒற்றுமை யறியா(து) உளுத்த இனமடா!*
*வெற்றுரை, வெற்றுரை வெற்றுரை வீரர்.*

*விதியே விதியே தமிழ்ச் சாதியை*
*என்செயக் கருதி இருக்கின் றாயடா?* (ப. 390)

என்று வருந்துகிறார். இது தமிழ் இனத்தைத் தட்டி எழுப்பும் பாரதியின் பாடல் கவிதையாக நம்முன் தோன்றுகின்றது.

**6. இலக்கணத்தை எளிமைப்படுத்தலும் எழுத்துச் சீர்திருத்தமும்**

தொல்காப்பியம், கல்வியறிஞர்கட்கு மட்டும் புரியும்படி கடினமாக இருந்ததால் தமிழ்ப்பயிற்சி குறையலாயிற்று. எனவே இலக்கணத்தை எளிமைப்படுத்த கி.பி. 13ம் நூற்றாண்டில் வாழ்ந்த சீயகங்கன்,

*தொல்காப்பியம் முதலிய பழைய இலக்கண நூல்கள் பேரறிவினர்க்கே புலப்படும் தன்மையனவாயிருத்தலின், இயற்றமிழின் பாகுபாடான எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியிலக்கணங்களின் பயிற்சி குன்றி எளியோரும் ஓதியுணரும்படி, நீவீர் ஓர் இலக்கண நூலை இயற்றித்தரல் வேண்டும்*[33]

எனப் பவணந்தி முனிவரை வேண்டிக்கொண்டான். அரசனுடைய வேண்டுகோளை ஏற்ற பவணந்தியார்,

*முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுக்குள்ளே பிற்காலத்து வழங்காதொழிந்தனவற்றை நீக்கி, முற்காலத்து வழங்காது பிற்காலத்து வழங்கிவரும் இலக்கணங்களைத் தழுவி, உலக வழக்கு, செய்யுள் வழக்குகளோடு சிறிதும் மாறுபடாமல்.... சாதாரண மாணவர்கட்கும் உபயோகப்படத்தக்கதாய்''*[34]

நன்னூலை இயற்றினார். இதன்பின் 19ஆம் நூற்றாண்டில்தான் தனிப்பட்டவர்கள் இலக்கணம் எழுதினார்கள். அவற்றுள் யாப்பு, அணி இலக்கணங்கள் அடங்கும். 19, 20ஆம் நூற்றாண்டுகளில் ஆறுமுக நாவலரின் 'இலக்கணச்சுருக்கம்' குறிப்பிடத்தக்க இலக்கண நூலாகும்.

இன்றைய தமிழுக்கு இலக்கணம் பற்றி எண்ணும்பொழுது,

*தமிழ்மொழிக்கு, தற்கால அடிப்படையில் புதிய, முழுமையான இலக்கணம் அமைக்கவேண்டியது சிறப்பான, கட்டாயமான தேவை என்பதை நாம் உணரும்*

*அதே வேளை, அத்தகைய இலக்கணத்தை அமைப்பதிலேயே உள்ள பல சிக்கல்களை நெஞ்சிருத்த வேண்டியுள்ளது*[35]

என்று சண்முகதாஸ் குறிப்பிடுகிறார். தமிழுக்கு இன்றுள்ள இலக்கண நூலின் நிலையைப் பற்றி டாக்டர் அண்ணாமலை,

*பழைய இலக்கண நூல்கள் புதிய விதிமுறைகளுக்குப் பொருந்தி வரவில்லை; புதிய இலக்கண நூல்களும் தோன்றவில்லை. பழைய விதிகள் புறக்கணிக்கப் படாமலும், புதிய விதிகள் முற்றிலும் ஏற்றுக்கொள்ளப் படாமலும் ஒரு சமூகம் இயங்குகின்ற நிலையைச் சமூகவியலார்கள் மயக்க நிலை (Anomie) என்பார்கள். புதிய தமிழைப் பொறுத்தவரை இத்தகைய மயக்கநிலை இருக்கிறது*[36]

என்று கூறுகிறார்.

'இன்றைய தமிழ்' என்பதை வரையறுப்பதே ஒரு பெரும் பணியாகும். இன்றைய தமிழ் என்பதும், துருவப் பனிக்கட்டிபோல உறைந்து போன ஒன்றன்று; வளருவது; காலத்துக்குக் காலம் மாறுவது; அதையொட்டி இனி எழுதப்படும் இலக்கணமும் தொடர்ந்து புதுப்பிக்கப்பட வேண்டும்.

*இலக்கணம் நேற்றைய தமிழிலிருந்து வளமுடன் இன்றைய தமிழையும் இன்றைய தமிழிலிருந்து உருவாகும் நாளைய தமிழையும் இணைப்பது. தமிழில் உருவாகும் புதுமைகள் தனித்தீவாக நின்றுவிடாமல், தமிழ் மரபென்னும் கடலோடு ஐக்கியமாகச் செய்வது. ஒருமொழியானது, காப்பவர்களால் வளர்வதில்லை. அது பயன்படுத்துபவர்களால் வளர்கிறது*[37]

என்று குலோத்துங்கன் கூறுகிறார். மொழிப் பயன்பாட்டு வளர்ச்சி மிக வேண்டுமாயின் மொழி இலக்கணம் எளிமையாக இருத்தல் வேண்டும். இதனை,

*இறுக்கத்தால் பயனில்லை;*
*இளக்கம் தேவை*
*இலக்கணநூல் பயிற்சியெலாம்*
*எளிமை செய்வீர்* (ப. 413)

என்று கூறுகிறார்.

ஒரு மொழிக்கு ஒலிதான் அடிப்படை. அவ்வொலியைக் குறிப்பிட நாம் அமைத்துக் கொண்ட வரிவடிவம் காலத்துக்குக் காலம் மாறக்கூடும். ஒலியும் அதற்குப் பயன்படுத்தப்படும் வரிவடிவமும் பிரிக்க முடிபவை.

> *ஒரு மொழியானது அறிவியல் வளர்ச்சிக்கு இசைவான வகையில் முன்னேற வேண்டுமானால் அதன் கருத்துவளம் சிறப்படைந்தால் போதாது. அந்த மொழியின் வரிவடிவமும் அறிவியல் மயமாக மாற்றம் பெறவேண்டும்*[38]

என்று தமிழ்மொழியைத் திருத்தி அமைக்கப் பெரியார் கருதியதால், அதற்கு அடிப்படையாக எழுத்துச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்றார். பின்னாளில், பெரியார் அறிமுகப்படுத்திய தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தைத் தெ.பொ.மீ. அவர்கள் ஒப்புக்கொண்டு

> *இன்றைக்கு விடுதலை என்று எழுதுவதில் உள்ள 'லை' என்ற எழுத்துமுறைதான் தொல்காப்பியர் கூறிய முறையாகும். 'லை' என்று கொம்புபோட்டு எழுதும் முறை பிறகுதான் வந்தது*[39]

என்று குறிப்பிடுகின்றார். ஒரு மொழியைக் கற்பதற்கு அதன் எழுத்துக்களே அடிப்படை. எழுத்துக்களைக் கற்பதே சுமையாக இருந்தால், பொருளாதாரத் தேவையாக இல்லாத நாடுகளில் உள்ளோர், தமிழைக் கற்கமாட்டார்கள். தமிழைக் கற்பதற்கு இன்று 107 குறியீடுகளைக் கற்க வேண்டியுள்ளது.

படம் - 1

| | ஒலிகள் | எழுத்துக்கள் | குறியீடுகள் |
|---|---|---|---|
| i) உயிர் | 12 | 12 | 11 (ஔ - கூட்டுக்குறியீடுகள்) |
| ii) ஆயுதம் | 1 | 1 | 1 |
| iii) தனிமெய் | 18 | 18 | 18 + புள்ளி 1 |
| iv) a. உயிர்மெய் (அகரவரிசை) | சுட்டொலிகள் | 18 | - |
| iv) b. உயிர்மெய் (அ,எ,ஏ,ஐ, ஒ,ஓ,ஔ வரிசைகள்) | சுட்டொலிகள் | 126 | 4 - ா,ெ,ே,ை (35 |
| v. உயிர்மெய் (இ,ஈ,உ,ஊ வரிசைகள்) | சுட்டொலிகள் | 72 | 72 |
| | 31 | 247 | 107 |

இதில் உயிர்மெய் இகரம், ஈகாரம், உகரம், ஊகாரம் ஆகிய நான்கிற்கு மட்டும் 72 குறியீடுகள் தேவைப்படுகின்றன. அவையாவன

படம் 2

| | | | |
|---|---|---|---|
| கி | கீ | கு | கூ |
| ஙி | ஙீ | ஙு | ஙூ |
| சி | சீ | சு | சூ |
| ஞி | ஞீ | ஞு | ஞூ |
| டி | டீ | டு | டூ |
| ணி | ணீ | ணு | ணூ |
| தி | தீ | து | தூ |
| நி | நீ | நு | நூ |
| பி | பீ | பு | பூ |
| மி | மீ | மு | மூ |
| யி | யீ | யு | யூ |
| ரி | ரீ | ரு | ரூ |
| லி | லீ | லு | லூ |
| வி | வீ | வு | வூ |
| ழி | ழீ | ழு | ழூ |
| ளி | ளீ | ளு | ளூ |
| றி | றீ | று | றூ |
| னி | னீ | னு | னூ |

இவற்றிற்கு மற்ற

*உயிர்மெய் வரிசைகள் போலவே தனியாக உயிர்க் குறியீடுகளைப் பயன்படுத்தினால் நான்கு குறியீடுகள் போதும்*[40]

என்கிறார் குலோத்துங்கன்.

படம் 3

| | |
|---|---|
| இகரம்<br>ஈகாரம்<br>உகரம்<br>ஊகாரம் | |

இந்த எளிய மாற்றத்தை ஏற்றால் தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 247 எழுத்துக்களைக் கற்க நமக்குத் தேவைப்படுவது 39 குறியீடுகளே. அவையாவன

படம் 4

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | இ | உ | எ | ஒ | ஃ |
| ஆ | ஈ | ஊ | ஏ | ஓ | ஐ |
| க | ச | ட | து | த | ற |
| ங | ஞ | ண | நு | ந | ன |
| ய | ர | ல | கூ | வ | ள |

| | |
|---|---|
| | ா |
| ி | |
| | |
| ெ | ே |
| ை | — |

(படங்கள் 1,2,3,4 - ஆதாரம் : தமிழ் வரிவடிவச் சீரமைப்பு, தினமணி, 22.08.1998)

தமிழ் எழுத்துக்கள் அச்சேறியபின் நடைபெற்றுள்ள முக்கியமான மாற்றங்கள் இரண்டு.

1. தொல்காப்பியர்,

*மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்*[41]

*எகர ஒகரத் தியற்கையும் அற்றே*[42]

என்று கூறிய கருத்தை 18ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் மாற்றம் செய்தார்.

| தொல்காப்பியர் | வீரமாமுனிவர் |
|---|---|
| குறில் - எ், ஒ் | குறில் - எ, ஒ |
| நெடில் - எ, ஒ | நெடில் - ஏ, ஓ |

20ஆம் நூற்றாண்டில், பெரியார் கொண்டுவந்த மாற்றத்தின்படி அதாவது 1978இல் பெரியார் நூற்றாண்டின்பொழுது பெரியார் பயன்படுத்தி வந்த திருந்திய வரிவடிவத்தைத் தமிழக அரசு அதிகாரப் பூர்வமாக ஏற்றது.

இதனால்,

ல - லை

ள - ளை

ன - னை

ண - ணை

ன - னா

போன்ற எழுத்துக்கள் சீர்மை பெற்றன.

எழுத்துச் சீரமைப்பு என்பதில் ஒரு எழுத்தைக்கூடக் குறைப்பதன்று. தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 247 ஒலி எழுத்துக்களை எழுதுவதற்குப் பயன்படுத்தப்படும் குறியீடுகளை மட்டும் இதன் அடிப்படையில் தமிழ் வரிவடித்தைக் கற்கும் சுமை குறைந்துவிடும். தமிழைக் கற்போர் 107 குறியீடுகளை (படம் - 1) மனப்பாடம் செய்வதற்குப் பதிலாக 39 குறியீடுகளை (படம் - 4) மட்டும் கற்றால் போதும்.

தமிழகத்தைத் தாண்டி உலகின் பல்வேறிடங்களில் வாழும் தமிழர்களின் வீடுகளில் தமிழ் பேசினும், தமிழைப் படிப்பதும் எழுதுவதுமான திறமை பரவாத நிலை உருவாகி வருகிறது. 39 குறியீடுகளைக் கற்றால் போதுமானது என்ற நிலையில் தமிழானது எழுதவும் படிக்கவும் எளிதாகிவிடும். அனைவருக்கும் கல்வி என்ற நிலையில், ஒரு மொழியை எழுதப்படிக்கக் கற்பதற்கான - பயன்படுத்து வதற்கான - கால அளவைக் குறைப்பதால், ஓர் இனத்திற்கு ஏற்படும் நன்மைகள் அளவிடற்கரியன. அதனால்தான்,

*எழுத்துருவைச் சீரமைப்பீர்*
*எழுதல் கற்றல் எளிதாக்க வழிவகுப்பீர்;*
*கூடிநின்று வழுத்துவதால் தமிழ் வளர்வதில்லை*
*வாழ்வில் மாற்றம்தான் மேம்பாட்டின்*
*வாயில் ஆகும்* (ப. 412)

*மாறாத புனிதமென*
*வைய வாழ்வில்*
*மானிடர்கள் போற்றுவதற்கு*
*எதுவுமில்லை* (ப. 412)

என்று எழுத்துச் சீரமைப்பைப் பற்றி ஓங்கிக் குரல் கொடுக்கின்றார் கவிஞர் குலோத்துங்கன். உயிர்மெய் இகர, ஈகார, உகர, ஊகார எழுத்துக்களுக்கு இங்குக் கூறப்பட்டுள்ள மாற்றம் தொல்காப்பிய விதிகளுக்கோ நன்னூல் விதிகளுக்கோ புறம்பானதன்று. அறிவியல்

தொழில்நுட்பத் துறைகளில் உருவான கருவிகளையும் செய்முறை களையும் சமுதாயப் பொருளாதார வாழ்வில் பயன்படுத்திக்கொள்ள மக்களுக்கு இருக்கும் திறமை வளரவேண்டும். இது நடைபெற, அறிவியலும் தொழில்நுட்பமும் மக்களைச் சென்று அடைய, மக்கள் பேசும் மொழியில் அவை இடம்பெற வேண்டும். எனவே, அறிவியல் தமிழின் தேவை என்பது மொழிவளர்ச்சித் தேவை; தமிழின் வளர்ச்சிக்கான தேவை. மொழி வளர்ச்சியை இக்கோணத்தில் பார்த்தால், இனவளர்ச்சி மொழி வளர்ச்சிக்கு அடிப்படையாக அமையும்.

### கருத்துக்களின் முடிவு

- மொழி என்பது உணர்வுகளின் துடிப்பாகவும் கருத்துப் பரிமாற்றத்தின் கருவியாகவும் அமைகிறது. பாடுபொருளே, காலந்தோறும் தமிழ் என்ற சொல்லுக்குப் பொருளாய் அமைய, கால்டுவெல் காலத்தில்தான் தமிழ் என்பது மொழி எனப் பொருள்பட்டது. தனித்தமிழ் இயக்கத் தோற்றத்தாலும் சமயம் சமுதாயம் தேசியம் ஆகியவற்றாலும் தமிழ் உணர்ச்சி வளர்க்கப்பட்டது.
- மக்களின் அரசியல் சமுதாயத் தேவைகளைத் தமிழ்மொழி பூர்த்தி செய்தல் வேண்டும். இல்லையேல் எம்மொழி பூர்த்தி செய்கிறதோ அம்மொழியை நாடத்தொடங்கும் நிலை உருவாகும்.
- உலகில் இலக்கண இலக்கியக் காப்பியங்களால் சிறப்புப்பெற்ற பழம்பெருமையுடைய மொழிகள் ஆறு. அவற்றுள் இந்தியா இரண்டு மொழிகளின் தாயகம். அவ்விரண்டும் செம்மொழிச் சிறப்பினையும் பெற்றவை. இப்பெருமை உலகின் வேறு எந்த நாட்டுக்கும் இல்லை.
- அறிவுத்துறைகளில் தேவைப்படும் வழி ஏற்றுவாழும் நாம், இன்னும் கொடுத்து வாழும் நிலைக்கு வளரவில்லை. அந்நிலைக்கு வளர்வதே நம் குறிக்கோளாக அமைதல் வேண்டும். அதுவே தமிழ்மொழியின் உயிர்த்துடிப்புமாகும்.
- சமயச் சடங்குகள் நம்பிக்கைகள் சமயங்கள் ஆத்திகம் நாத்திகம் ஆகிய வழக்கங்களும் சமயச்சார்பின்மையும் இடம்பெற்றிராத காலத்தில், கால வர்த்தமானங்களைக் கடந்த வள்ளுவரின் வாழ்வியல் தத்துவம், இந்தியத் தத்துவத்திற்குத் தமிழகம் தந்த இணையற்ற பங்களிப்பாகும்.
- உலகு முழுவதும் வாழும் தமிழ் குவலயக்குடும்பம் தங்கள் மொழியைக்கற்க வாய்ப்பளிக்கும் முறையில் அமைந்ததே தமிழ்

இணையப் பல்கலைக்கழகம். இது உலகு தமிழ் தமிழர்களை ஒன்று சேர்க்கப் பயன்படுகிறது.

- இலங்கையின் இனப்பிரச்சினை தீருமாயின் தமிழ் இலங்கையின் ஆட்சிமொழிகளில் ஒன்று என்ற தகுதியில் ஐக்கிய நாட்டுச் சபையில் அங்கீகாரம் பெற்ற மொழியாக இடம் பெறும்.
- எழுத்துச் சீரமைப்பு என்பது தமிழிலுள்ள ஒரு எழுத்தைக்கூட குறைப்பதன்று. தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 247 எழுத்துக்களை எழுதப் பயன்படும் குறியீடுகளை 107 லிருந்து 39 ஆகக் குறைக்கும் முயற்சியாகும். இது இன்றைய பணியை நேற்றைய கருவிகொண்டு செய்யாது, இன்றைய பணியை இன்றைய கருவிகொண்டு செய்வதாகும்.

அடிக்குறிப்புகள்

1. வரதராசன், மு., மொழி வரலாறு, ப. 1.
2. மேலது.
3. தேவநேயன், ஞா., ஒலியியல் மொழிநூல், ப. 11.
4. ஆரோக்கியநாதன், எஸ்., மொழியியல் (கிளை மொழிகள்), ப. 9.
5. கோதண்டராமன், பொன்., தொல்காப்பிய அறிமுகம், ப. 1.
6. முகம்மது பாரூக், தமிழமுது, ப. 43.
7. பெரியார், எழுத்துச்சீர்திருத்தம், ப. 14.
8. நன்னன், மா., பெரியாரியல் - மொழி (2), ப. 52.
9. கமலக்கண்ணன், (இலக்கியம்)மொழி கலை குறித்த பெரியாரின் சிந்தனைகள், ப. 61.
10. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம்.
11. திருமூலர், திருமந்திரம்.
12. பொற்கோ, கல்கி அறக்கட்டளை சொற்பொழிவு, செ.ப.க, 28.11.84.
13. ஆனைமுத்து, வே., பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் தொகுதி - 1, ப. 62.
14. சுத்தானந்தபாரதி, யோகி, தமிழ் உணர்ச்சி, ப. 32.
15. மேலது, ப. 34.
16. மேலது, ப. 38.
17. சுந்தரம்பிள்ளை, மனோன்மணியம் - கடவுள் வாழ்த்து.
18. சிவத்தம்பி, குலோத்துங்கன் கவிதைகள், பக். 25 - 26.
19. சுப்பிரமணிய அய்யர், ஏ.வி, தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, ப. 37.

20. Madras Official Language Act, 1956.
21. சுப்பிரமணியம், சி, (கல்வி அமைச்சர்) - சட்டசபைப் பேச்சு, 1960.
22. அண்ணாதுரை, சி.என்., சட்டசபைப் பேச்சு, 1968.
23. சர்க்காரியா, சர்க்காரியா குழு அறிக்கை, பத்தி 20.01.20.
24. பார்த்தசாரதி, நா., மொழியின் வழியே, ப. 27.
25. தமிழ்நாடு அரசு ஆணை, பயிற்றுமொழி, 19.11.1999.
26. பழஞ்சுவடிகள் துறை, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக அறிக்கை.
27. The Official Language of the Union, Government of India. order.
28. குழந்தைசாமி, வா.செ., செவ்வியல் மொழி முதல் சேதுசமுத்திரம் வரை, ப. 39.
29. பனம்பாரனார், சிறப்புப்பாயிரம், தொல்காப்பியம்.
30. பார்த்தசாரதி, ந., மொழியின் வழியே, ப. 28.
31. கோதண்டராமன், பொன்., தமிழ்வளர்ச்சி - செ.ப.க. கல்கி அறக்கட்டளைச் சொற்பொழிவு, 30.11.84.
32. ஞானசம்மந்தன், அ.ச., குலோத்துங்கன் கவிதைகள், பக். 678 - 79.
33. நன்னூல், காண்டிகையுரை.
34. மேலது.
35. சண்முகதாஸ், புதிய தமிழ் இலக்கணம் அதன் தேவையும் சிக்கல்களும். (கட்டுரை) - மொழி நவீனத்துவம் பகுதி _ 1.
36. அண்ணாமலை, இ., மொழிப்புதுமை யாக்கத்தில் அகராதியின் பங்கு (கட்டுரை) - மொழி நவீனத்துவம் பகுதி - 1.
37. குழந்தைசாமி, வா.செ., இன்றைய தமிழுக்கு இலக்கணம். (கட்டுரை). தினமணி, 26.05.1996.
38. பெரியார், எழுத்துச்சீர்திருத்தம், ப. 26.
39. மீனாட்சி சுந்தரம், தெ.பொ., எழுத்துச்சீர்மை, ப. 35.
40. குழந்தைசாமி, வா.செ., இது கல்வியுகம், ப. 161.
41. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூற்பா. 15.
42. மேலது, நூற்பா. 16.

# 5. சமுதாயச் சிந்தனைகள்

மனிதர்களை விடுத்து உயிரினங்களைப் பற்றியோ இயற்கையைப் பற்றியோ அல்லாமல், மனிதர்களின் சமுதாய உறவுகளை அடிப்படையாகக் கொண்ட பலவகைப்பட்ட மனிதர்களும் அவர்களின் மனநிலைகளும், தங்களுக்குள் கொண்டிருக்கும் உறவுகளும் இடம் பெறுகின்றன. சமுதாயம் என்னும் சொல் ஒரு கோட்பாட்டு அளவாகும். அச்சொல், ஒரு கூட்டத்தின் உறுப்பினர்களுக்கிடையே உள்ள உறவின் தொகுதியைக் குறிக்கும். எனவே மனித இனத்தின் உறவுநிலை எங்கெங்கு உள்ளதோ அங்கெல்லாம் சமுதாயம் இருக்கும். அவ்வுறவு நிலை நன்றாயினும் தீயதாயினும் அங்குச் சமுதாயம் இருக்கும். ஆனால், சமுதாய உறவுநிலைகள் கண்களுக்குப் புலனாகாது. எனவே சமுதாயம் என்பது ஓர் அருவமான - பண்பியலின் பிழிவு எனலாம். மனித இனத்தில் காணப்படும் உறவுநிலைகளின் அமைப்பு முறையே சமுதாயம் எனப்படும். இச்சமுதாய உறவுகளின் பண்பு, பொதுக்குறிக்கோள், பொது நன்மை ஆகியவற்றை ஒருவரையொருவர் அறிந்து சமுதாய உயிரினங்கள் அதன்படி நடந்து கொள்வதால்தான் சமுதாயம் என்னும் அமைப்பே நிலைத்துள்ளது. சமுதாய உறவுகளே சமுதாயத்தின் அடிப்படை; சேர்ந்து வாழ்வது மட்டுமன்றிப் பல்வகை வேற்றுமைகள் இருப்பினும் மனிதர்களை ஒன்றாக வாழச் செய்வதுதான் சமுதாய உறவின் நோக்கமாகும். இம்முறையில் அமைந்துள்ள சமுதாயத்தைக் குலோத்துங்கன் எவ்வாறு படம்பிடித்துக் காட்டுகிறார் என்பது,

1. சமுதாயத் தத்துவம்,
2. சமுதாயத் தத்துவத்தின் மதிப்புகளும் சமுதாயவியலும்,
3. மனித இயல்புகள்,
4. சமுதாயக் கட்டமைப்புகள்,
5. தனிமனிதனின் சமுதாயப் பங்களிப்புகள்,
6. சமுதாய அமைப்பில் குடும்பம்,
7. குடும்பச் சிறப்பியல்புகள்,
8. அரசு: இயக்கமும் முன்னேற்றமும்,
9. நல்லாட்சிக்குக் கட்டாய வாக்கு,
10. சமுதாயம் அளித்த பண்பாட்டுக் கூறுகள்,
11. தமிழின் செம்மை இந்தியத்து மகுடம்
12. பெரியாரின் பண்பாட்டுப்புரட்சி
13. தமிழரை அடையாளம் காட்டும் சிந்தனை மரபு

என்ற பிரிவுகளில் விளக்கப்படுகிறது.

## 1. சமுதாயத் தத்துவம்

சமுதாயம் என்பது மனிதர்களால் நிர்ணயிக்காமல் அவர்கள் தங்களுக்குள் கொண்டிருக்கும் உறவு, செயல் ஆகியவற்றின் மூலம் கணிக்கப்படுவதாகும்.

> *சமுதாய உறவு மக்களிடையே காணப்படும் பின்னிய உறவு மற்றும் ஒன்றையொன்று சார்ந்த வண்ணம் அமையும் செயல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட மனித சமுதாயத்தை தத்துவநோக்கில் ஆய்வதே தத்துவ சமுதாயம் ஆகும். சமுதாய உறவு பற்றிய உண்மைகளையும் அதன் மதிப்பியல்புகளைப் பற்றியும் தீர்மானித்து வரையறை செய்வது அதன் நோக்கமாகும்.*[1]

எனவே, அது சமுதாயத்தை முழுமையாகப் பார்த்துச் சமுதாயத்தில் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலங்களைப் பற்றிச் சிந்திக்கிறது. மனிதனுடைய சாதனைகளை மதிப்பிடுவதுடன், மனிதர்களின் குழுக்கள், கூட்டங்கள், கூட்டுறவுகள் ஆகியவற்றிற்கிடையிலான உறவுகளையும் விளக்குகிறது.

மகிழ்ச்சியுடனிருக்கும் மனிதசமுதாயத்தைச் சமுதாயத்தத்துவம் வலியுறுத்துகிறது. சட்டங்கள், பழக்கவழக்கங்கள் அமைப்புகள் ஆகியவை சமுதாய வாழ்வுக்கு மட்டுமல்லாது மகிழ்வான வாழ்விற்காகவும் இருக்க வேண்டும்.

> *சமுதாயத்தத்துவத்தின் முக்கியப் பணி, உண்மைகளின் பின்னணியில் சமுதாய மதிப்புகளைத் தேர்வு செய்வதே. இத்தேர்வின்மூலம், இணக்கமான சமுதாய நன்மையை அடையலாம். மனித இனத்தின் சமுதாய ஒற்றுமை பற்றியே இது கவனம் செலுத்துகிறது. மேலும், மனித வாழ்வின் சமுதாய இயல்புகளை, சமுதாய ஒற்றுமை என்னும் நோக்கிலேயே விளக்க முற்படும். எனவே, மனித வாழ்வின் எல்லா அம்சங்களும் சமுதாயத் தத்தவத்தில் குறியிலக்கமாக அமைந்துள்ளன*[2]

என்கிறார் க.பாஸ்கரன்.

சமுதாயத்தத்துவம், சமுதாய இணக்க உறவிற்கும் ஒன்றை யொன்று சார்ந்த செயல்களுக்குமான திட்டங்களையும் வகுத்து, உயரிய நன்மைகளை அடையும் வழிமுறைகளைப் பற்றியும் உரைக்கிறது. இம்முறைமைக்குப் பகுத்தறிவாற்றல், உள்ளுணர்வு, உற்றுநோக்கல் ஆகிய கருவிகள் துணைபுரிகின்றன. ஆகவே மனிதர்களின் நடத்தை,

மனிதவாழ்வின் உயரிய மதிப்பு ஆகியவற்றின் அடிப்படைகளை ஆராய்ந்து சமுதாய அறிவியலுக்கு ஓர் அடித்தளத்தைச் சமுதாயத்தத்துவம் அமைத்துக் கொடுக்கிறது.

## 2. சமுதாயத் தத்துவத்தின் மதிப்புகளும் சமுதாயவியலும்

சமுதாயத் தத்துவத்தின் மதிப்பியல்யென்பது தனிமனிதன் சமுதாயம் என்ற இரு கூறுகளை இணைத்து ஒரு முழுமையான சமுதாய உருவாக்கத்திற்கான நடைமுறை இலக்கினை விளக்குவதில் அமைந்துள்ளது.

1. எந்தத் தனிமனிதனும் தன்னிச்சையாகச் செயல்பட்டு, சமுதாயப் பிரச்சினைகளையும் சமுதாய உறவுகளையும் விடுத்து வாழ முடியாது.
2. நாம் பிறரிடம் காட்டும் நடத்தைகளை நெறிப்படுத்த உதவும் சமுதாயத் தத்துவ இயல், உறவுகளை வளர்த்து உயர்ந்த இலட்சிய சமுதாயத்தை இனங்காட்டி அதன் மூலம் சமுதாய நடத்தைகளைச் சீர்செய்யும்.
3. ஒரு நாட்டின் பண்பாட்டு வளர்ச்சியின் ஒவ்வோர் அங்கத்திலும் இதன் பிரதிபலிப்பைக் காணலாம்.
4. சமுதாய வாழ்வின்மீது தன்னுடைய தாக்கத்தை எளிதில் காட்டிக் குடும்பம், திருமணம், தொழில், பொருளாதாரம், அரசியல் மற்றும் அமைப்பு ஆகியவற்றில் சமுதாய உறவுகளை வெளிப்படுத்தி அறிவின் வளர்ச்சிக்கும் அறிவு பரவுதலுக்கும் காரணமாக உள்ளது. எனவே, வெறும் கொள்கையளவில் மட்டுமில்லாமல் செயல் முறைக்குரியதாகி, வாழ்க்கையின் உண்மையான உறுதிப் பொருள்களை உள்ளவாறு பிரதிபலித்து மனிதன் 'இருக்கிறான்' என்பதைப் பற்றிக் கூறாமல் அவன் எப்படி இருக்க வேண்டும் என்று வலியுறுத்துவது இதன் பணியாகும்.

சமுதாயவியல் மனித இனத்தின் தொடக்கம், பல்வேறு மனித இனம், சட்டம், பழக்கவழக்கங்கள், மொழி, நம்பிக்கை, சிந்தனை, செயலாற்றல் பொருளாதாரம், அரசியல், சமயம், அறிவியல் ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டுகிறது. சமுதாயத்தத்துவம் மனித இனத்தின் சமுதாய ஒற்றுமைக்குக் கவனத்தைச் செலுத்தி மனித இனத்தின் பல்வேறு இயல்புகளை ஆராய்கிறது. சமுதாயம் இருக்கிறது என்பதைவிட எப்படி இருக்க வேண்டும் என்பதையே விரும்புகிறது. அறிவியல் தருகின்ற மெய்நிகழ்வுச் செய்திகளை, சமுதாயம், மனித இனம் ஆகியவற்றின் பின்னணியில் விளக்கிக் கூறுவது சமூகவியல். மதிப்புகள் இல்லாத உண்மை நிகழ்வுகள் வெறும் குறிக்கோளாகவும்,

உண்மை நிகழ்வுகள் இல்லாத மதிப்புகள் பொருளற்றனவாகவும் அமைந்துவிடும். எனவே, சமுதாயவியலும் சமுதாயத் தத்துவமும் ஒன்றையொன்று சார்ந்தே உள்ளன.

### 3. மனித இயல்புகள்

உலகில் உயரிய நிலையை அடைவது மனித வாழ்க்கை ஒன்றுதான். வளரும் வாய்ப்புகளுடன் சிறப்புடையதாக இருக்கும் மனித வாழ்க்கையை, விலங்குகளுடன் ஒப்பிட்டுப் பேசக்கூடியவனாக இருப்பினும், சில நேரங்களில் இறைவனுடன் ஒப்பிட்டுப் பேசக் கூடியவனாகவும் இருப்பதால், மனிதன் விலங்கா? இறைவனா? என்ற ஐயப்பாடு எழுகிறது. சில நேரங்களில் இரண்டுமாகவும் இருப்பதைக் காணலாம். மனிதனுடைய எண்ணங்கள் அழிவற்றதை நோக்கிச் சென்றாலும் உடல்மட்டும் அழியும் தன்மையுடையதாகவே உள்ளது.

மனிதன் என்பதற்குச் சிறகுகளில்லாத இருகால் உயிரினம் என்றும், பகுத்தறியும் விலங்கென்றும் கூறலாம். மனிதனுக்கிருக்கும் சிந்தனையாற்றல் ஒன்றே அவனுடைய பிற குணங்களை விளக்கி விலங்குகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. இதன் பயனாகவே மொழியும் கருவிகளும் வளர்ந்தன; தொழிற்கருவிகள் விளைந்தன; பாதுகாப்பிற்கு ஆயுதங்கள் தோன்றின. மகிழ்ச்சி, தருமம், பக்தி, சட்டங்கள், அரசாங்கம் தோன்றி இறுதியில் உலகப்பொதுமை என்னும் கூட்டுறவும் உதயமாயிற்று. இதனை,

*ஆடியும் ஓடியும்*
*அலைந்தும் பல்வழி*
*தேடியும் கண்டனம்*
*சிந்தையே தெய்வம்* (ப. 99)

என்றும்,

*யாதும் ஊரே யாவரும் கேளிர், என்*
*றோதும் நிலைபெற உயர்ந்த வாழ்வினை*
*என்றோ கண்டவர் எம்மவர்* (ப. 236)

என்று கூறுகிறார் கவிஞர் குலோத்துங்கன். மனிதன் சமுதாய இயல்பு அற்றவனாக இருப்பின், அவனிடம் சமுதாயக் குறிக்கோளைப்பற்றி கருத்துரைப்பது அவசியமற்றதாகிவிடும். மனிதனுடைய வளர்ச்சி அவனுக்குள்ளிருக்கும் ஆற்றலைப் பொறுத்து அமைகிறது. ஆதலின் அவனிடம் சமுதாய உள்ளுணர்வுகள் உண்மையானால்தான் அவன் சமுதாயத்தில் மனிதனாக இருக்கமுடியும். இயற்கையிலேயே அவ்வாறு இல்லையென்றால், அதை அவனிடம் தோற்றுவிப்பது கடினம். தொடக்கம் முதலே மனிதன் சமுதாய உள்ளுணர்வு உடையவனாக இருந்ததை,

*எந்நிலை தொடங்கி னாயோ*
*இற்றையும் மனித னேஉன்*
*முன்னிலை யுணர்ந்தோ மில்லை*
*முடிவிலாப் பாதை யூர்ந்து*
*நின்னிலை யுயர்த்தும் வேள்வி*
*நீங்கிலாய் வாழி!* (ப. 77)

என்று குறிப்பிடுகிறார். சமுதாயத்தில் முதன்மையிடம் வகிப்பது மனித இனமாகும். பிற உயிர்ப்பொருளும் உயிரில்பொருளும் மனித இனத்தின் செயற்பாடுகளுக்குத் துணைபுரிவதற்காகவே அமைந்துள்ளன. இதன் அக, புறச் செயல்பாடுகளைப் பொறுத்தே ஒரு சமுதாயம் எவ்வகைப் பட்டது என்பதைக் கணித்தறிய வேண்டும்.

*உயர்திணையாகக் கருதப் படும் மக்களினம் கூறுபாடில்லாதது என்றும், ஏனைய அஃறிணைப் பொருள்கள் கூறுபாடுள்ளன*[3]

என்றும் இளம்பூரணர் கூறுகிறார். ஆனால்

*காலத்திற்கேற்ப, இன்றைய மக்களினம் சாதிகளின் பெயரால் பல கூறுபாடுகளைக் கொண்டு சிதறிக் கிடக்கிறது. பல்வேறு இன மொழிக் குழுவைச் சார்ந்த பலராக இன்றைய சமுதாயத்தினர் நிலவுவதைக்*[4]

காணமுடிகிறது.

உலகில் உயிர்ப்பொருள்களின் முதல் தோற்றம் கணக்கிடற் கரியதாய் உள்ளது. பல அஃறிணை உயிர்ப் பொருள்கள் தோன்றிய பின்னர்த்தான், மனித இனம் தோன்றியிருக்க வேண்டும். இதனை,

*புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாய்க்*
*கல்லாய் மனிதராய்*[5]

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார் மாணிக்கவாசகர். வரலாற்று அறிஞர் பலரும் மனித குலத்தின் பரிணாம வளர்ச்சியை ஆராய்ந்து, அதனுடைய படிநிலைகளைத் தெளிவாக உணர்த்தியுள்ளார்கள். இத்தகைய மனிதப்பிறவி அரிதினும் அரிது என்று ஔவையார் கூறுகிறார். இவ்வரிய மனிதப்பிறவி எடுத்ததின் நோக்கமே மனிதனாக வாழ வேண்டும் என்பதாகும். மனிதன், பொட்டல் நிலங்களையும் கல்முள் நிறைந்த நிலங்களையும் திருத்தி, வளங்கொழிக்கும் கழனிகளாக மாற்றினான்; தான் வாழும் இல்லத்தைக் கோயிலாக மாற்றினான்; நாட்டையும் திருத்தினான். இவ்வாறு பல மாறுதல்களைச் செய்து நாட்டை நல்நிலைக்கு உருவாக்கிய நெஞ்சினன் என்பதை,

*எண்ணத் துறையில்*
*வறுமை சூழ்ந்திடின்*
*வாழ்விலை; உறையுளின்,*
*அறுசுவை ஊணின்,*
*ஆடையின், அளவின*
*தன்று மானிடர்*
*ஆக்கம், நெஞ்சிடை*
*நின்று செலுத்தி*
*நிலவிடும் நோக்கின்*
*பெருமையின் அளவினிற்*
*பெரியவன் மனிதன்* (பக். 229 - 230)

என்று குலோத்துங்கன் கூறுகிறார். இன்றைய நாகரிகவுலகில் மனிதஇனம் விரைவாக முன்னேறிக் கொண்டிருக்கிறது; இருப்பினும் மனத்தளவில் முன்னேறியதாகத் தெரியவில்லை. இதனை,

*என்னதான்*
*நாகரிகச் சந்திரனில்*
*மனிதன் காலடி வைத்தாலும்*
*பதிப்பன எல்லாம்*
*அநாகரிகச் சுவடுகளே*[6]

என்கிறார் பழனி. ஆனால், கவிஞர் குலோத்துங்கன் மனித இயல்பின் அளவை,

*கடும்பகை உமது பண்பில்*
*கலந்துவாழ் கறையான்; உம்மோர்*
*நெடும்பகை புறத்த தன்று;*
*நீவீர்நும் பகைவர் காணீர்* *(ப. 369)*

என்றும்,

*வருவதும் மறைவதும் மரபெனின் வையக*
*வாழ்வின் பொருளெதுவோ - மானிடம்*
*உருளும் தொடரோ, ஒருதிசைத் தடமோ*
*உயிரின் தரமெதுவோ?* *(ப. 86)*

என்றும் மனதளவில் முன்னேற வேண்டுமென்பதைப் படம்பிடித்துக் காட்டுகிறார். மனிதன் தன்னைப் பற்றியும் தன் மனைவி மக்கள் உற்றார் உறவினர்களைப்பற்றியும் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பவன். சாதாரண இன்பதுன்பங்களில் வீழ்ந்து துடிப்பவன் உண்மையில் மனிதனன்று. இதனால்தான்,

*மனிதனைவிட மிக நுண்ணிய, அழகிய, அவனைவிட பன்முகக் கோலங்கொண்ட அவனைவிடச் சுவாரசியமான வேறொன்றை நான் அறியேன்*

என்கிறார் கா. சிவத்தம்பி.

இதனை,

*பகுத்துணரும் அறிவே*
*எம் உரைகல் - ஆய்ந்து*
*பாராமுன் எதையுமே*
*கடவுள்வந் தொருநாள்*
*வகுத்ததென் றோதினும்*
*நம்போம் - மனித*
*வலிமைக்கும் மேலாம் ஒன்*
*றுண்டென்ப தொப்போம்* *(ப. 105)*

என்று தெளிவுபடுத்துகிறார் குலோத்துங்கன்.

4. சமுதாயக் கட்டமைப்புகள்

சமுதாயம் என்பதற்குப் பல கருத்துக்கள் கூறப்படுவதுண்டு. பொதுவாகச் சமுதாயம் என்பதை ஒரு குழுமம் - கூட்டம் - அமைப்பு என்று குறிப்பிடுவர். ஆனால் மேக்லியர்,

*பழக்க மரபு, செயலாற்றும் முறை, அதிகார வலிமை, ஒருவருக்கொருவர் உதவுதல் ஆகியவற்றின் அமைப்பு முறையாகவும், பல குழுமங்கள், பிரிவுகள் ஆகியவற்றுடன் மனிதனுடைய சுதந்திரமும் நடத்தையும் நெறிப்படுத்தும் ஒழுங்குமுறை இருப்பதையே சமுதாயம்*

என்கிறார். இந்த விளக்கத்தின் மூலம், சமுதாயமென்பது விரைந்து செயலாற்றும் கூட்டுத்தொகுதியெனப் புலப்படுகிறது. ஏனெனில் சமுதாயத்துள் பல்வேறுபட்ட செயல்கள், தொழில்கள், பொருளாதார, அரசியல் செயல்பாடுகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. மேலும் சமுதாயமென்பது தனிமனிதனுடைய நடத்தையையும் மனிதவாழ்வின் பல்வேறு அம்சங்களையும் கொண்டதாக உள்ளது. மனிதர்களிடையே காணப்படும் பிரிவுகளான குழுமம், இனம், கூட்டமைப்பு, வகுப்பு ஆகியவையும் சமுதாயத்தில் உண்டு. இம் முறையில் சமுதாயம் என்பது ஒன்றுக் கொன்று தொடர்பும், செயற்பாடுமுடைய கூட்டு வலையாகும். இதனை,

*இனமென்ற மொழியென்ற*
*எண்ணற்ற சிறுசுவர்கள்*
*இல்லாத மனித உலகம்*

*நின்றுவளர் அன்பொன்றே*
*நெறிகொண்டு, காலமெலாம்*
*நில்லாது முன்செல்லும்*
*நீண்டதோர் பயணம்*
*நிலையென்ற உலகம்* (ப. 161)

என்று குலோத்துங்கன் குறிப்பிடுகிறார். சமுதாயம் ஒற்றுமை வேற்றுமைகளை உள்ளடக்கியதாக இருக்கும். ஒற்றுமை வேற்றுமைகள் இல்லாது சமுதாயம் இருக்கமுடியாது. இரண்டும் முரண்பட்டதாக இருப்பினும் சமுதாய வளர்ச்சிக்கு இரண்டும் இன்றியமையாததாகும். ஒரு சமுதாய அமைப்பிற்கு ஒற்றுமை குணங்கள் மட்டும் போதா; அதற்கு வேற்றுமையும் அவசியமாகிறது. சமுதாயக் கட்டமைப்பு, குடும்பம், மக்களின் சிந்தனை, இலட்சியம், கருத்துநிலை ஆகியவற்றில் காணப்படும் வேற்றுமைகளின் விளைவாகவே ஒரு சமுதாயத்தின் பண்பாடு வளர்கிறது. இதனை,

*நவம்என னப்படும் கிரகம் யாவையும்*
*நண்பர் ஆகலாம்; ஒன்று சேரலாம்*
*தவமிருப்பினும் தமிழர் ஒன்றி ஓர்*
*தலைமை ஒப்பிய சரிதை ஏதடா?* (ப. 398)

என்று நையாண்டி முறையில் சாடி, சிந்திக்க வைக்கிறார் குலோத்துங்கன். ஆண் பெண், தந்தை மகன், கணவன் மனைவி, சகோதரன் சகோதரி, உரிமை, கடமை, ஆள்வோன் ஆளப்படுவோன் எனப் பல்வேறு நிலைகள் உள்ளதால்தான் ஒரு சமுதாயமே செயல்படுகிறது.

சமுதாய வளர்ச்சி என்று தோன்றியது என்று அறுதியிட்டுக் கூறமுடியாது.

*காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்து வந்த மனிதர்கள் ஊர்ந்து வந்து ஓரிடத்தில் சேர்ந்தார்கள். அதனால் அவர்கள் வாழ்ந்த இடம் ஊர் என வழங்கலாயிற்று. அதில் பலர் நகர்ந்து வந்து பெருங்கூட்டமாக ஓரிடத்தில் குடியேறினர். நகர்ந்து வந்து குடியேறிய இடம் நகரம் என்று அழைக்கப்படலாயிற்று*[9]

என்று சா. மாரிமுத்து கூறுகிறார். தனிமனித வாழ்க்கை குடும்பத்தால் மலர்ச்சிபெறுகிறது. குடும்பங்கள் பல சேர்ந்து ஊராகி, ஊர்கள் வளர்ச்சி பெற்று நகரங்களாகவும் நாடுகளாகவும் உருவாகிப் பெரும் சமுதாயங்கள் உருவாக்கப்படுகின்றன. தனிமனிதர்கள் சேர்ந்து இயங்கும்பொழுது சமுதாய உறுப்பினர்களாக மாறிவிடுகின்றனர்.

*மனிதன் சுதந்திரமானவனாக இருந்தாலும், பிறப்பிலும் பிறந்தபின் சமுதாயத்துடன் இணையும் போதும், சமுதாயம் அவனைப் போன்ற எண்ணற்ற தனிமனிதர்களின் சக்திகளைக் கொண்டு ஒரு சில காரியங்களைச் சாதிக்க முற்படும்போதும், அவனைத் தன்னகத்தே ஏற்றுத் தனது சட்டதிட்டங்களுக்கு உள்ளாக ஆட்படுத்துவதன் மூலம் தனிமனிதன் சமுதாயம் என்னும் கட்டமைப்பில் ஒன்றுகிறான்.*[10]

இதனை,

*சமுதாயத்தோடு தொடர்புடைய அறிவியல் துறைகள் பலவற்றுள், இலக்கியத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பது சமுதாயவியலாகும். சமுதாயவியல் என்பது மனித ஒழுக்கங்களுடன் தொடர்புடையது. தனி மனிதனையும் மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமுதாயவியல் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது*[11]

என்று பெரியார் குறிப்பிடுகிறார்.

தொடக்கக்காலத்தில் சமுதாயம் பல நிலைகளாகப் பகுக்கப் பட்டிருந்தது. மக்களிடையே காணப்பட்ட உடலமைப்பு நிறவேற்றுமைகளுக் கேற்பவும் இலட்சிய வகையில் அமைய வேண்டிய ஒற்றுமைக்காகவும் மனித சமுதாயத்தினை நெறிப்படுத்தி அமைப்பதற்காகவே சமுதாயப் பிரிவுகள் வகுக்கப்பட்டன. ஒவ்வொரு பிரிவும் பிற பிரிவுகளுடன் ஈடுபாடும் தலையீடும் இல்லாமல் தனிப்பட்டவகையில் தம்முடைய இலட்சியங்களையும் குறிக்கோளையும் எய்தும் முயற்சியுடன் சுயேட்சையாகவும் இயங்குவதற்கு கூடிய வழிவகைகள் உள்ளன என்பதை,

*காண விழைந்த*
*கனவுலகின் பன்மடங்கு*
*மாணச் சிறந்ததொரு*
*வாழ்க்கைச் சமுதாயம்*
*படைக்கத் துணிந்தேன் நான்;*
*பாதையிலே காணும்*
*தடைக்கற்கள் யாவும்*
*தகர்க்கும் வலியுடையேன்* (ப. 116)

என்று கவிஞர் கூறுகிறார். பற்று அல்லது பாசம் காரணமாகவோ, கொள்கைகள் காரணமாகவோ, வேறெந்தக் காரணங்களை முன்னிட்டோ இன்று நாட்டில் பல்லாயிரக்கணக்கான சபைகளும் குழுக்களும்

அமைப்புகளும் இருக்கின்றன. இவற்றின் காரணங்கள் அனைத்தும் ஒரே தன்மையில் இருக்கலாம். சான்றாக இனம் பற்றிய குழுக்களை, வேளாளர் சங்கம், வன்னியர் சங்கம், பிராமணர்கள் சங்கம் போன்ற சாதிச் சங்கங்கள் இன்று நாட்டில் உள்ளன. அவற்றின் அமைப்பும் அடிப்படைக் கொள்கைகளும் அந்தந்த இனம் அல்லது மரபினை உயர்த்த வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் அமைந்திருந்தாலும் சமுதாயத்தை ஒத்துநோக்கி ஆராயும்போது இதுபோன்ற இனம் அல்லது சாதிச் சங்கங்கள் சமுதாய வளர்ச்சிக்குக் கேடாகவே அமைகின்றன. மக்கள் சமுதாயம் மட்டுமின்றி எந்த உயிரினத்தும் ஆண்பெண் இரண்டும் இணைந்து வாழவேண்டியுள்ளன. இதுவே சமுதாயத்தின் அடிப்படை வாழ்வு. இந்த இனம் பெருக வேண்டுமானால் இவை இரண்டும் இணைந்து வாழ்வதிலேயே கருத்திருக்க வேண்டும்.

*பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்*
*பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்*
*எட்டும் அறிவினில் ஆணுக்கிங் கேபெண்*
*இளைப்பில்லை காண் என்று கும்மியடி*[12]

என்று பாடிய பாரதியார்,

*வேதம் படைக்கவும் சாத்திரம் செய்யவும்*
*வேண்டி வந்தோம் என்று கும்மியடி*
*சாதம் படைக்கவும் செய்திருவோம் தெய்வ*
*காதி படைக்கவும் செய்திடுவோம்*[13]

என்றும் பாடினார். ஆண்களோடு சமமாக மற்ற துறைகளில் போட்டியிட்டு வெற்றி பெறுவதுடன் அவர்தம் இயல்பான பண்பாகிய நல்ல உணவு சமைப்பதும், நன்மக்களைப் பெறுதலும் தவறாது மேற்கொள்ள வேண்டும் என்று பாரதி கூறிச்சென்றார். இதனை,

*குவளை உன்கண் குய்புகை கமழத்*
*தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்*
*இனிதுஎனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுநல் முகனே*[14]

என்று குறுந்தொகைப் பாடல் குறிப்பிடும். எனவே, மனித சமுதாயத்தின் இருவேறு கூறுகளாகிய

*ஆடவரும் பெண்டிரும் தத்தம் நிலையில் வழுவாதும்*
*கடமையில் தவறாதும் தம் உரிமையைக் கொண்டாடி*
*வாழப் பழகினால்தான் சமுதாயம் முன்னேறும்*[15]

என்கிறார் அ.மு.பரந்தாமன்.

இதனைக் கவிஞர் குலோத்துங்கன்,

*சென்றநாள் சிறந்த தாயின்*
*செயல்படும் பொறுப்பில் இன்று*
*நின்றநாம் உயர்ந்தோ ராயின்,*
*நிறைவொடு நாம்வளர்த்தோர்*
*வந்தநாள் யாவும் கீழாய்*
*மாறமோ? வாழ்வும் பண்பும்,*
*இந்தநாள் தாழ்ந்த தென்போர்க்*
*கியம்புவன்; மனித சாதி*
*குன்றுவதன்று; பண்பில்*
*குறைவது மன்று; பையப்*
*பொன்றுவ தன்று; நாளும்*
*புதுவதாய்ப் பூர ணத்தைத்*
*தழுவிடக் கரங்கள் நீட்டும்*
*தவத்தது; மானுடத்தின்*
*முழுமையும் காண்போர் நீண்ட*
*முன்னேற்றப் பயணம் காண்பர்* (ப. 190)

என்று கூறுகிறார்.

பெருஞ்சமுதாயமொன்றில் எல்லாச் சட்டங்களும் அல்லது விதிகளும் அனைவருக்கும் பொதுவாக இருக்கமுடியாது. சில பொதுவாகவும் சில அவரவர் சமுதாய நிலைக்கு ஏற்றதாகவும் இருத்தல் நலம்பயக்கும். இவ்வாறு எல்லாப் பகுதிகளையும் தழுவிச்சென்றால் நாட்டிலும் சமுதாயத்திலும் பிளவோ வேறுபாட்டு எண்ணமோ உண்டாக வழியில்லை. சமுதாயத்தைக் கட்டுப்படுத்த சட்டதிட்டங்கள் தேவையெனினும், அவை எல்லை மீறிய கட்டுப்பாடுகளை அமைப்பதும், ஒரு சமுதாயக் கட்டுப்பாட்டினைப் பிற சமுதாயங்கள் ஏற்றுக் கொள்ளச் செய்வதும் தவறாகும். அதனாலேயே இந்திய அரசியல் சட்டத்தில் ஒவ்வொரு தனிப்பட்ட சமுதாயத்திற்கும் அவரவர் இனப் பண்பாட்டு நிலைக்கு ஆதரவான வகையில் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. சில சமயங்களில் இந்த எல்லை மீறப்படும்போது மக்கள் உள்ளங்களில் மனச்கசப்பு தோன்றுகிறது. எல்லாச் சமுதாயத் தலைவர்களும் ஒன்றுகூடித் தாம் அனைவரும் பெரிய மக்கள், சமுதாயத்தின் உறுப்பினர் என்ற உணர்வுடன் செயலாற்றினால் அவர்களின் ஆணைவழியே இயங்கும் நாடு சிறப்படையும். இதனை,

*எல்லாரும் வளர்கவெனும்*
*நெஞ்சம் வேண்டும்;*
*எதிர்காலப் புலன் வேண்டும்;*

*இவை யனைத்தும்*
*வல்லாரே வையத்தை*
*வழி நடத்தும் மாண்புடையா,* (ப. 194)

என்ற பாடல் மூலம் அக்கருத்தினை விளங்கவைக்கிறார்.

சமுதாய ஒழுக்கச் சபைகளும், சமயச்சபைகளும், சாதிகளின் ஆதிக்கமும், கொள்ளை, கொலை முதலிய கொடுமைகளும் ஒவ்வொரு காலத்திலும் தோன்றி மக்கள் வாழ்வைக் குலைத்தன. சில நேரங்களில் வேற்றுநாட்டுப் படையெடுப்புகளும் பிற நாட்டவரும் நாட்டை நலிவுறுத்தினர். இன்று பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும் கட்சி வேறுபாடுகளுமே சமுதாயத்தைப் பாழாக்குகின்றன என்பதை,

*தேறாத புலவர்களும்*
*வளர்ச்சிப் பாதை தெளியாத தலைவர்களும்*
*தெரிந்த உண்மை கூறாத அறிஞர்களும்*
*ஆய்வுப் பார்வை கொள்ளாத பண்பாடும்*
*குடிமை செய்ய வாராத செல்வர்களும்*
*கொண்ட நாடு வளராது; வளர்கின்ற*
*வழிகா ணாது.* *(ப. 194)*

என்று கூறுகிறார். மனித சமுதாயத்தின் தொடக்கக் காலத்தில் வகுப்புப் பிரிவுகள் இல்லை. ஆனால், உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் பணிக்கு அவன் நகர்ந்து சென்றபோது நிலவுடைமைச் சமுதாயம் தோற்றம் பெற்றது. சங்க இலக்கியத்தில் நிலவழியும் தொழில் வழியும்தான் மக்களுக்கு. குறவர், வேட்டுவர், உழவர், பரதர், மறவர், பாணர் பல குடிகள் இருந்தன.

*சங்க காலத்தில் நிலம், தொழில், பண்பு சிறப்பு பற்றி உண்டான பெயர்கள், காலப்போக்கில் சாதிப்பெயர்களாக மாறி விட்டன*[16]

என்று இராசமாணிக்கம் கூறுகிறார். கி.பி. 6 ஆம் நூற்றாண்டில் ஆரியர் விந்தியம் தாண்டி தென்மாநிலங்களில் பரவத் தொடங்கியது முதற்கொண்டு பிறப்புவழிச் சாதி முறையானது தோன்றியது.

*ஆரியர் தென்மாநிலங்களில் பரவிய வரலாற்றை இராமன் வரலாறு இன்னும் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துரைக்கிறது*[17]

என்கிறார் கமலக்கண்ணன்.

சாதியின் வேர், ஆரியர்களின் நூலில் கூறப்பட்டு, பின் தமிழகத்தில் நுழைந்ததை,

*ஆரியர்தம் தலைமைக்கோட்பாடு பிறப்பு வழிச் சாதியாகும். மனுசுமிருதி பிறப்புச் சாதியை உறுதி செய்கிறது. நான்கு வேதங்களுள் மிகத் தொன்மையான ரிக் வேதத்தின் முற்பகுதியில் பிராமணன், சத்திரியன், வைசியன் என்ற மூன்று பிரிவுகளும் பிற்பகுதியில் சூத்திரன் என்ற நான்காவதும் உள்ளன.*[18]

என்பதிலிருந்து அறியலாம். எனினும் ஆரியர்களின் நால்வருணப் பாகுபாடானது தமிழ்ச் சமுதாயத்தைப் பிரித்ததாகக் கூறமுடியாது. ஆனால் தொல்காப்பியம் நான்கு பிரிவுகளைப் பற்றிக் கூறும்போது,

*மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே*[19]

என்கிறது. அந்தணர்,அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வகுப்பினரையும் வரையறை செய்கிறது.

*வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்*[20]

என்ற புறநானூற்று வரியும் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்று கூறுகிறது.

*சமுதாயநெகிழ்வுத் தன்மையுடையதாய நாட்டில் எழுகின்ற அரசியல் பொருளாதாரச் சிக்கல்கள், சமய இயக்கங்கள், பல்வேறு நல மன்றங்கள், வெளிநாட்டவர் வருகை, அவர்தம் நாகரிகப் பண்பாட்டு மோதல்கள், அறிவியல் கண்டுபிடிப்புகள் முதலியவற்றால் பாதிக்கப்படுகின்றன. சட்டதிட்டங்கள் மனிதனால் மனித நன்மைக்காக ஏற்படுத்தப்பட்டவையாதலால், எப்பொழுது அவை சரியானவை அல்ல என்று தோன்றுகிறதோ அப்போதே அவை நீக்கப்படல் வேண்டும். காலப் போக்கிற்கும் சூழலுக்கும் ஏற்ப அவ்வப்போது ஏற்படும் சிக்கல்களுக்குத் தீர்வுகாண வேண்டுமேயொழிய சமுதாயத்தின் பொருளற்ற மரபுகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் இவற்றைக் கண்மூடித் தன்மையாய்ப் பின்பற்றுவது நல்லதல்ல*[21]

என்கிறார் ச. பரிமளா. கல்வி, பொருளாதாரம், அரசியல் முதலிய சூழலுக்கேற்ப மனிதன் மாறுகிறான், சமுதாய மரபுகளும் பழக்க வழக்கங்களும் சட்டதிட்டங்களும் மாற்றம் பெறுகின்றன. இதனை,

*மறைகளும், மறைகள் தந்த*
*மதங்களும், மதங்கள் கண்ட*
*நிறைகளும், கடந்து நிற்கும்*
*நெஞ்சினன் மாந்தன்; வானும்*

*வரைகளும் அளந்து நிற்கும்*
*வாமனன்;' வகுத்த கொள்கை*
*முறைகளின், முறைகள் கண்ட*
*மூலத்தின் முதல்வன் மாந்தன்*

*மனிதனை வளர்ப்போர் இந்த*
*மண்ணினை வளர்ப்போர்; மாந்தன்*
*தனியனென் றெண்ணுவாரோ?*
*சர்வமும் தன்னுள் கொண்டோன்;*
*பனிமலர்த் தண்மை யோடு,*
*பரிதியின் கனலும் கொண்ட*
*புனிதனு மவனே! சக்திப்*
*புதையலு மவனே* (பக். 191 - 192)

என்று இக்கவிதைகள் மூலம் விளக்குகிறார். எனவே, குலோத்துங்கன் படைப்புகளைச் சமுதாயப் பார்வையில் அணுகும்போது சமுதாயம் சமயம் அரசியல் எனும் முப்பெரும் உட்பிரிவுகளில் நோக்க இடந்தருகின்றன. சமுதாய மனிதன், முன்னேறக் கனவுகாண வேண்டும். அக்கனவு நனவாதல் அவனது முயற்சியால் முடியும் என்பதை,

*கனவெனக் காண்பவை கைப்படல் திண்ணம்;*
*கருதுப யாவையும் பெறுவதெம் எண்ணம்;*
*மனமெனும் 'வாமனன்' வரம்புகள் காணான்;*
*வளர்கநம் கனவுகள்; மானிடம் வாழ்க* (ப. 188)

என்று கூறுகிறார்.

5. தனிமனிதனின் சமுதாயப் பங்களிப்புகள்

தனிமனிதன் தன்னைமறந்து பரந்த சமுதாயத்துக்கே உதவிசெய்ய வேண்டுமென்பதை,

*எண்ணுவதும் படைப்பதும்எம் பணிகள்; யாங்கும்*
*எல்லோர்க்கும் சமவாய்ப்பு நிறைந்த தான*
*மண்ணுலகைச் சமைப்பதும்எம் குறிக்கோள்; நாளை*
*வருகின்ற தலைமுறையின் வாழ்வுக் காக*
*உண்ணுவதும் உறங்குவதும் தவிர்ந்தும் கூடி*
*உழைப்பதும் யாம்மகிழும் இன்பம்;* (ப. 80)

என்ற வரிகளால் சமுதாய உறுப்பினராகிய ஒவ்வொருவரும் சிறப்புற வாழத் தன்னை செம்மைப்படுத்திக்கொள்ள வேண்டும் என்கிறார். தனி மனிதன் ஆதிகாலத்தில் வாழ்ந்ததுபோல் தனியாக வாழ்வானேயானால் சமுதாயம் உருவாகியிருக்காது. சமுதாயம் என்னும் கூட்டுவாழ்வு இல்லையென்றால் முன்னேற்றங்களும், நாடும், நகரும், ஊரும்,

ஊர்தியும், விண்வெளிப்பயணமும் பெற்றிருக்க முடியாது. எனவே, தனிமனிதன் சமுதாயத்துக்கும், சமுதாயம் தனிமனிதனுக்கும் கட்டுப்பட்டுத் தழுவி வாழும் நல்வாழ்வையே பண்பட்ட திருந்திய மக்களினம் விரும்பும். இப்படிப்பட்ட மக்களை,

*தலைவணங்கி முன்னிற்கும், நின்மக் கள்தம்*
*தனியாத ஆசையெனும் தழலின் முன்னர்,*
*மலைவணங்கும்; வான்வணங்கும்; கடலின் மேனி,*
*வளிதழுவக் காதலுளம் மகிழ்ந்தெ ழுந்த*
*அலைவணங்கும்.........................."* (ப. 66)

என்பதைப் போற்றுகிறார் கவிஞர். இம்மக்களுக்குத் தோன்றும் தடைகள் அனைத்தும் சூரியனைக் கண்டவிடத்து மறையும் பனிபோல் மறைந்துப் போகும் என்கிறார். சமுதாயத்தின் முக்கிய நிலை, சமுதாயத்திற்கும் தனிமனிதனுக்கும் இடையே காணப்படும் உறவுநிலையாகும். தனி மனிதனைவிடச் சமுதாயம் முற்பட்டது; மேலும் நீண்டநாள் நிலைப்பது. மனிதனைப் போன்ற காலஎல்லை சமுதாயத்திற்கில்லை. இருப்பினும் மனிதர்களில்லாமல் சமுதாயம் என்ற ஒன்றில்லை. மனிதனே சமுதாயத்தை உருவாக்குகிறான் என்றாலும் சமுதாயம்தான் தனிமனிதனைப் பண்படுத்த முடியுமென்பதை,

*பூரணம், பூரணத்தின்*
*பொலிவினை விழையும் ஞானம்;*
*வாரணம் நடந்த தன்ன,*
*மலையெழுந் தசைந்த தன்னப்*
*பெருமிதம் கலந்த பண்பின்*
*பீடுடை வாழ்வு* (ப. 67)

என்று கூறி மகிழ்வதுடன்,

*வய்யகம் தன்னைக் குடும்பம்என் றேற்றபின்*
*மற்றொரு சுற்றமிலை - குடி*
*செய்யத் தொடங்கிய தியாகியர்க் கெந்தத்*
*திசையிலும் எல்லையில்லை* (ப. 73)

என்றும் புகழ்ந்துரைக்கிறார் கவிஞர். மனிதர்க்கும் சமுதாயத்திற்கும் இடையிலான உறவில் காணப்படும் 'நாம்' என்னும் உணர்வும், ஒன்றுபட்டுச் செயலாற்ற வேண்டும் என்பதும் மனிதனைச் சமுதாயஞ் சார்ந்தவனாக்குகின்றன. மனித இனப் பொது நன்மையின்மீதுதான் சார்ந்து இருக்கிறோம் என்னும் உணர்வினால் மக்கள் நடத்தைகளை மேற்கொள்கின்றனர். அதனால்தான் சமுதாயக் கட்டுப்பாடும் சமுதாயப் பொறுப்புணர்வும் ஏற்படுகின்றன. இதனை,

*பயணம் பெரிது; செலும்*
*பாதை நெடிது; வழித்*
*துயரம் தவிர்க்கத்*
*துணைதேடேன்; என்படைக்கு*
*ஒருசிலரும் போதும், நான்*
*ஒருவனே போதும்* (ப. 117)

என்று கூறும் கவிஞர் மேலும்,

*............... மெய்ப்*
*பொருளொன்று தேடும்*
*புனிதப் பணியிதற்குக்*
*கூட்ட மெதற்கு?*
*கொடிபிடித்து பின்தொடர்வோர்*
*ஆட்டமேன் வேண்டும்?*
*அரிய பொருளெதையும்*
*தேடி யளிக்கச்*
*சிலர் போதும்; மற்றதனைக்*
*கூடிச் சுவைக்கக்*
*குவலயத்தை நாமழைப்போம்* (ப. 117)

என்று கூறி, தனிமனிதச் செயல் மக்கள் நலத்தை மனத்தில்கொண்டே செய்யப்படுவது என்கிறார். இம்மனப்பாங்கினால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும், சமுதாயத்தின் நன்மைக்கருதித் தன்னுடைய பொறுப்புணர்வுகளை உணர்ந்தும், பொதுக்குழும உணர்ச்சியை வளர்த்துக் கொள்ளப் பிறருடன் கூடி இணைந்து செயலாற்றும் பாங்கையும் வளர்த்துக்கொள்கிறான். இம்பொதுக்குழும மேன்மைக்குத் தனிமனித பங்கை,

*மண்ணும் நிறைந்த வாரியும், விரிந்த*
*விண்ணும் கொள்ளினும் மேற்செலும் ஆவல்*
*துளங்குமென் இதயத்துடிப்பும்; புயலென*
*விளங்குமென் சிந்தனையின் வினையும், கடந்த*
*ஆர்வமும், கலங்கமில் அன்பும், சிந்தும்*
*வேர்வையிற் றிளைக்கும் மெய்யும்* (ப. 64)

என்று சித்திரிக்கின்றார் கவிஞர் குலோத்துங்கன். சமுதாயத்தில் அவரவர் கடமையில் செயலாற்றும்போது அவர்களுக்குப் புகழைத் தேடித் தருவதோடு, அவர்களைப் பின்பற்றி மனித சமுதாயம் செல்லவேண்டிய உண்மைகளையும் வற்புறுத்தும். இதனை,

*சாதியிற் கூடி நம்பும்*
*சமயத்திற் கூடி மாந்தர்*
*ஆதியை மொழியை வைத்தவ்*
*வமைப்பினில் வாழ்வு தேடி*
*மயங்கவும், மாலை யேற்று*
*மகிழவும், நிலைமைக் கேற்ப*
*இயங்கவும் இயலேன்; கல்வி*
*இசித்திட பசித்த போதும்*
*மலத்திடை அரிசி தேடும்*
*மனிதரை மதிப்பரோ! யான்*
*நிலத்திடை தேவன்; எந்தன்*
*நெறியினில் தாழ்வ தில்லேன்* (பக். 132 - 133)

என்கிறார். ஒருசிலர் விரும்புவதுபோன்று புகழே வேண்டுமெனச் செயலாற்றினால் அவருடைய காலத்தில் வேண்டுமானால் புகழாக அமையலாம். காலவெள்ளத்தில் அப்புகழ் நீங்கிவிடும். எனவே, உண்மையில் தன்னையுணர்ந்து, சமுதாயத்தையறிந்து, சமுதாயத்துக்குத் தாமாற்றவேண்டிய கடமையையுணர்ந்து செயலாற்றுபவரே காலத்தை வெல்லும் புகழ்பெற்று வாழ்பவராவர். ஒருவேளை, அவர் காலத்தில் வாழும் மனித சமுதாயம் அக்கடமை உணர்ச்சிகளுக்குச் சிறப்பைத் தரவில்லையெனினும், வழிவழியாக வளரும் மனித சமுதாயம் அதற்குரிய சிறப்பினைத் தரத் தயங்குவதில்லை. சமுதாயத்திற்கு கடமையாற்றுபவர்கள் இதற்காகப் பின்வாங்குவதுமில்லை.

தனிமனிதனும் சமுதாயமும் - அவ்வழி நல்லை வாழிய நிலனே

ஒரு நாட்டில், 'யாவரும் நம்மவரே' எனவும், 'நான்', 'எனது' என்றுள்ள இருவகைப்பட்ட மக்களில் எப்பண்பாட்டின்வழி வாழ்கிறார்களோ அதன்வழியே அந்நாட்டின் உயர்வும் தாழ்வும் அமையும். ஒரு நாடு சிறந்திருக்கிறது எனில் அச்சிறப்பு, மக்கள் மேற்கொள்ளும் உண்மை வாழ்வைத்தான் பற்றும் என்பதை உணரவேண்டும். வெறும் போர்க்கருவிகளும் பிற மாறுபட்ட நிலைகளும் நாட்டை நாடாக்க வல்லன அல்ல. அவை ஒருவேளை நாட்டைப் பாதுகாக்க அமைந்த துணைக்கருவிகளாக - சாதனங்களாக - இருக்கலாம். சில தனிமனிதர்கள் இவற்றைக் கணக்கிட்டுத் தம் ஆணையை விரிவுபடுத்தத் திட்டமிடுவர். உண்மையில் நாடு வாழ்கிறது என்றால், அதில் வாழும் மக்கள் - தனித்தனியாக ஒவ்வொருவரும் - செம்மை பெற்றவராக இருக்க வேண்டும். இதனை,

*நாள்தோறும் முன் செல்வதடா மனிதம்; மாந்தர்*
*நடைப்பயணம் சிகரத்தை நாடிச் செல்லும்*

*வேள்வியடா; மேலதினும் மேல தேடும்*
*விழைவுடையார் மண்மீது விண்ணும் காண்பர்.*
*தனிமனிதர் மேதை உயர்வித்து; மண்ணில்*
*தளிர்விட்டுத் தருவாகிப் பூத்துக் காய்த்துக்*
*கனி எதுவும் தானாகத் தருவதில்லை*
*கடமையினைச் செய்வோர்க்குக் கடன்பட் டோம்நாம் (ப. 266)*

என்று கூறுகிறார். செம்மை நலம் பெற்ற நாட்டில் பிற குறைபாடுகள் இருப்பினும் அவை அனைத்தும் வெளியே தெரியமாட்டா. ஆனால், அனைத்துமிருந்தும் நல்லவர் வாழ்வு இன்றேல் உலகு நலமில்லை என்பதனை,

*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே*[22]

என்ற அடிகள் உணர்த்தும். எனவே, நாடுவாழத் தனிமனிதனும் அவன்வழி சமுதாயமும் நல்லநெறியில் செல்லவேண்டும். கல்விதான் சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வைப் போக்க ஒரேவழி கல்வித்துறையில் நம் சமுதாயம் இன்னும் இணைந்து முன்னேறத் தனிமனிதர் ஒவ்வொருவரும் கற்றுத் தெளியும் வகையில் இத்துறையினை விரிவு செய்யவேண்டுவது அடிப்படையும் அவசியமும் ஆகும். சற்று ஆராய்ந்தால் சமுதாய வாழ்விற்கு அறிவே அடிப்படை என்பதை,

*நாளும் நடந்து நடந்துடல் - தேய்ந்து*
*நலிந்தது போதாதோ? பல*
*கோளும் நிறைந்துள மீனும் - கடந்தினும்*
*கோடெதும் காண்கிலனே! எனை*
*ஆறும் பெருந்திரள் ஆசையின் - தாகம்*
*அடங்குதல் எவ்வணமோ? உளம்*
*மூளும் அறிவுப்பசி நெருப் - பாற நான்*
*மூழ்குவ தெக்கட லோ (ப. 79)*

என்று கல்வியைப் படம்பிடித்துக் காட்டுகிறார். ஆனால் அதை உணராது, கற்றவர் சற்று உயர்ந்துவிட்டோம் என்று பெருமை கொள்வது சமுதாய வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் மாறுபட்டது ஆகும். அதனால்தான் சமுதாயத்தில் கல்வியால் - அறிவுடைமையால் - ஏற்றத் தாழ்வு இருத்த லாகாது என எல்லா நாட்டினரும் தனிமனிதனைத் தன்னோடு பிணைத்துச் செல்வதைக் காணமுடிகிறது. இதனை,

*வேண்டுவ படைக்கும் மேதையின் வித்துளர்*
*யாண்டு தோன்றினும் யாவரே யாயினும்*
*போற்றுவீர்; நம்நிலப் புதையல் என்றவர்தமை*

*வேற்றுமை யறியா வழியொடு காண்பீர்.*
*துறைதொறும் துறைதொறும் துருவி ஆய்ந்துள*
*அறிஞரைப் பணிவுடன் அழைத்துப் போற்றுவீர்*
*(பக். 394 - 395)*

என்று வேண்டிக்கொள்கிறார். ஒரு நாடு புகழ் வாய்ந்தவர்களை (தனி மனிதர்களை) உருவாக்க வேண்டும்; இன்றேல், அந்நாடு களர் நிலத்துக்குச் சமமாகக் கருதப்படும். இதே கருத்தை,

*தோன்றிப் புகழோடு தோன்றுக*[23]

என்றார் வள்ளுவர். மற்றோரிடத்தில்,

*விசையிலா வண்பயன் குன்றும்; இசையிலா*
*யாக்கை பொறுத்த நிலம்*[24]

எனவே, புகழ் என்னும் உயிரில்லாத வெறும் மனித உடலைச் சுமந்தால், இந்தப் பூமி விளைவில்லாத நிலமாகக் கருதப்படும் என்கிறார். சமுதாயத்தில் திறமையுள்ள தனிமனிதர்களை அடையாளம் கண்டு தகுந்த வாய்ப்பினை அளிக்க வேண்டும். இதனை,

*தத்துவம் சொல்வேன்; தனிச்சிலர் சாதனை*
*தவழும் மானிடம் தாவிட வழிசெய்யும்* *(பக். 83)*

என்கிறார் குலோத்துங்கன். இனம்தெரியாத ஒரு மேதை கண்டுபிடித்த எளிய கருவியாம் கலப்பைதான் வேளாண்மை யுகத்தையே உருவாக்கியது. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் கண்டுபிடிக்கப்பட்ட நீராவி இயந்திரந்தான் தொழில்யுகத்தைத் தோற்றுவித்தது. 20ஆம் நூற்றாண்டின் இடையில் படைக்கப்பட்ட கணிப்பொறிதான் பிரம்மாண்டமான விளைவுகளுடன் கல்வியுகத்தை உருவாக்கியது. ஏனவே,

*வாரிக் கரைமணல் எண்ணும் பொறுமையும்*
*வாய்ந்தவன் சோர்ந்துபின் வாங்காதவனும்*
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
*கண்ட கனவில் மனம் இழந்தேன்; அது*
*காட்சியாய் மாறுமுன் ஓய்வதில்லாத* *(பக். 72)*

ஆகிய மேதமைகொண்ட தனிமனிதர்கள்தான் மனித வரலாற்றையே மாற்றும் சாதனைகளைச் செய்திருக்கிறார்கள். தனிமனிதர்கள் முக்கிய மானவர்கள். விடுதலை பெற்ற இந்திய நாட்டில் பசுமைப் புரட்சி வெண்மைப் புரட்சிக்குப்பின் இடம்பெற்றது தோல்துறையில் ஏற்பட்ட மாநிறப்புரட்சி (Brown Revolution). இம்மூன்றிலும் முக்கியப் பொறுப்பேற்றிருந்தவர்கள் முறையே டாக்டர் M.S. சுவாமிநாதன், டாக்டர் V. குரியன், டாக்டர்

Y. நாயுடம்மா ஆகியோரவர். அணு ஆயுதம், விண்வெளி, ஏவுகணை ஆகிய துறைகளில் நாம் முன்னேறிய நாடுகளுடன் ஒப்பிடத்தக்க வளர்ச்சியைப் பெற்றுள்ளோம். உலகின் மிகப் பெரிய அணைகள் சிலவற்றை இந்தியப் பொறியாளர்கள் உருவாக்கியுள்ளனர். அறிவியல், தொழில்நுட்பத் துறைகளில் பட்நாகர், ஹோமிபாபா, திருமலை அய்யங்கார், A.P.J அப்துல் கலாம் போன்ற தனிமனிதர்கள் செய்த சாதனைகள் சமுதாயத்திற்கு நலம் பயப்பதாக அமைந்தன, எனவேதான்,

*வேண்டுவ படைக்கும் மேதையின் வித்துளர்*
*யாண்டு தோன்றினும் யாவரே யாயினும்*
*போற்றுவீர்; நம்நிலப் புதையல்என் றவர்தமை*
*வேற்றுமை யறியா விழியொடு காணுவீர்*
*துறைதொறும் துறைதொறும் துருவி ஆய்ந்துள*
*அறிஞரைப் பணிவுடன் அழைத்துப் போற்றுவீர் (பக். 394 – 395)*

என அவர்களை - தனிமனிதர்களைப் போற்றுதல் வேண்டும் என்கிறார் கவிஞர்.

**6. சமுதாய அமைப்பில் குடும்பம்**

சமுதாயத்தில் முக்கிய அங்கமாக இருப்பது அமைப்புகள் என்னும் நிலையங்களாகும். சமுதாயத்திற்கு நன்மைபயப்பதற்காகக் குறிப்பிட்ட சில நோக்கங்களின் அடிப்படையில் அல்லது தனி நலத்தையோ குறியிலக்காகக் கொண்டு, அதனை அடைய முயலும் உறுதியான முறைக்கு அமைப்பு அல்லது நிலையம் என்று பெயர். மேலும் சமுதாய மரபு, கோட்பாடு, சடங்குமுறை ஆகியவற்றின் வடிவம்கூட அமைப்பு அல்லது நிலையமாகும். எனவே சமுதாயத்தையும் மக்களையும் சில குறிக்கோள்களால் இணைப்பதாக அமைவதுடன், சமுதாயத்தின் செயலாக்கங்களுக்கு அடிப்படையாக இச்சமுதாய அமைப்புகள் அமைகின்றன. பண்பாட்டின் கூறுகளை ஒரு தலைமுறை யிலிருந்து அடுத்த தலைமுறை மக்களுக்கு மாற்றி மனித இனத்தின் நடத்தைகளைச் சமுதாய அமைப்புகளே ஒன்றுபடுத்துகின்றன. சூழ்நிலைக்கேற்ப மனிதர்களின் நடத்தையைக் கட்டுப்படுத்தி அறக்கோட்பாடு, அறிவு, நடத்தையின் வடிவம் ஆகியவற்றில் தொடர்ச்சியை நிலைநாட்டிச் செயல்படுகின்றன. இதனைக் குடும்பம் என்ற எல்லைக்கோடு வரையறுக்கிறது.

குடும்பம் என்பது பாலின உறவுகளால் வரையறை செய்யப் படுவதையும் குழந்தைகளைப் பேணிவளர்க்கும் உரிமையும் உடையது.

*குழந்தைபேறுள்ள பெண்ணும் அவர்களைப் பராமரிக்க*
*ஆணும் உள்ள அமைப்பே குடும்பம்*[25]

என பைசான்ஸ் என்பவர் விளக்கம் கொடுக்கிறார். குடும்பத்தில் ஆண் பெண் இடையேயான பாலுணர்வு உறவு அவசியமெனினும் குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதற்கே குடும்பமெனும் சமுதாய அமைப்பு உள்ளது. இதனை,

*திங்கள் மலர்வானச் சோலை - வாரிச்*
*சிந்தும் சுவைத்தேன் அருந்தித் திளைத்தே,*
*பொங்கும் உணர்ச்சிப் பெருக்கில் - காதல்*
*பூத்துக் குலுங்கிப் பொலன்செய்ய, மின்னும்*
*செங்கை யணைப்பில் களிப்போம் - ஊற்றுத்*
*தீஞ்சுவை நீர்போல், தெளிந்து, நிறைந்து*
*தங்கச் சிலைசமைந் தாற்போல் - வையத்*
*தாழ்வு கடந்த தனிநிலை காண்போம்.*
*மடியேறி விளையாடும் குழந்தை - இன்ப*
*வாரிக்குள் விளைந்திட்ட தரளமோ - காதல்*
*கொடியேறி அவிழ்ந்திட்ட மலரோ - எங்கள்*
*கூட்டுக் களிப்பின் சிரிப்போ, கடல்சூழ்*
*படிவாழ்வு வானத்து நிலவோ - மழலை*
*பருகத் தெவிட்டாத பண்பென்ன சொல்வோம்;*
*அடிவானக் கதிர்வண்ண உடலம் - அள்ளி*
*அணைத்துக் களிப்பின் கரைகண்டு வாழ்வோம் (பக்.419 - 420)*

என்று கவிஞர் கூறுகிறார். மனைவியையும் குழந்தையையும் பராமரிக்கும் ஆண், தாழ்வுகளற்ற குடும்பம் சமைக்க விரும்புவது இயற்கை. இதனை,

*தேர்ச மைந்தது, செலுத்தும் பாகனும்*
*ஆர்வம் மீறினன்; அல்லும் பகலும்*
*காற்றினும் கதிரினும் கடிந்து செல்லுதல்*
*ஆற்றிய புரவிகள் அமைதி யற்றன;*
*வாழ்வின் ஒளியே வாராய்; வையத்*
*தாழ்வுகள் யாவையும் தாண்டுவம்; சிறுமையில்*
*கலங்கும் மானிடர் கைபடா தியற்கை*
*இலங்கும் பொன்னுல கேகுவம் அன்பே (ப. 426)*

என்று பாடுகிறார். அத்தாழ்வுகளற்ற குடும்பம் சமைத்த காரணத்தால்,

*.................................. அன்பு காட்டி*
*எண்ணிடை அமுதம் சேர்த்தாள்*
*எழிலினை வடித்துச் செய்த*
*பெண்ணிடை அரசி யன்னாள் (ப. 427)*

எனப் பெண்ணை உயர்த்திக்காட்டுகிறார். குடும்பம் என்பது மனைவியுடனும் குழந்தைகளுடனும் இருத்தலையே குறித்தாலும் சமுதாயவியலின்படி

குடும்பத்தில் குழந்தையே மிக அவசியம். மனைவியுடன் இருக்கும் வாழ்வானது தேனூற்றாக இனிக்கும் என்கிற கவிஞர்,

*அங்கைஎன துடல்தழுவ, அலைபுரளும்*
*இன்பத்தில் அகம்ம றந்து*
*செங்கொவ்வை யிதழவிழ அத்தான் என்றாள்*
*வாழ்வு தேனூற் றென்றேன் (ப. 421)*

எனக் கூறி மகிழ்கிறார். அத்தேனூற்றாக இனிக்கும் வாழ்வில் குழந்தை யின்பம்,

*பொற்பெடுத்து வடித்தசிலை, புனையவிய*
*லாக்கவிதை, புனிதக் காதற்*
*சிற்பிதரும் கலைப்புதையல், தென்றலென*
*அசைந்துவரும் செல்வம் என்சேய்*
*எற்கதிர்பட் டொளிர் மாவின் இளந்தளிர்நேர்*
*உடல், வாரி எடுத்த ணைத்தேன்;*
*கற்கண்டுச் சுவைவாயால் அப்பாஎன்றான்*
*வாழ்வு கனிச்சா றென்றேன் (ப. 421)*

எனச் சுவைமிகுந்த குடும்ப வாழ்வைக் குறிப்பிடுகிறார்.

### 7. குடும்பச் சிறப்பியல்புகள்

கணவன் மனைவி குழந்தை என்பவரால் ஆக்கப்பட்ட அமைப்பில் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே காணப்படும் நிலைத்த உறவுதான் குடும்பத்தின் முக்கிய இயல்பாகும். அத்தகு நிலைத்த உறவில்,

*........................................ வையம்*
*தூய்ப்பன அனைத்தும் தன்னுள்*
*பூணுமென் காதல் நங்கை*
*பொருந்திய வாழ்வில், யாதும்*
*காணுதல் நினைத்தல் கேட்டல்*
*கடந்த ஓர் வீட்டினைக் (ப. 428)*

காணுகிறார் கவிஞர். ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவு, அனைத்து நாட்டு நாகரிகத்திலும் காணப்படும் ஒன்றே. இந்த உறவு இல்லாமல், குடும்பம் எனும் அமைப்பே ஏற்படாது. பலவகைப்பட்ட திருமண முறைகளிலும் கணவன் மனைவிக்குமிடையேயான உறவை எழிலுணர்வுடன் நிலைத்த ஒன்றாகத்தான் கருதப்படுகிறது. அதனால்தான்,

*சாதல், மற்றது தவிர்தல், வேண்டுவ*
*ஈதல் யாவையும் இன்றுன் வயத்ததால்!*

*மாதர் பொன்னுடல் வளங்கள் காட்டினை!*
*காதல் காட்டினை! கனவும் மிஞ்சினன்!* (ப. 430)

என்று கூறுகிறார். திருமண உறவுமுறையே குடும்ப அமைப்பை ஏற்படுத்துகிறது. குழந்தைகளின் வளர்ப்பு முறைக்கும் திருமணத்தால் ஏற்படக் கூடிய நிலைத்த ஆண் பெண் உறவுமுறையே தேவையாக உள்ளது. கணவனுக்கும் மனைவிக்குமிடையே,

*நஞ்சிருக்கும் நாவினர்தம் குசுகு சுப்பில்*
*நலிகின்ற சந்தையுற வன்று; கண்ணே,*
*நெஞ்சிருக்கும் வரையிலும் நீநிறைந் திருப்பாய்*
*நினைவிருக்கும் காலமெலாம் நிலைத்து நிற்பாய்* (ப. 443)

கவிஞர் கூறுவதுபோன்று நீடித்த உறவு இல்லையெனில் வளரும் குழந்தை எல்லாவிதத்திலும் பாதிக்கப்படும். எனவே, குடும்பத்திற்கு ஆண் பெண் இணைந்த கணவன் உறவு தேவையாகிறது. குடும்ப உறவினர்களிடையே காணப்படும் இரத்த உறவு குடும்பத்தின் மற்றுமொரு முக்கியச் சிறப்பியல்பாகும். ஒரு குடும்பத்தின் உறுப்பினர், மரபுவழி வந்தவர்களே. குடும்பத்தில் தத்து எடுக்கப்பட்ட பிள்ளைகளுக்கும் பெற்றோருக்குமிடையில் உள்ள உறவு சட்டபூர்வமாய் இருந்தாலும் இரத்தவழி உறவில் காணப்படும் பாசம் அவ்வுறவிலிருக்காது. இரத்தவழி உறவில்தான் அன்பும் பாசமும், நெருக்கமாகவும் வலுவாகவும் அமைந்திருக்கும். அதனால்தான்,

*பாசமிலாது ஒரு பார் உளதேல் அது பாலை* (ப, 450)

என்று பாடிய கவிஞர்,

*நேசமும் பாசமும் கொண்டவர் பிரிந்தால்*
*அது முள்ளாக உறுத்தும்* (ப. 450)

என்கிறார். இரத்தவழி உறவில் காணப்படும். தாயின் பாசத்தைக் குறிப்பிடும்பொழுது,

*.................................... தன்சேய்*
*மதிநலம் பெற்றுயர்கவென நினைத்தாள்; அந்த*
*வரத்திற்கு வாழ்நாளைத் தத்தம் செய்தாள்.*
*சிறுகாசு சிறுகாசு சேர்த்துச் சேர்த்துச்*
*சிறுசுருக்குப் பைமுடிப்பாள். விடுமுறைக்கு*
*வரும் நாளைப் பார்த்திருப்பாள். திரும்பும்போது*
*வாங்கிஎதும் உண்ணென என்கையில் வைப்பாள்.*
*சந்தைக்குக் கால்நடையாகச் செல்வாள். வாங்கும்*
*சாமான்கள் தலைமீது சுமந்து மீள்வாள்,*

*எந்தைக்கும் சொல்லாது சேர்த்த காசில்*
*எனக் கென்று சிலபொருள்கள் எடுத்திருப்பாள் (ப. 644)*

என்றும்,

*பசியென்னத் தாகமெனப் பாராள்; ஆறப்*
*பச்சைமர நிழல் தேடாள், துன்பம் கண்டு*
*மசிதலிலாள்; மனம் தளராள், எனது கல்வி*
*வாழ்வொன்றே தவமாக வாழ்ந்திருந்தாள் (ப. 645)*

என்று தாயின் பாசஉணர்வைக் கூறுகிறார். பெற்றவர்கள் குழந்தை யிடத்துக் காட்டும் பாசத்தைப் போன்றே குழந்தையும் பெற்றோரிடத்துப் பாசம் காட்டும்பொழுதுதான் பாசத்தின் பரிமாணம் முழுமைபெறும். குழந்தைகள் பெற்றோரிடம் காட்டும் பாசத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது தன்னையே சான்றாக நிறுத்தி,

*என்னை வளர்த்தாரை இரவு பகலாகத்*
*தன்னை அழித்தெனக்குத் தடம் சமைத்த தந்தையினை*
*அன்னை யெனும் பெயரின் அழியா காவியத்தை*
*மின்னை அதனொளியின் விரைவொத்த வாழ்வினரை*
*எண்ணி யழிகின்ற இதயமே காலமகள்*
*புண்ணின் துயர்மெள்ளப் போக்குவதும் பொய்யோ*

என்று காட்டுகிறார். உடன்பிறந்த தங்கை புற்றுநோய் தாக்கப்பட்டாள். அந்நிலையில் அவளை நினைத்து,

*கண்கலங்க நீவருந்தக்*
*காணுவதை ஆற்றேன்யான்*
*மண்படர நின்மேனி*
*மறையுநாள் நிற்பேனோ?*
*தந்தை யிறந்தார், பின்*
*தாயிறந்தார், நான்பொறுத்தேன்*
*பிந்தியவள் முந்திஎனைப்*
*பிரிவதையும் தாங்குவனோ? (ப. 642)*

என்று, பாசத்தைக்கொட்டி வேதனையுறுகிறார். தன்தம்பியின் உடல் நலிவைக் கண்டு பாசத்தைக் காட்டும் கவிஞர்,

*உன்கண்ணின் நீர்துடைப்பேன்; உயிருடன்*
*ஊனுடன் ஒன்றி நிற்பேன்;*
*என்கண்ணின் ஆவதெல்லாம் நின்முகம்*
*இன்புறக் காண்பதடா (ப. 650)*

என்றும், அத்தம்பி பேசும்திறனை இழந்தபோது,

*பேசும்திறன் இழந்தாய் உன்கண் எனைப்*
*பிழிந்து வாட்டுதடா!*
*மாசுமறு வறியாய்; புனிதன் நின்*
*வாழ்விலும் சோதனையோ* (ப. 650)

என்று குறிப்படும் கவிஞரின் வரிகளால் இரத்த உறவு உள்ளவர்களின் பாசத்தை உணரமுடிகிறது. அதனால்தான், இவ்வுலகில் தோன்றியவர்கள் அனைவரும் பந்தமின்றி இன்பம் விழைக என்கிறார்கள். இதனை,

*சிந்தனை தன்னை என்றும்*
*சிறையிடோம்; இறைவன் முன்னும்*
*சொந்தமென் றெமது நெஞ்சின்*
*சுதந்திரம் காத்து நிற்போம்;*
*பந்தமொன் றறிந்தி டாத*
*பார்வையின் கதிர்கள் காட்டும்*
*விந்தையிற் கோடி யின்பம்*
*விழைவதெம் வேள்வி யம்மா* (ப. 163)

என்று கூறுகிறார். ஒரே இடத்தில் ஒன்றாக வசிப்பது குடும்பத்தின் மற்றுமொரு சிறப்பியல்பு. குடும்ப உறுப்பினர்கள் வெவ்வேறு இடத்தில் வசிக்காது ஒரே இடத்தில் வசித்தால்தான் குடும்பம் என்பதின் பொருள் உறுதிப்படும். நாடோடி இனத்தவர்கள்கூட ஒரே இடத்தில்தான் வசிப்பார்கள்.

குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து வாழ்வதை,

*மழலையிலே என்குரல்கே ளாயோ? காதல்*
*வாள்விழியில் என்ஒளி கண்டிலையோ? இல்லக்*
*கிழவியரும் துணைவரும்நெஞ் சொன்றி நின்று*
*கேள்சூழக் குலவிமகிழ் மனைகள்* (ப. 160)

என்று போற்றி மகிழ்கிறார். இவ்வாறான பல்வகைச் சிறப்பியல்புகளைக் கொண்ட குடும்பமே மனித வரலாற்றுச் சமுதாயத்தில் காணப்பட்ட முதல் சமுதாய அமைப்பு ஆகும். முற்காலத்தில் மக்கள், அமைப்புகளற்ற சிறுசிறு குடும்பங்களாக வாழ்ந்தனர். ஆனால் காலம் செல்லச் செல்லச் சமுதாய உறவு அடிப்படையில் குடும்ப அமைப்பாக உருவெடுத்தது. குடும்பங்கள் பொதுக்குழுமத்தைத் தோற்றுவித்துப் பின்னர் நாடு என்பது தோன்றியது. எனவே ஒரு நாட்டின் தோற்றத்திற்குக் குடும்பம் எனும் சமுதாய அமைப்பே மூலகாரணமாக உள்ளது என்பது தெளிவாகும். இதனை,

*தாரகைகள் பூத்தொளிரும்*
*சாலப் பெருவெளியில்*
*ஊரமைத்து வாழுவதற்கு*
*உளம் விழையும் மாண்புடைய*
*மனித குலத்தினரின்*
*மாசு மறுவற்ற புனித நிலையே* (ப. 434)

குவலயத்துக் குடும்பம் ஆகும் என்கிறார் குலோத்துங்கன்.

**8. அரசு : இயக்கமும் முன்னேற்றமும்**

எந்த ஓர் இயக்கமும் உருவாகுவதற்கு அவ்வப்போதைய நிலைமை பற்றிய அதிருப்தியே அடிப்படையாக அமைகிறது. தன்னுடைய எதிர்பார்ப்புக்குப் பரவலான ஆதரவு கிடைக்குமானால் அது இயக்கமாக உருவெடுத்து அதன் காரணமாகப் பல நிறுவனங்கள் உருவாகி இருக்கின்ற நிலைமையில் மாற்றமும் வளர்ச்சியும் அடைவது ஓர் இயக்கத்தின் குறிக்கோளாகும். முன்னேற்றப்பயணத்தில் ஓர்இயக்கம்,

1. பொருளாதாரம்
2. அரசியல்
3. சமுதாயம்

ஆகிய மூன்று வகையான மேம்பாட்டிற்குத் துணைபுரியும். பொருளாதார முன்னேற்றம்தான் பொதுவாக நம்மால் பேசப்பட்டு அதற்கு அளவுகோலாக வாழ்க்கைத்தரம், தனிநபர் வருமானம், மொத்த தேசிய உற்பத்தி போன்றவை உருவாக்கப்பட்டன. சமீப காலங்களில்தான் மானிட மேம்பாட்டிற்குப் பொருளாதார வளர்ச்சியன்றிச் சமுதாய, அரசியல் முன்னேற்றமும் தேவை என்று உணரப்பட்டது.

அரசியலமைப்பு என்னும் நிலையில்,

*அரசு என்பது சமுதாயத்தின் ஒரு முக்கிய அங்கமாக விளங்குகிறது. அரசு என்பது குடும்பம் கிராமம் ஆகியவற்றின் கூட்டிணைப்பு*[26]

என்கிறார் அரிஸ்டாடில். அக்குடும்பங்களும் கிராமங்களும் முறைபடுத்தப்பட்ட- நெறியுடைய முழுமையான வாழ்க்கையைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் என்று அவர் மேலும் கூறுகிறார். ஆனால், தற்காலத்தில் அரசு என்பது வெறும் கிராமங்களை மட்டும் குறிக்காது. லாஸ்கி என்னும் சமுதாயவியல் அறிஞர்,

*அரசு என்பது எல்லைக்கோடுகளைக் கொண்ட சமுதாயம், சமுதாயத்தின் அனைத்து அமைப்புகளைவிட அதிக ஆற்றலும் சக்தியும் வாய்ந்தது*[27]

என்று கூறுகிறார். இவரின் விளக்கமே பெரும்பாலோரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

அரசு என்பது நாகரிகம் அடைந்த

*ஒரு சமுதாயத்தின் அரசாங்க அடிப்படைச்சட்டம், குடிமக்கள், மக்கள் ஒருவரோடு ஒருவர் கொண்டுள்ள தொடர்புகள், இவற்றை வகுத்துக்காட்டும் நீதிகள் சமுதாய நிலைகள் அவற்றின் குறிக்கோள்கள் என்பன பற்றிக் கூறும் ஓர் அறிவுத்துறையாகும்*[28]

என்றும் கூறப்படுகிறது. இவ்வாறு சமுதாய நலன் கருதி அதனை அடக்கியாளும் அதிகாரம்பெற்ற அரசு இன்று தன்னிச்சைப்படி செயல் படுவதைக் குலோத்துங்கன் தன் கவிதைகளில் பல இடங்களில் சுட்டிக் காட்டுகிறார். தற்கால அரசுகளின் செயல்பாடுகளை,

1. அரசின் கட்டாயச் செயல்கள்
2. தன்னியல்பான செயல்கள்

என இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கட்டாயச் செயல்களில்,

1. பிறநாட்டுப் படையெடுப்பிலிருந்து நாட்டைக் காத்தல்
2. உள்நாட்டுப் பாதுகாப்பு
3. குடிமக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்தல்
4. நீதி

என்பன அடங்கும்.

தன்னியல்பான செயல்களில்,

1. கல்வி
2. நலவாழ்வு
3. திக்கற்றோர் மற்றும் ஊனமுற்றோர் பாதுகாப்பு
4. பொதுநலப்பணி அமைப்புகளை ஏற்படுத்தல்
5. சமுதாயப் பொருளாதார முன்னேற்றம்
6. தொழில் மற்றும் வணிகத்தை ஊக்குவித்தல்
7. தொழிலாளர் நலன்
8. இயற்கை வளங்களை முறையாகப் பயன்படுத்தல்
9. பொழுதுபோக்கு வசதிகளைச் செய்தல்

ஆகியவற்றைக் கொண்டுள்ளது. தான் வாழும் காலத்தையும் சமுதாயத்தையும் தனது இலக்கியப்படைப்பில் காட்டும் படைப்பாளி, அரசியலை வெளிப்படுத்தாமல் செல்லமுடியாது. சமுதாயத்தின் முக்கிய நிறுவனங்களில் ஒன்றான அரசு மக்களிடையே ஒற்றுமையையும் தோழமையையும் வளர்த்து, நல்வாழ்விற்கான சூழ்நிலைகளை உருவாக்கிக் கொடுக்க சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையது. ஆதலால், ஆங்காங்கே இன்றைய அரசியலில் காணப்படும் குறைகளைக் கவிஞர் குலோத்துங்கன் சுட்டிக்காட்டுகிறார்.

*அரசியல் கட்சிகட் களவிலை; கழனியில்*
*பரவும் களைபோல் பரவின, கொள்கையின்*
*வேரோ விழுதோ விரியும் கிளையோ*
*தூரோ இல்லாத் துச்சப் புதர்களில்*
*வதியுநர் தலைவராய் வலம்வரும் காட்சியும்*
*துதியுடன் அவர்பின் தொடர்வோர் கூட்டமும்*
*நாளும் வளர்வது நடைமுறை யான(தே)து.* *(ப. 387)*

என்றும்,

*ஆளும் தகுதிஓர் அற்பப் பொருள்போல்*
*பொருண்மை யொன் றில்லாப் பொந்துப் பந்தெனும்*
*குறுமையர், வானில் கொடியெனப் பறத்தல்*
*கண்டென் நெஞ்சம் கலங்கினன்; அரசியல்*
*தொண்டு செய் துயர்ந்து தோன்றிய கட்சிகள்*
*பிளந்து பலவாய் பிரிந்து தம்வலி*
*இழந்து நின்றிடும் எளிமைஏன்? கல்வியில்*
*வளர்ந்த மாநிலம் மய்யத் தாட்சியில்*
*தளர்ந்து நிற்பதேன்? தாழ்வதேன்?* *(ப. 387)*

என்றும் குறைகளைச் சுட்டிக்காட்டுகிறார்.

*குடியரசு நாடு, இந்நாட்டு மக்களால் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு மக்களின் நலனுக்காக மக்கள் உறுப்பினர்களால் ஆளப்படும் அரசு.*[29]

நம் நாட்டில் மக்கள் தங்கள் வாக்குரிமையால் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் குடியாட்சி முறையே நிலவுகிறது. மக்களால் தேர்ந்தெடுக்கும்வரை ஆளும்கட்சியின் குறைகளைச் சுட்டிக்காட்டி, மக்கள் நலனே தம்குறிக்கோள் எனக்கூறிப் பதவியை அடைந்தவுடன் மக்களையும் வாக்குறுதிகளையும் மறந்துவிடுகின்றனர்.

*மக்களிடையே ஒற்றுமையையும் தோழமையையும் வளர்க்கவும் மற்ற பொதுத் தேவைகளுக்கும், ஒருவருக்*

*கொருவர் உதவிபுரிந்து கொள்ளவும் மனிதன் முழுமை யடைவதற்கு இயல்பான சூழலை ஏற்படுத்திக்கொள்ளவும் இயன்ற வழிகளில் நல்வாழ்க்கை அளிப்பதே அரசின் குறிக்கோளாகும்.*[30]

ஆனால் இன்றோ குறிக்கோளற்ற அரசுகள் ஆள்வதால் அறம் மறம் என்ற வேறுபாடின்றி அறம் அழிய மறம் செழித்தோங்கியுள்ளது. தலைவர்களே ஒத்தகருத்து இல்லாதவர்களாக இருக்கும்பொழுது மக்கள் எப்படி ஒன்றுபடுவர் என்பதை,

*வீடுதீப் பிடித்து வெந்திடு நேரமும்*
*கூடிஅங் கங்கவர் குழுவெனப் பிரிந்து*
*ஒலிஎழுப் புவர்;பின் ஒன்றுமற் றொன்றெனப்*
*பழிசுமத்துவர்; தீ பரவுதல் தடுத்து*
*அணைக்க முந்திடார்; ஆயிரம் சண்டையின்*
*கணக்குத் தீர்ப்பதில் கவனம் நாட்டுவர்!*
*நோயுற் றவனுயிர் நுடங்கும் வேளையில்*
*ஆயுர்வே தமா அல்லோ பதியா*
*சித்தமா, மருந்தில் சிறந்தது எதுவெனத்*
*தத்துவம் பேசச் சபையைக் கூட்டுவர்*
*வாதமும் பட்டி மன்றமும் பேச்சும்*
*வேதளம் தேற்பர்* (ப. 388)

என்று ஏளனம் செய்கிறார்.

*ஆக்க நல அரசின் கொள்கை மக்களுக்குப் போதிய அளவு நலத்தைப்பெறச் செய்து மனநிறைவுடன் வாழச் செய்வதாகும்.*[31]

எனவே மக்களுக்கு அரசு வழங்கும் பல சலுகைகளைச் சில தலைவர்கள் தங்கள் சுயநலத்திற்காக பயன்படுத்துகின்றனர். இவர்களால் அரசுமட்டுமல்ல நாடும் தாழ்ந்துவிடும் என்பதை,

*நிலமும் நீரும் நிறைந்து காணினும்*
*வளமென வையகம் வகுத்த யாவையும்*
*நிரம்பி வழிந்து நிற்பினும், இயற்கை*
*வரம்பும் இகழ்ந்து வழங்குவ தாயினும்*
*பயனுள அனைத்தும் படைத்து அளிக்கினும்*
*நயனில; இந்த ஞாலத்து உயர்வுகள்*
*தலைமை யின்தரத்தின் தகவால் அமைவன.*
*தலைமை தாழுமேல் தரணியே தாழும்* (பக். 396 - 397)

என்கிறார். எனவே ஞாலத்தில் நம் உயர்வு வேண்டுமேல் ஏற்ற தலைமை நமக்குத் தேவை என்கிறார். இதனை,

*.................... .................... உளுத்துப் போன*
*கலம் நமது நிர்வாகம், கொள்கை என்னும்*
*கண்ணில்லார் செலுத்து வரேல், கரையைச் சேர்ந்து*
*நலம்சிறிது நாம்காண்ப தென்று? ஏற்ற*
*நாவாயும் மாலுமியும் நமக்குத் தேவை* (ப. 527)

மக்களாட்சியில், ஒரு நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பவர்கள் அரசியல் தலைவர்களே என்ற நிலை ஏற்பட்டுள்ளது. பொதுமக்களாகிய வாக்காளர்கள் அரசியலில் இருந்து ஒதுங்கிநிற்பதும், புறக்கணிப்பதும், அலட்சியப்படுத்துவதும் பிரச்சினைகளைத் தீர்க்காது. தேர்தல்களின் விளைவுகட்கு வாக்களித்தவர்கள்தான் காரணம் என்பதில்லை. வாக்களிக்காதவர்களின் அலட்சியம், அறியாமை ஆகியவையும் காரணங்களாகின்றன. பல தேர்தல்களில் 60% மக்கள் வாக்களித்து, மொத்த வாக்குகளில் 35%; பெற்ற கட்சி பெரும்பான்மை பெற்று ஆட்சிக்கு வருகிறது. வாக்களிக்காத 40% மக்கள் அனைவரும் ஒரு முனைப்பாக நின்றிருந்தால் வேறொரு ஆட்சி அமைத்திருக்கலாம். அதைத்தவிர்த்து 35% பெற்றவர்களை ஆட்சியில் அமர்த்திய பொறுப்பு வாக்களிக்காத இந்த 40% மக்களையேச்சாரும் இந்த நிலையை மாற்றுவதற்கு மக்களும் தமது சக்தியில் ஒரு நம்பிக்கையை உருவாக்க வேண்டுமென்பதை,

*நல்லவர் தலைமை யொன்றே*
*மானுடர் செல்வம்; நம்மை*
*வளர்த்திடும் செல்வம்; மாந்தர்*
*ஊனுடல் கடந்து வாழ்வை*
*உயர்த்திடும் செல்வம்; நாளும்*
*தானுயர் நிலைஎண்ணாது,*
*தலைமுறை வளர்த்து நிற்போர்*
*வானுயர் மனிதர்; அந்த*
*வளமுள தேயம் வாழும்* (பக்.524 - 525)

என்று உறுதிபடக்கூறுகிறார். நமது பண்பாட்டில் ஓர் அடிப்படைக் குறைபாடு உண்டு. நல்லவர்கள் என்போர் நன்மை செய்பவர்கள், தீமை செய்யாதவர்கள் என்பது சமுதாயத்தின் பார்வையாகும். நல்லவர்கள் என்பதற்கு இந்த இலக்கணம் போதாது. நல்லவர்கள் தீமையை எதிர்க்கவேண்டும். இதனால்தான் பாரதி,

*பாதகம் செய்பவரைக் கண்டால் நீ*
*பயம் கொள்ளலாகாது பாப்பா*
*மோதி மிதித்துவிடு பாப்பா*[32]

என்று கூறுகிறார். சான்றோர் இருக்கும் ஊரில் சரிபார்த்து நடக்க அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள் என்ற காரணத்தினால்தான், தன் கணவன் கொலையுண்டது கேட்டு, வெகுண்டெழுந்த கண்ணகி,

*சான்றோரு முண்டுகொல்; சான்றோரு முண்டுகொல்*[33]

என்று கேள்வி எழுப்புகிறாள். நமது சமுதாயம் இன்று தீமையை வேடிக்கை பார்த்து நமக்கேன் வம்பு என்று நினைத்து ஒதுங்குகிறது. இதுகண்டு மனம் பொறுக்காத பாரதியார்,

*நீண்ட கருங்குழலை நீசன் கரம்பற்றி*
*முன்னிழுத்துச் சென்றான்; வழிநெடுக மொய்த்தவராய்*
*என்னே கொடுமை இதுவென்றே பார்த்திருந்தார்*[34]

என்று வெதும்புகிறார். நம் பாரம்பரிய நம்பிக்கையான, நன்மை நசிய தீமை எப்பொழுதெல்லாம் வலிமை பெறுகிறதோ அப்பொழுதெல்லாம் ஆண்டவன் அவதாரமெடுத்துத் தீமையை அழித்து நன்மையை நிலைநாட்டியதை இன்று நடைமுறையில் காணமுடியாது. ஒவ்வொரு நாளும் காலையில் செய்தித்தாள்களைப் படிக்கும்போது நாட்டில் நடைபெறும் தீய செயல்கள், ஏமாற்றுதல்கள், துரோகங்கள், ஊழல்கள் போன்றவற்றைக் காணும்பொழுது நம் கண்கள் குளமாகின்றன. இதனை/

*தீமையை எதிர்த்து நிற்கும்*
*செம்மையும் திறமை மிக்க*
*தூயவர் ஆட்சி தேடும்*
*சூழலும் பரவவேண்டும்* *(ப. 536)*

என்று குலோத்துங்கன் விரும்புவதைக் கற்றவர்களும், அறிஞர்களும் இதைச் செய்யவேண்டும்.

**9.** நல்லாட்சிக்குக் கட்டாய வாக்கு அளித்தல்

இந்தியா விடுதஸ்பெற்று 57 ஆண்டுகள் கடந்தநிலையில், குடியரசுத் தத்துவத்தில் அரைநூற்றாண்டளவு பயிற்சி பெற்று, 10 தேர்தல்களைக் கண்டுள்ளது. தேர்தலின் முக்கியத்துவத்தை மக்கள் ஓரளவு அறிந்துள்ளனர். என்றாலும், நல்லது கெட்டது காணும் திறன் படைத்தவர்கள் யார் என்பதைப் பகுத்தாயாது, சமயப்பற்று போலவும் சாதிப்பற்று போலவும் அவர்கள் சார்ந்திருக்கும் கட்சிப்பற்று அவர்களுடைய முடிவை நிர்ணயிக்கின்றது. அவர்களிடம் எவ்வித

வாதமும் எடுபடாது என்பதால், அவர்களை அப்படியே ஏற்றுக் கொள்வதுதான் முறையாக அமையும். அவர்களை விடுத்து, மற்றவர்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். மத்தியதர வகுப்பினர் நாட்டில் மிகுதியாக உள்ளனர். பலமும், பலவீனமும் இம்மத்தியதர வகுப்பினரிடமே உள்ளது. மக்களுக்கு வழிகாட்டுபவர்களும், ஏய்ப்பவர்களும் பொறுப்புணர்வோடு நல்லதை வளர்த்துத் தீயதைத் தீய்க்க வேண்டும் என்று செயல்பட்டால் நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்க முடியும். அதற்கு அவர்கள்,

1. வாக்குச்சாவடிக்குத் தவறாது செல்லல்

2. தனது மனச்சாட்சிக்குத் துரோகம் செய்யாது வாக்களித்தல்

என்ற இரண்டு கடமைகளைச் செய்யவேண்டும். குடியரசு ஆட்சி முறையை ஏற்றுக்கொண்டுள்ள நாம், மக்கள் பிரதிநிதிகளை நம்பித்தான் எதிர்காலத்தை அமைத்துக் கொள்ளவேண்டும். இதற்கு மாற்று எதுவுமில்லை. வேட்பாளர்களின் வாழ்க்கை எப்படியிருக்க வேண்டும் என்பதை மக்களிடம் கேட்டு, தனிநபர் விருப்பத்திற்கேற்ப யாரும் போட்டியிடுபவர்களைத் தேர்ந்தெடுப்பதில்லை. எனவே, போட்டி யிடுபவர்களில் நாம் எதிர்பார்க்கும் தகுதியுடைய ஒருவரைத் தக்கார் தகவிலார் என்பதை எடைபோட்டுத் தேர்ந்தெடுக்க வேண்டியது சமுதாயக் கடமை. அதைச் செய்யத்தவறுவது சமுதாய விரோதச் செயலாகும். ஒரு குடிமகன் தன்னுடைய சமுதாயத்திற்காகச் செய்ய வேண்டிய புனிதமான கடமை வாக்களிப்பது ஆகும். ஆயினும் போட்டியிடும் வேட்பாளர்களில் பலர் அரசியல் தாழ்ச்சிக்குக் காரணமாக இருக்கிறார்கள். நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்னரே காந்திமகான், சுதந்திரம் கிடைத்தவுடன் காங்கிரஸ் கட்சியைக் கலைத்துவிட வேண்டும் என்றார். இராஜாஜி, அரசியலிலும் தேர்தலிலும் வரும் கொடுமைகளை நினைத்துப் பார்த்து 1922ல் தனது நாட்குறிப்பில்

> *சுதந்திரம் வந்தவுடனோ அல்லது அதன்பின் சற்று நீண்டகால அளவிலும்கூட இப்பொழுது இருப்பதைவிட நல்ல ஆட்சியையோ அல்லது இப்பொழுதினும் அதிக மனமகிழ்ச்சி தரும் சூழ்நிலையையோ அது தந்துவிடாது என்பதை நாம் உணரவேண்டும். சுதந்திரம் வந்தபின் வரும் தேர்தல்கள், அவற்றைத் தொடரும் ஊழல்கள், அநீதிகள், செல்வத்தின் வல்லமையைப் பயன்படுத்தி இழைக்கப்படும் கொடுமைகள், திறமையில்லாத அரசு நிர்வாகம் ஆகியவற்றின் விளைவுகள் சுதந்திரம் கிடைத்தவுடன் நமது வாழ்க்கையை நரகத்திற்கு ஒப்பானதாக்கிவிடும். மக்கள் கணிதுமான நீதியும்,*

*திறமையும், அமைதியும், நாணயமும் இருந்ததான பழைய அந்நியர் ஆட்சிபற்றி நினைத்துப் பார்க்கத் தொடங்கிவிடுவார்கள். அடிமைத்தனத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொண்டோம்; நமது மானம் காக்கப்பட்டது என்பதுதான் நாம் அடையும் பயன்*[35]

என்று எழுதியுள்ளார். இராஜாஜி இப்படி நடக்கும் என்று அச்சப்பட்டார். அவ்வச்சம் சிறிதுகாலம் மட்டும் இருக்கும் என்று நம்பினார். ஆனால், அரசியல் தாழ்ந்துகொண்டே போகும் என்று எதிர்பார்த்திருக்கமாட்டார். அவர் தனது குறிப்பில் Corruption, Inefficient Administration, Injustice போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளாரே தவிர Criminal என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. அப்பின்னணியினர் அரசியலில் நுழைவார்கள் என்று அவர் எதிர்பார்த்ததற்கான அடையாளம் சிறிதும் அக்குறிப்பில் இல்லை. ஆனால், இன்று அதுதான் அரசியலில் ஆட்சிசெய்கிறது என்பதை,

*வாழ்வொடு தொடர்ந்து நாளும்*
*வளர்ந்திடத் தவிர்ந்த யாவும்*
*தாழ்வது தவிர்ப்ப தில்லை;*
*தரணியின் விதியு மஃதே*
*பாழ்நிலை அடைவ தொன்றும்*
*பழையன ஆவ தொன்றும்*
*சூழ்நிலை உணர்ந்து காவாத்*
*தொய்வினால் விளைவ தம்மா* (பக். 162 - 163)

என்று பொதுவான முறையில் கவிஞர் குலோத்துங்கன் குறிப்பிடுகிறார். தேர்தல்கள், ஊழல்கள்பற்றிக் கூறும்பொழுது தலைவர்கள் என்பவர்கள் நாட்டை உயர்த்த முயலமாட்டார்கள் என்பதை,

*உயர்ந்தன படைக்கும் கொள்கை*
*கடைப்பிடித்தறியார்; மற்றோர்*
*கருத்தினில் களங்கம் காண்பார்*
*சொந்தங்கள்தேடி, மண்ணில்*
*துணைவலி பெருக்கி, மேலும்*
*பந்தங்கள் உறுதிசெய்து*
*பயன்பெறும் பாதை தேடார்"* (பக். 579 - 580)

என்று கூறுகிறார். மேலும் அரசியல்வாதிகளின் தன்னலத் தாண்டவங்களை

*....... மேருவெனும் மாண்புடையர் ஆண்டநிலம்*
*உப்புக்கும், கூழுக்கும், உடுத்துகிற கந்தைக்கும்*

*தப்பென் பதாயிரமும் தயங்காது செய்கின்ற*
*சிறுமையரும் ஆட்சிசெயும் தேயமெனும் தாழ்ந்தநிலை*
*பெறும் எனவும் கண்டனையோ? பிழைசெய்தும் ஊன்வளர்த்தல்*
*தருமமெனும் கொள்கையினர் தவவேடம் பூண்டுவலம்*
*வருவர் என்றுகண்டனையோ மக்கள்யாம் அன்றொருநாள்*
*போட்டகணக் கத்தனையும் பொய்த்ததுவோ? (ப. 581)*

என்று படம்பிடித்துக் காட்டுகிறார். இதுமட்டுமல்லாது பாரதநாடு என்னும் மேடையில் தலைவர்கள் எனும் தன்னலத்தவர்கள் நாடகம் ஆடுவதை,

*வண்ண விளக்குகள் கோடியடா - விரி*
*வானமும் நாணுறும் காட்சியடா - நம(து)*
*எண்ணம் கடந்துள மேடையடா - அதில்*
*எங்கும் செயற்கையின் ஆட்சியடா*

*ஒன்றன்பின் ஒன்றென நாடகத்தார் - கலை*
*ஓவியம், காவியம் காட்டுகிறார் - பெரும்*
*மன்றம் நிறைந்து வழியுதடா - அது*
*மந்தையின் மிஞ்சிய கூட்டமடா*

*குள்ளமனிதர்கள் தோன்றுகிறார் - அவர்*
*கொள்கையும் திட்டமும் கூறுகிறார் - பெருங்*
*கள்வர்கள் மாற்றுரு பூண்டு வந்தார் - வெளிக்*
*காட்சியில் தேவரும் தோற்றிடுவார் (ப. 582)*

என்று இன்றைய அரசியல்வாதிகள், அரசியல் நடத்துவது திருடர்கள் தேவர்களைப் போலக் காட்சியளிப்பதாகச் சாடுகிறார்.

*இராஜாஜி அவர்கள் நாட்டுச் சுதந்திரத்தின் ஆரம்ப காலத்தில் என்ன நடக்கும் என்று கருதினாரோ அதைக்கடந்த நிலையில் ஊழல், திறமையில்லா ஆட்சியைத் தாண்டி குற்றவாளிகள் நடத்தும் குடியரசாக நடைபோட்டுக் கொண்டுள்ளோம். 2002ஆம் ஆண்டு பிப்ரவரியில் நடந்த உத்திரப்பிரதேச தேர்தலே இதற்குச் சான்றாக அமையும். தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்கள் 403. இவர்களில் கிரிமினல் வழக்குகளில் சம்பந்தமுடையவர்கள் 122 பேர். இவர்கள்மீது கொலை, கொள்ளை, கற்பழிப்பு ஆள்கடத்தல் வழக்குகள் உள்ளன. பணத்துக்காகக் கொலை செய்பவர் என்று பெயர்பெற்ற தனஞ்சயசிங் 18 கிரிமினல் வழக்குகளோடு தேர்தலில் நின்று வெற்றிபெற்றுள்ளார். இவரை எதிர்த்துநின்று தோற்றுவிட்ட உமாகாந்த்யாதவ் மீது உள்ள கிரிமினல்*

*வழக்குகள் 43. இவர்கள் இருவரும் அரசியல் கட்சிகளால் நிறுத்தி வைக்கப்பட்டவர்கள்.*[36]

இவர்களுடைய ஆசை,

*சிம்மா தனம்கண்ட துண்டோ - அஃது*
*திருவுள்ள நிறைவுள்ள நாற்காலி யன்றோ?*
*சும்மா கிடைத்திடுவதில்லை - மக்கள்*
*தொண்டர்எம் உரிமைக்கிங் களவொன்று மில்லை*
*நாற்காலி வாழ்கவெனப் பாடு - அஃது*
*நமதன்றி வேறொருவர்க்(கு) இலையென்று ஆடு*
*தோற்காது வெல்லுவதெம் திட்டம் - எங்கள்*
*சொல்லுக்கு மாறாக தும்முவதும் குற்றம்*

என்கிறார். இத்தகையது என்றும் அவ்வாட்சியில் மாற்றுச் சொல்கூட இல்லை. தும்முவதுகூடக் குற்றமாக்கப்படுகிற காட்டாட்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர். இத்தகையவர்களைப் பற்றி,

*கைதாகின் விலங்கிவரைக் கண்டு நாணும்*
*கடையர்களில் கடையர் இனம் ஆட்சி செய்ய*
*வழிவகுத்துத் தருவதற்கா மக்கள் ஆட்சி!*
*வையகத்தில் இன்றுவரை மனிதர் அஞ்சும்*
*பழியெதற்கும் அஞ்சாத மரபை நாட்டில்*
*பரப்புவர் ஆள்வதற்கா மக்கள் ஆட்சி*

என்று கடுமையாகச் சாடுகிறார். ஊழலால் வளர்ந்தவர்கள், மோசடிக்காரர்கள், வன்முறையாளர் ஆகியோரின் மக்கள் விரோதக்கூட்டு ஆங்காங்கே தளிர்விட்டிருக்கிறது. சிலவிடங்களில் அது தழைத்தும் இருக்கிறது. இதன் விளைவாக முந்நாட்களில் காவல்நிலையங்களுக்குப் பாதுகாப்பு வேண்டிச் சென்றவர்கள், இன்று, இக்குழுக்களின் தலைவர்களிடம் சரணடைந்து ‘நிவாரணம்’ வேண்டிப் பரிதாமாக நிற்கிறார்கள். அரிதாக இருந்த இந்நிகழ்வுகள் இன்று எங்கும் காணப்படுவதை,

*பொறுத்தவர்கள் காலமெல்லாம் பொறுப்பதில்லை;*
*பொங்கினர்க்கு நலம்தீது தெரிவதில்லை;*
*வெறுத்தெழுவர்; அவர் எந்த விதியும் காணார் (ப. 290)*

என்று கூறுகிறார். அன்று,

*அரசும் காவல் துறையும், ஆட்டுமந்தையைக் காப்பதற்காக வளர்க்கப்படும் நாய்கள். சரியான பயிற்சி*

*இல்லாத காரணத்தால் அவைகளே மந்தைக்குள் புகுந்து ஆடுகளைக் கொன்று தின்னாமலிருக்க நாம் எவ்வாறு கவனம் செலுத்துவோமோ அதைப்போல ஜனங்களையே அழித்து விடாமலிருக்கும்படி நாம் பாதுகாக்கவேண்டும்*[37]

என்று போர்வீரர்களைப் பற்றிப் பிளாட்டோ குறிப்பிட்டார். மக்கள் ஆள்வோரிடத்தும் காவல்துறையினரிடத்தும் இருந்தால் மக்களுக்குப் பாதுகாப்பும் அமைதியும் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. அரசியலில் பொருளீட்டி வகுக்கப்பட வேண்டுமேயல்லாது இருப்பதைப் பகிர்ந்தளிப்பது மட்டும் சிறப்புடையது அல்ல. பொருளைச் சேர்க்கும் வழியறியாத அரசு ஆட்சி செலுத்தும் காட்டில் புல்கூட முளைப்பதற்கு அஞ்சும் என்பதை,

*இருப்பதைப் பகுப்ப தல்லால்*
*இயற்றுதல் இயலார் கையில்*
*பொறுப் பெலாம் தந்த நாட்டில்*
*புல்கூட முளைப்ப தஞ்சும்* (ப. 240)

என்று கூறுகிறார்.

**10.** சமுதாயம் அளித்த பண்பாட்டுக் கூறுகள்

**(i)** பண்பாடு

இன்றியமையாத பண்பாட்டினால்தான் ஒரு சமுதாயம் கட்டுக்கோப்பான ஒழுக்கமுறையில் அமைந்து இயங்கமுடியும். தனிமனிதன் மேம்பாடு அடையப் பண்பாடு என்னும் அமைப்பில் பல்வேறு சக்திகளின் ஒத்துழைப்பு தேவைப்படுகிறது.

*பண்பாடு என்னும் சொல் பல்திறங்கொண்ட கூட்டுத்தொகுதியைக் குறிக்கும். அறிவு, நம்பிக்கை, கலை, நீதி, சட்டம், மரபு, சமுதாயத்தில் மனிதன் ஆற்றும் செயல்வலிமை ஆகியவற்றுடன் பழக்கம் என்பதும் உள்ளடக்கியதாகும்*[38]

என்கிறார் சர் எட்வர்ட் டைலர். எனவே, சமுதாயம் பெற்றெடுத்த பண்பாடு என்ற மரபு அடுத்தடுத்த தலைமுறை மக்களுக்குக் கொடுக்கின்ற வழக்கம் எண்ணம் செயல்திறன் சிந்தனை பொருள்வகை அமைப்பு ஆகியவற்றைக் குறிப்பது ஆகும்.

பண்பாடு என்ற சொல்லுக்கு ஆங்கிலத்தில் culture என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

அதற்கு,

*Tillage, Improvement by Training, An advanced state of civilization, Cultivate*[39]

எனப் பொருள்கள் காட்டப்பட்டுள்ளன.

*The state of being cultivated*[40]

என்ற பொருளும் உண்டு. இவற்றின்வழியில் சிறத்தல் என்பது புலனாகிறது. இச்சொல்லோடு ஆங்கிலத்திலேயுள்ள மற்றொரு சொல்லையும் இணைத்துப் பார்த்தால் Agri + Culture = Agriculture பொருள் நன்கு விளங்கும். இதற்கு Cultivation of the soil என்பது பொருள்படும். உள்ளத்தைப் பண்படுத்துவதுபோல நிலத்தைப் பண்படுத்தவது உழவாகிறது. அதனாலேயே நிலத்தைச் 'செய்' என்று தமிழில் வழங்குகிறார்கள். நன்றாகப் பண்படுத்தப்பட்ட நிலம் 'நன்செய்', அல்லாதது 'புன்செய்' ஆவதுபோல் நன்றாகப் பண்படுத்தப்பட்டவன் நல்லவனாகிறான். ஆங்கிலத்திலும் Culture, Agriculture என்னும் இருசொற்களும் உளப்பண்பாட்டிற்கும் நிலப்பண்பாட்டிற்கும் அமைவதைக் காணலாம். இதனை,

*உடையில் நாகரிகம் வளர்வதில்லை*
*உறையுளில் நாகரிகம் வளர்வதில்லை*
*செல்வத்தில் நாகரிகம் செழிப்பதில்லை*
*சிந்தையின் வளத்தில் செழிப்பது நாகரிகம்* (ப. 143)

என்று உணர்த்துகிறார் கவிஞர். மேலும் தூய எண்ணங்கொண்டு, ஒருமைபட்டு, அனைவரும் விரும்பும்வண்ணம் உலகம் படைக்கப்படுவதுதான் பண்பாட்டு முயற்சி என்பதை,

*தூயது தூயது*
*துயதெம் எண்ணம்*
*சொல்வதில், செய்வதில்*
*ஒருமைஎம் வண்ணம்*
*ஞாயமும் உண்மையும்*
*நாடி நடப்போம்*
*யாவரும் இன்புறும்*
*ஞாலம் சமைப்போம்* (ப. 170)

என்று எடுத்துரைக்கிறார். அவ்வுலகில் மற்றவர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பதோடு எதையும் கண்மூடித்தனமாக ஏற்பதோ எதிர்ப்பதோ இருக்காது. இதனை,

*மற்றவர்கள் உணர்வுகளை*
*மதிப்போம்; பண்டை*
*மரபுகளின் அடிப்படைகள்*
*ஆய்வோம்; ஆழ்ந்து*
*கற்றவர்கள் முடிவென்னின்*
*ஏற்போம்; எஃதும்*
*கண்மூடி எதிர்ப்பதில்லை*
*ஏற்பதில்லை*

என்று பிரகடனப்படுத்தும் கவிஞர், மற்றவர்கட்கு உதவுவதுடன் மற்ற நாடுகளின் சுதந்திரங்களுக்கு உதவும் உள்ளமே பண்பாடு மிக்கவுள்ளம் என்றும், அப்பண்பை மரபாகக் கொண்டவர்கள் இந்தியர்கள் என்பதில் பெருமையடையும் வண்ணம்,

*சுதந்திரப் போரில் நின்ற*
*தூய்மையர்; இந்த வையம்*
*விதந்திடும் வண்ணம் நாடு*
*மேனிலை அடையும் பாதை*
*வகுத்தனர்; வகுத்த பாதை*
*வழிநடந்து யாந்த யாவும்*
*தொகுத்தனர்; மற்றை நாட்டார்*
*சுதந்திரம் தேடும் போரில்*
*உதவினர், தம்மை ஆளும்*
*உரிமைஓர் புனிதம் என்னும்*
*பதமுடைத் தத்துவம் நம்*
*பண்பெனும் மரபு கண்டார்*

என்று கூறுகிறார். காகங்கள் பசித்து உயிர்விட்டது இல்லை. நீர், நிலவளம் கொடுக்கும் உலகில் சோற்றுக்கு மானிடர் வாடுகின்றனர். பச்சைமரக் கிளையில் தன் குஞ்சுகளுடன் தூக்கணாங்குருவி கொஞ்சும். ஆனால்,

*என்பசி ஆற்றுவன்; இன்னுயிர்க் காதலி*
*தன்பசி காணத் தாங்குவன்; பெற்றோர்*
*துன்புறல் கண்டும் சோர்ந்திலன்; என்சேய்*
*வன்பசி காணும் வலிமையிலேன் ஐயகோ* *(ப. 283)*

*என்று மனிதர்களை அரற்றும் பசியானது,*

*மனிதர் அல்லது மற்றுயிர் அறியாத்*
*தனியது வறுமை, தரணியின் பிணிகளில்*
*கொடிய யாவினும் கொடியது, வறியவர்*
*மடியது மில்லை; வாழ்வது மில்லை;*

*சித்திர வதையெனச் செய்யும் கொடுமையின்*
*நித்திய வடிவம்* (ப. 300)

என்று மனிதர்களின் அன்றாட வடிவமாகிவிட்டதைக் கூறுகிறார். இவ்வகைப்பட்ட ஏழ்மையை வள்ளுவர், "இன்மை என ஒரு பாவி"[41] என இகழ்ந்தார். வறுமையின் கொடுமையை,

*இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்*
*இன்மையே இன்னா தது*[42]

என்று விளக்கம் அளித்து வறுமையை ஒழிப்பதற்கு வள்ளுவர் ஈகை, ஒப்புரவு, நன்றியில், செல்வம் ஆகிய அதிகாரங்களை வகுத்தார். மணிமேகலையில் சீத்தலைச்சாத்தனார்,

*பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக*[43]

என்றார். பொருளியலாளர், பொருள்களை இன்றியமையாதவை (Necessaries), வசதிக்குரியவை (Comfort), ஆடம்பரமானவை (Luxuries) என மூவகைப்படுத்துவர். இவ்வாறு பாகுபாடு செய்திருப்பினும் சமுதாயத்தின் ஒரு பிரிவினரால் ஆடம்பரமாகக் கருதப்படும் ஒரு பொருள், மற்றொரு பிரிவினர் அறிந்திராமலேயே இருக்கலாம். எனவே, சமுதாயத்திலுள்ள ஒவ்வொரு பிரிவினர்க்குமுரிய பொருள் கிடைக்கப் பெறாத நிலையே வறுமை எனப்படும். இதனையே

*வறுமையென்பது போகம் துய்க்கப்பெறாத பற்றுள்ளம்*[44]

என்று தொல்காப்பியப் பொருளதிகார உரையில் பேராசிரியர் கூறுகிறார்.

சமுதாய வறுமை என்பது சமுதாயத்திலுள்ள மக்கள் அனைவரையும் பாதிக்கும் நிலையான தேவைக்குறைவு எனப்படும். பொருள்களின் பங்கீட்டிலும் பொருள் கிடைப்பதிலுமுள்ள நேர்மை யின்மை ஆகியவை சமுதாய வறுமைக்குரிய காரணங்கள். சுதந்திர இந்தியாவில் அரசு எத்தனையோ திட்டங்களை வகுத்துச் செயல் படுத்தியும் வறுமையை அகற்றிப் பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற இயலவில்லை. வாழ்வில் மிக சாதாரண அடிப்படைத் தேவைகளைக் கூடப் பூர்த்திசெய்யப்படாத நிலையில் மக்கள் இருப்பதற்கு ஆட்சியாளர்களே காரணம். கண்முன்னே மனித உயிர்களை அழிக்கும் வறுமையை ஒழிக்காத கலை மற்றும் கல்வியினால் பயனொன்றுமில்லை. இதனை,

*கோடியில் கோடியில் குறைந்திடா உயிர்*
*வாடியும் மெலிந்தும் மண்ணில் நின்றிடும்*
*காட்சியை மறந்த கலையில் பயனென்?*
*காட்சியை மறந்த கல்வி என்செயும்?* (ப. 301)

என்று கேட்கிறார். அதாவது மனிதநேயத்தை மறந்த கலையினாலும் கல்வியினாலும் பயனொன்றுமில்லை. அவ்வாறே பசிக்குறைவு தருவதன்றி ஆன்மஞானம் போதிப்பதனாலும் பயனில்லை என்பதை,

*அறிவியலென்? அருங்கலையென்?*
*ஆற்றல் மிக்க அறிஞர் குலச் சாதனை என்?*
*தொழில்நுட் பத்தின் பொறியியலின் பங்களிப் பென்?*
*தத்து வத்தின் பொதி சுமந்த கண்டதெவன்?*
*ஆன்ம ஞானம் சாதித்த தென்ன? அட*
*தாகத் திற்குத் தண்ணீரும் பசிக்குணவும்*
*தருவ தன்றிப் போதிக்க வேண்டிய தென்?*
*என்பாய்த் தோலாய்ப் புழுங்குபவர்க்கு உம்கலைகள்*
*புகழ்வ தென்ன?* (ப. 310)

என்றும்,

*மண்ணுலகில் ஒருமுனையில்*
*மூலை ஒன்றில் மனிதஇனப் பிரதிநிதி*
*வறுமை மிஞ்சி உண்ணுவதற் குணவின்றி*
*உழல்வ துண்டேல் உலகத்தில் நாகரிக*
*உயர்வொன் றில்லை* (ப. 310)

என்று குறிப்பிடுகிறார். உலக மானுடநேயமாக இது அமைகிறது. மனிதனொருவன் உணவுக்காக வாடினால் உலகத்தில் நாகரிகம் என்பதே இல்லை என்று பண்பாட்டின் பொருள் சிறக்க வைக்கின்றார். இதனை,

*வீடுகட்டினோம் வாழவீடில்லை;*
*பயிர்செய்தோம் கூழில்லை*
*பருத்திவிதைத்தோம் ஆடையில்லை;*
*பள்ளி கட்டினோம் படிப்பில்லை*
*பொன்னும்முத்தும் எடுத்தோம்*
*அணிகள் இல்லை*
*வெயிலில் உழைத்தோம்*
*பலன் கண்டதில்லை*
*பூங்கா உண்டாக்கினோம்*
*தென்றலை அனுபவித்ததில்லை*
*உழைப்பால் உலகத்துக்கே*
*வாழ்வளித்தோம் வாழ்ந்தறியோம*
*ஏழைகள் நாங்கள்* (ப. 279)

என்று தொழிலாளர்கள் வேதனைப்படும் நிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறார் குலோத்துங்கன்.

## (ii) ஒழுக்கம்

ஒவ்வொரு மனிதனுடனும் சமதாயம் ஒரு சங்கிலிபோல் பிணைந்திருக்கிறது.

*யாரொருவருடைய செயலும் மற்றவர்களுக்குப் பாதகமாக அமையாமல் எல்லோருக்கும் நன்மையடையும்படிப் பார்த்து பிறரை மதித்து வாழவேண்டும் இதுதான் ஒழுக்கம்*[45]

என்று வேதாத்திரி மகரிஷி குறிப்பிடுகிறார். ஆனால், இன்று பொதுவான ஆற்றையும் அருவியையும் தமது என்று தடுத்து மற்றவர்களுக்குக் கொடுமை செய்துகொண்டு உள்ளனர். இதனை,

*ஆறுதரும் செல்வத்தை அணையிட்டுத்*
*தேக்குகிறார்; அருவி கொண்ட*
*வீறுதனைப் பண்படுத்தி மின்விசையாய்*
*மாற்றுகிறார்; விரைவில் யாவும்*
*மாறுவது காண்கிறேன்* (ப. 155)

என்று தனது ஆர்வத்தைக் கூறுகிறார். ஒரு நாட்டுக்கு வரும் நீரையும் அருவியையும் பிற நாட்டவர் கவராதிருக்கக் குடிகளுக்குரிய அறத்தைச் செயலாற்றி நடவடிக்கைகளை மேற்கொள்ள நிர்வாகம் திருவுலா தேர் போன்று ஆடி அசைந்து செல்வதால் பயனின்றிப் போய்விடுகிறது. இதனை,

*இறைவன் செலும் நேருக் கிணையான தென்கின்ற*
*நிறையுடைய வாகனம் எம் நிலத்தமைந்த நிர்வாகம்*
*பழுதேது மில்லை. அதன் பண்பே அசைவதுதான்;*
*முழுதாக மேலிருந்து முடியோ டடிவரைக்கும்*
*மாற்றுவது போதாது; வருங்காலத் தேவைகளை*
*ஏற்றுச்செயலாற்ற இறகுகள் நம் தேவையடா* (ப. 216)

என்பதைக் கூறும் கவிஞர் வருங்காலத் தேவைகளை விரைந்து செயலாற்றுவதற்கு மனம் வேண்டுமென்கிறார். இவ்வாறு விரைந்து செயலாற்றாதவன் சமுதாயப் பாரமாவான் என்பதை,

*பட்டமெலாம் மெய்வருத்தி பாடுபட,*
*வாழ்வுக்குப் பாதை காணும்*
*திட்டமென முடிந்ததுவோ? தெளிவில்லேன்;*
*ஆய்ந்துணரும் திறமைகாணேன்;*
*பட்டமரம் விறகாகும், பணிபுரியான்*
*என்னாவான், பார மன்றோ* (ப. 155)

என்று சாடுகிறார். எனவே, மெய்வருத்தி உழைத்து உண்மை காண்பதே ஒழுக்கத்தின் இன்பமாகும் என்பதை,

*தேடுவதும் இன்பமடா;*
*சிந்திப்ப தின்பமடா*
*ஊடுருவி, உள்நுழைந்து,*
*உண்மையெனும் உன்னதத்தைக்*
*காணுவதை ஒத்ததொரு*
*களிப்பில்லை; காட்சியிலை.* (ப. 169)

என்று குறிப்பிடுகிறார்.

**(iii)** விழிப்புணர்வு

யான், எனது என்ற பற்றோ விருப்பமோ ஆசையோ தோன்றும் அத்தருணத்திலேயே ஒருவனுக்கு மாறுபாட்டு உணர்ச்சியும் உண்டாகியிருக்க வேண்டும்.

*தான் என்றதுமே புறம் என்ற ஒன்று உண்டாவது இயற்கையே. இவ்விரண்டையும் பகுத்துணர்ந்து, தன்னையோம்பிப் பிறரையும் இவற்றால் ஓம்பி, இன்றேல் வெறுத்து ஒதுக்காது வாழப்பழகுவதே பண்பாடாகும். ஆதியில் தோன்றிய முதல் மனிதன் இப்பண்பாட்டினை அறியான். எனவே அவன் தனது என்பதை அறிந்தவுடன் மற்றவரை மாறுபாட்டுடன் நோக்கித் தன்வாழ்வைத் தனிமையில் வளர்த்துக்கொள்ள எண்ணற்ற திட்டங்களைத் தீட்டியிருக்க வேண்டும். அத்திட்டங்களின் அடிப்படையில்தான் உலக வளர்ச்சிக்கும் நாகரிகப் பண்பாட்டு வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தது.*[46]

ஆகவே தான் தொழிலாளி முதலாளி என்ற வேறுபாடு இன்று நாடெங்கும் வளர்ந்துவிட்டது. அவ்விருவரையும் இணைத்து பண்பட்ட நல்ல உலக சமுதாயத்தை அமைப்பதற்கு இடைவெளியை இருவரும் சேர்ந்த - ஒன்றிய மனித சமுதாயம் என்ற உணர்வினை அவர்களுடைய உள்ளத்தில் மலரச்செய்திட வேண்டும். அரசாங்கம் எத்தனையோ சட்டங்களையும் விதிகளையும் செய்துகொண்டு வருகிறதென்றாலும், இவ்விருவேறு சமுதாயமும் தனித்தனிப் பாதையை நோக்கியே செல்கின்றன. இருவரும் இணையாத சமுதாயம் இல்லை என்ற உணர்வு அரும்பினாலன்றி அமைதி காணமுடியாது. இவ்விழிப்புணர்வு மக்களிடம் வேண்டும் என்பதை,

*விழிப்பொன்று வரவேண்டும்; மானிடத்தின்*
*விசைமுழுதும் எழவேண்டும்; மறம் தவிர்ந்த*
*அழிப்பொன்று வரவேண்டும்; உருக்கி வார்த்து*
*அடிப்படைகள் புதுவாக அமைக்க வேண்டும்* (ப. 208)

என்று கூறுகிறார்.

**(iv)** காதல், காதல் தோல்வி

மனித இனத்திற்கு மட்டுமின்றி எல்லா உயிரினத்திற்கும் இன்ப உணர்வு, இயல்பாக அமைந்து மனித இனத்தின் செயல்பாட்டிற்கு இன்றியமையாததாய்க் கருதப்படுகிறது. அதனால் இன்பத்திற்கு முதன்மை தந்து,

*இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்திணை*[47]

என்றார் தொல்காப்பியர். இன்பமே அனைத்து நிகழ்வுகளுக்கும் முதற்காரணமாவதால் சங்க காலம் முதல் இக்காலம் வரை இன்ப உணர்வுகளைப் புலப்படுத்தும் அகப்பாடல்களையே மிகுதியும் பாடுகின்றனர். பூவின் கனம், அதன் காம்பிற்கு மட்டுமே தெரியும். கவிதையின் தன்மை கவிதையை எழுதியவருக்கே புரியும். அதுபோல் காதலனைப் பற்றிக் காதலிக்கு மட்டுமே தெரியும் என்பதை,

*காம்பிற்குத் தான்*
*பூவின் சுமை தெரியும்*
*கவிஞனுக்குத் தான்*
*கவிதையைப் பற்றித் தெரியும்*
*என்னைப் பற்றி*
*உனக்குத்தான் தெரியும்*[48]

காதலனைப் பற்றிக் காதலிக்குத் தெரியும் என்று கவிஞர் காஞ்சனா கூறியதற்கு அழகு செய்விக்கும் முறையில் கவிஞர் குலோத்துங்கன், தெரிந்திருப்பின் மட்டும் போதாது; அவன் குணமறிந்து நடந்து அவனை மகிழ்வித்து வாழ்வினைச் சுவைப்பின், அது மகிழ்ச்சி பொங்கும் காதலாக அமையும் என்கிறார். இதனை,

*கண்ணிடை நிறைந்தாள், என்றன்*
*கனவுகள் உருவம் பெற்று*
*மண்ணிடை நின்றா லென்ன*
*வந்தனள்; அன்புகாட்டி*
*என்னிடை அமுதம் சேர்த்தாள்,*
*எழிலினை வடித்துச் செய்த*

*பெண்ணிடை அரசி யன்னாள்*
*பெறுவன யாவு மானாள்* (ப. 427)

என்கிறார்.

*காமமும் பசியும் மனிதனைப் பிடித்தாட்டும் மாபெரும் ஆற்றல்களாகும். இவற்றுள் பசி, பிறந்தநாள் தொட்டு இறுதிநாள் வரை இருந்து வருவது. இவை இரண்டும் மனிதனைச் சமைக்கும் நித்திய நெருப்புகள். மனிதன் இவற்றில் கருகிவிடாமல் காத்துக் கொள்வதில்தான் அவனுடைய வாழ்க்கைப் போராட்டம் அடங்கியுள்ளது*[19]

என்கிறார் நா. சுப்பு ரெட்டியார். இந்த வாழ்க்கைப் போராட்டத்தைக் கவிஞர் குலோத்துங்கன்,

*என்பசி ஆற்றுவன்; இன்னுயிர்க் காதலி*
*தன்பசி காணத் தாங்குவன்; பெற்றோர்*
*துன்பறல் கண்டும் சோர்ந்திலன்; என்சேய்*
*வன்பசி காணும் வலியிலேன் ஐயகோ!*
*கடும்புயல் அஞ்சேன்; கனயென வெய்யோன்*
*கடுந்துயர் கருதேன்; துயிலிழந் துறுகுளிர்*
*நடுங்குவ தாற்றுவன்; நனியிளஞ் சேய்இதில்*
*படுந்துயர் தாங்கும் பலமிலேன் ஐயகோ!* (ப. 283)

என்கிறார். காதல் பொழுதுபோக்காய் அமைந்துவிட்டதைப் போன்றே காதல் தோல்வியும் நடைமுறை வாழ்க்கையில் சாதாரண நிகழ்ச்சியானதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. தன்முயற்சியில் வாழத்தெரியாமை, மதக்கோட்பாட்டிற்கு உடன்படுதல் போன்றவை அவற்றுள் சிலவாகும். தன் முயற்சியில் வாழத்தெரியாததை,

*உண்டால் மதுமயக்கும்,*
*உண்ணா திருந்திடலாம்*
*கண்டால் மயக்குகிறாய்*
*கண்மூடி யாரிருப்பர்?*
*..............................*
*..............................*
*நாணம் தடுக்கிறதோ*
*நாவின் மொழியெதற்கு?*
*காண விழியுடையேன்,*
*கனிமூரல் போதாதோ?*
*தோற்றத்தும், கல்வித்*
*துறைகளிலும், செல்வத்தும்*

*ஏற்றம் உடையவன்நான்*
*என்ன தயக்கமடி?*
*காலம் கழிவதுவும்*
*காணாயோ, ஓர்கணமும்*
*மீள வருமோடி;* *(பக். 424 - 425)*

என்று கவிஞர் குலோத்துங்கன் கூறுகிறார். காதல் தோல்வி என்பது சமுதாயத்தில் நிகழக்கூடியதே என்றாலும் காதலும், காதல் தோல்விக் கவிதைகளும் மனித இனத்தின் இன்றியமையாக் கூறாகத் திகழ்கின்றன என்று கூறலாம்.

**(v)** சமுதாய அவலமும் வேற்றுமையில் ஒற்றுமையும்

1999 ஆம் ஆண்டு தமிழக சட்டமன்றத்து ஆளுநர் உரையில், மனிதக் கழிவுகளை மனிதன் சுமக்கும் அவலம் தமிழ்மண்ணிலிருந்து விரைவில் மறையும் என்று கூறப்பட்டதால் மனித இனத்தையே மாசுபடுத்தி வந்த ஓர் இழிவு மறைந்தது. தன்மான உணர்வுள்ள சமுதாயம் தலைகுனிய வேண்டிய ஒரு மாசு அகன்று, தமிழ்ச் சமுதாயத்தின் கறை படிந்த பக்கம் கடந்தகாலச் செய்தியாகியது. கங்கை வெள்ளத் தினாலும் கழுவமுடியாத இந்தக் களங்கத்தைத் தலைமுறை தலைமுறையாகச் சுமந்து, வயிற்றைக் கழுவி, வாழ்க்கை நடத்திய அப்பாவி மக்களின் உள்ளக்குமுறல்களை,

*மாந்தர் கழித்தவை மாந்தர் சுமந்திடும்*
*வாழ்வு தொடர்ந்திடும் நாட்டினிலே*
*போந்த சுதந்திரம் பேசு சமத்துவம்*
*பொய்யடா; யாவையும் ஏட்டினிலே* *(ப. 492)*

என்று கூறுகிறார். வேற்றுமையான மனஉணர்வு மனிதர்களிடம் மட்டுமே பண்டுதொட்டுள்ளது.

*மனிதனிடம்தான் சுயஉணர்வு இருக்கிறது. பசுவிடமோ நாயிடமோ சுயஉணர்வு இருப்பதில்லை. ஒரு பசு, 'நான் இந்தியப்பசு, அமெரிக்கப்பசு, ஜெர்சிப்பசு, கருப்பு, வெள்ளை என்றெல்லாம் எண்ணுவதே இல்லை.' மனிதனிடம்தான் இத்தகைய வேற்றுமை உணர்வுகள் இருக்கின்றன.*[50]

இதனைக் கவிஞர்,

*எழுதிய அனைத்தும் ஏற்பினும், கருத்து*
*முழுமையும் ஒருவழி முறையிடைத் தாயினும்,*
*காற்புள் ளியல்யாம் கருத்து மாறினம்*

*ஏற்பதற்கிலை யென எழுந்து செல்லுவர்*
*ஒற்றுமை யறியாது உளுத்த இனமடா* (ப. 390)

என்று கூறி வேதனையுறுகிறார். இவ்வேற்றுமை எம்முறையில் வளர்க்கப்படுகிறது என்பதை,

*பிரித்துப் பிரித்துப்*
*பேசுகிறோம் - நாம்*
*பிளவில், பகையில்*
*பிழைக் கின்றோம்*
*விரித்து, வகுத்து,*
*வேற்றுமையை - நாம்*
*விளைநில மாக்கி*
*வளர்க்கின் றோம்* (ப. 293)

என்று கூறுகிறார். பலமொழிகள் பேசும் மாநிலங்களையும் கூட்டாட்சி முறைகளையும் கொண்ட நமது நாட்டின் ஒற்றுமைக்கும் உறுதிக்கும் மாநில அளவிலும் தேசிய அளவிலும் தெளிவும் தீர்க்கமான பார்வையும் கொண்ட உயிர்நாடியான மொழிக்கொள்கை, அந்தந்த மாநிலங்களின் கல்விக் கொள்கையிலும் இடம்பெறுகிறது.

**(vi)** அரசியலும் இந்திய ஒருமைப்பாடும்

இந்தியநாடு, மக்களுக்குச் சமுதாய உரிமை, பொருளாதார உரிமை, அரசியல் உரிமை, சிந்தனை உரிமை, பேச்சுரிமை, கொள்கை உரிமை, மதவழிப்பாட்டுரிமை, வாய்ப்பு, தகுதி இவற்றில் வேறுபாடின்மை,

*மனிதத்தன்மையை உணர்ந்து சகோதரத்துவத்தை மேற்கொண்டு நாட்டின் ஒற்றுமைக்கு வழிவகுக்கும் முழுமை வாய்ந்தது குடியரசாகும்.*[51]

ஆனால் நமது மைய அரசு,

*மத்திய ஆட்சி, பேர் வலிமை பெற்றது*
*எத்துறை ஆயினும் இறைமை தன்வயம்*
*கொண்டது; உண்மையில் கூட்டர சில்லை.*
*மண்டிய ஆளுமை மத்தியில்; மாநிலம்*
*சிற்றரசானது; தில்லியில் ஆளுவோர்*
*கொற்றம் ஏற்றது; குனிந்து நின்றது*
*நடுவ ணாட்சி நம்நரம்பு போன்றது*
*விடுவ தொன்றின்றி விரவி நிற்பது* (ப. 391)

எதனையும் விடாமல் - எந்த மாநிலத்திற்கும் முழு உரிமை வழங்காமல் விரவி நிற்கும் நேர்மையற்ற போக்கைச் சுட்டிக்காட்டுகிறார் குலோத்துங்கன். இதனை,

*........................... பன்மொழி*
*இனங்கள் கொண்டது இந்நிலம் என்பதை*
*மனங்கொண் டாட்சியர் மாநிலம் மொழிவழி*
*அமைத்து, வளர்கூட் டாட்சியை முறையொடு*
*சமைத்து யாவரும் சமமென்றாட்சி செய்*
*நிலைமை கண்டதாய் நினைத்தோம், ஆயினும்*
*தலைமை ஓர்புறம் சாய்வது கண்டனம்!*
*பன்மையில் ஒருமை நம்பாரத நாட்டின*
*வன்மை யென் றெண்ணிய மனங்கள் மாறின.*
*பன்மை போற்றிடும் பட்டறி வூறிய*
*தன்மை மிக்கவர் தலைமை ஏற்பது*
*நாள்தொறும் நாள்தொறும் நசிதல் கண்டனம் (பக். 390, 391)*

என்று மையஅரசைக் குறைகூறினாலும், தமிழர்கள் ஒற்றுமையை விரும்புபவர்கள்; தேசப்பற்று மிக்கவர்கள் என்பதை,

*ஒத்து வாழ்வதில் ஓர் பெரும் நாடெனும்*
*தத்துவம் ஏற்பதில், தயக்கம் எம்மவர்க்கு*
*அணுவும் இல்லை; யாம் ஆயிரம் கோயிலில்*
*முணுமுணுத்திடோம்; முழங்கிக்கூறுவம்*
*தேசம் என்பதில், தேசிய ஒன்றியப்*
*பாசம் என்பதில், பாரத பூமியில்*
*எம்மவர் மிஞ்சினர் எவருமில்லை; யாம்*
*இம்மியும் மற்றவர்க்கு இளைத்த தில்லை (ப. 392)*

என்றும் புகழ்ந்துரைக்கிறார். இவ்வாறு தேசிய ஒற்றுமையில் நாட்டமுள்ள தமிழர்களின் மொழியைத் தாழ்த்துவதைப் பார்த்துத் தமிழினம் ஒற்றுமையை விரும்புமா என்ற ஐயப்பாட்டை,

*ஒருமொழிக் குலமென ஓரினம் வாழும்*
*பெருநிலம் படைத்த பேரர சன்று நாம்*
*நீண்ட புகழொடு நிறைந்த பண்பொடு*
*ஆண்ட மொழியினர் ஐக்கியம் நம்நிலம்*
*எண்ணில் மிக்கவர் ஏற்றம் காண்பது*
*மண்ணில் இன்றுள மரபென் றோதுதல்*
*தரும மாகுமோ? தன்மொழி தாழவோர்*
*ஒருமை காண்பதில் ஊன் உயிர் ஒன்றுமோ? (ப. 393)*

என வினவுகிறார்.

ஒற்றுமையை விரும்புகின்றவர்கள் ஓர்புறம் சாயாது நடுவுநிலையில் நின்றால் அவர்களை வாழ்த்தி வணக்கம் செய்வார்கள் தமிழர்கள். இதனை,

*பாரத தேசமும்எம் பரம்பரை வாழ்நிலம்*
*பாரத ஒன்றியம் பன்மையின் கூட்டெனும்*
*உண்மை ஏற்கிலர் ஒற்றுமை தகர்க்கும்*
*வன்கணர்; அவர்முன் வணங்குவ மல்லோம்* (ப. 397)

என்று பெருமைப்படுகிறார்.

**(vii)** சமநிலைச் சமுதாயமும் சமயமும்

சாதி, மத, இன, மொழிச் சமுதாயத்தில் சமநிலையைப் பெற வேண்டும் என்று கவிஞர் குலோத்துங்கன் விரும்புகின்றார். இச்சமத்துவ சமுதாய உலகை நிறுவி, சமதர்மமெனும் ஒரே நெறியை அதன் தாரக மந்திரமாக ஆக்குவது அவருடைய விழைவு. இதனை,

*நிகர் என்று மனிதகுலம் நிமிர்ந்து நிற்க*
*நிலம் முழுவதும் சமத்துவமே நெறியென் றாக*
*உலகு ஒன்று புதிதாக உருவம் செய்வோம்*
*ஒவ்வாத பண்பனைத்தும் உருக்கி வார்ப்போம்* (ப. 207)

என்றும்,

*வாழ்வினை வளர்ப்போம்; இங்கு*
*மனிதரை இழிவு செய்யும்*
*தாழ்வுகள் ஒழிப்போம்; உண்மைச்*
*சமத்துவம் தழைப்பதற்குச்*
*சூழ்நிலை படைப்போம்; துன்பும்*
*துயரமும் கடந்ததான*
*ஆழ்கடல் வையந்தன்னை*
*அமைத்திட நெறிகள் செய்வோம்* (பக். 232 - 233)

என்று கூறுகிறார். அவ்வாறு அமையும் சமத்துவ சமுதாயத்தால் வாழ்க்கை அச்சமில்லாது கழியும்; பிச்சையெடுப்பது ஒழியும்; உயர்வு தாழ்வு என்ற தாழ்வுநிலையில் ஏற்றம் காணப்பட்டு நாடு உயரும் என்று கூறுகிறார். இதனை,

*அச்சமொன்று இல்லா வாழ்வை*
*அடைகுவம்; அளித்த போதும்*
*பிச்சையொன்று ஏற்கா வண்மை*
*பெருக்குவம்; தாழ்ந்த தென்னும்*
*இச்சையொன்று அறியா நெஞ்ச*

*ஏற்றமும் காண்போம்; நாளும்*
*உச்சமொன்று அடைய நாடும்*
*உள்ளத்தைப் போற்றி வாழ்வோம்* (ப. 233)

என விரும்புகிறார் அழைக்கிறார். சமதர்ம சமுதாய நீதியானது, ஓர் ஆற்றின் வளத்தைப்போல் நாட்டிற்கு நல்வளத்தைக் கொடுத்து வளம்பெறச் செய்யும். அதனாலன்றோ,

*சமுதாய நீதியொரு புனித ஆறு*
*தான்ஓடும் நிலப்பகுதி தழைக்கச் செய்யும்*
*அமுதூற்று; மனித வள ஆற்றல்முற்றும்*
*அறுவடை செய் வேளாண்மை* (ப. 329)

என்று சமதர்மக் கோட்பாட்டை விளக்குகிறார். காதல், உள்ளத்திற்கு இன்பம் தருவது; பக்தி ஆன்மாவிற்கு இன்பம் தருவது. உலக இன்பத்திற்கு காதல் துணையாவதுபோல், இறையின்பத்தை எய்தத் துணையாக இருக்கும் சமுதாயத்தில் முழுவதுமாக ஏற்றுக்கொள்ளப் படுவதாகவோ, மறுக்கப்படுவதாகவோ அமையவில்லை. இதனால் சிலருக்கு வெளிவேடமாகவும் வேறு சிலருக்கு உரிய பொருளாகவும் இறையுணர்வு காட்சியளிக்கிறது.

மத நம்பிக்கையின் அடையாளச் சின்னங்களான கோயில்கள், மக்கள் வழிபடும் இடங்களாக மட்டுமின்றி, புகலிடமாகவும் நூல் அரங்கேற்றும் இடமாகவும் திகழ்ந்தன. இக்கோயில்களை அன்றிலிருந்து இன்றுவரையில் பாவங்களைப் போக்கிடும் இடமாகக் கருதிவருவது மதத்தின் கொள்கையால் தொன்றுதொட்டு நடந்துவரும் செயலாகும். நம் முன்னோர்கள் இயற்கையை வழிபட்டுப் பின்னர் உருவ வழிபாட்டினை மேற்கொண்டபின், பெருந்தெய்வ வழிபாடும் சிறுதெய்வ வழிபாடும் இடம்பெற்றன. கிராமப்புறங்களில் நோய், வறுமை போன்ற துன்பங்களைப் போக்கவும், வேண்டுதல்களை நிறைவேற்றவும் சிறுதெய்வ வழிபாட்டை மேற்கொண்டு வருகின்றனர். இந்து சமுதாயம் மதத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது.

*பாமர மக்களுடைய ஒவ்வொரு நாள் வாழ்வும், மதத்தோடு பின்னிப் பிணைந்தது. பிறந்த வினாடிமுதல் இறக்கும் வினாடிவரை அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் ஏதாவதொரு சடங்கைச் செய்து திருப்தியடைகிறார்கள்*[52]

என்கிறார் சோமலெ.

*இன்றைய சமுதாயம் சமயத்தை அஸ்திவாரமாகக் கொண்டு அமைந்திருக்கிறது. அந்த அஸ்திவாரத்தை மாற்றியமைப்பது எளிதல்ல.*[53]

எனவே, மக்களின் அன்றாட வாழ்க்கை முறைகள் முதற் கொண்டு, அனைத்து நிலைகளிலும் கடவுள் சார்ந்த நம்பிக்கைகளும் சடங்குகளும் தவிர்க்க இயலாதவை ஆகின்றன. "எல்லை மீறிய தனிநபர் வழிபாடே பலதரமக்களையும் கடவுள் வழிபாட்டில் வற்புறுத்தி யிருக்கும்"[54] என்கிறார் நடராஜன். இது,

*எட்டா தென்பதும்*
*ஏலா தென்பதும்*
*கிட்டா தென்பதும்*
*கிடையா தென்னும்*
*வேதத் தலைவன் நீ!"* *(ப. 120)*

என்ற பாடல் வரிகளால் விளங்கும். இக்கருத்துக்களை உள்ளடக்கியே கடவுள் என்பது அறியாமையால் உயிர்ப்பித்த ஒன்று; வரம்பு மீறிய தனிநபர் வழிபாட்டால் உண்டான கற்பனை; மதத்தின் மூச்சால் நடக்கும் உடல் என்று ஒரு சாராரால் கருதப்படுகிறது. இக்கருத்துக்கு வலுவூட்டும் நிலையில் தேவலோகம் என்று எதுவுமில்லை; அந்தத் தேவருலகத்தைப் பற்றிக் கூறியதுகூட மனிதர்கள்தான் என்கிறார். இதனை,

*தொன்றுதொட் டின்று மட்டும்*
*தொல்லுக னைத்தும் கண்ட*
*வென்றிகள் யாவும் மாந்தர்*
*வினைகளின் விளைவே யன்றோ?*
*உள்ளம்இன் றறிதற் கெட்டா*
*உயர்வினைத் தேடு கின்றோம்;*
*தெள்ளிய அறிவும் எங்கள்*
*சிந்தையின் வரம்பும் தாண்டி*
*மலரும்ஓர் உலகம் இந்த*
*வையகத் துண்டு, தேவர்*
*உலகம் என்றெதுவு மில்லை*
*உம்பரும் எம்படைப்பே* *(பக். 134 - 135)*

என்று விளக்குகிறார். மேலும், கடவுளுடன் ஒன்றிவிடும் வீட்டுப் பேற்றினைக் காட்டிலும் உயர்ந்த ஒன்றை அடைய மனம் விழைகின்றார்.

*இருப்ப தொன்றையே என்றும் ஏற்பதெம்*
*விருப்ப மன்று; விண் வீடு வாய்ப்பினும்*
*மாற்றி அஃதினும் வளர்ச்சி காணுதல்*
*ஆற்றும் மாந்தர் யாம;* (ப. 126)

என்கிறார். சமயங்களால் நாற்குலம் தோன்றியதேயன்றி, அச்சமயத்தினால் விளைந்த பயன் ஒன்றுமில்லை. இதனை,

*பணிவோடும் உண்மையொடும்*
*பகுத்தாயும் கல்வித்*
*துணிவோடும் நெஞ்சத்*
*துயரோடும் கேட்கின்றோம்*
*வரலாறு தோன்றுமுனம்*
*வந்தீர்; அந்நாள் முதலாய்ப்*
*பெறவேறு பேறில்லை;*
*பெற்றோம் என்றும் வழியில்*
*தொடர்ந்தோம்; உமக்குத்*
*துணைநின்றோம்; சொன்னபடி*
*நடந்தோம்; இதுகாறும்*
*யாம் கண்டதென்ன பயன்?* *(பக். 552 - 553)*

என்று வினவுகிறார். மனிதன் சமயத்தை உணர்ந்துள்ளான். ஆனால், மனித உள்ளத்தைச் சமயவாதிகள் உணரவில்லை. இதனை,

*... ... வறுமை பிணி இடர்த விர்ந்த*
*இன்பமுனக் கெட்டாத கனவு தானா?*
*ஓதுமறை சமயமொரு நூறும், மாந்தன்*
*உள்ளத்தின் தாகத்தை உணர்ந்த துண்டா?* *(ப. 158)*

என்று சமயக் கோட்பாட்டாளர்கள் மனித உள்ளத்தின் தாகத்தை உணராத தன்மையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார். மனிதஉள்ளத்தை உணர்ந்தவர்களாக இருந்தால் பாபர் மசூதி இடிக்கப்பட்டிருக்காது. இதே கருத்தை,

*உள்ளங்களில் புற்றுநோயர்*
*உம்மினம், உம்மால் வந்த*
*களங்கத்தைக் கழுவு தற்குக்*
*கங்கையும் போதுமோ* *(ப. 538)*

என்று குறிப்பிடுகிறார். எனவே மனிதனை வளர்ப்பதற்குரிய மதம் உட்பகையை வளர்க்குமாயின் ஒழிந்துவிடுவதே நன்றாகும் என்பதை,

*மதமெதற்கு, மொழியெதற்கு நாடுதான் ஏன்*
*மானிடர்தம் வளர்ச்சிக்கு வழிவகுக்க*
*உதவுதற்கு நாம்படைத்தோம்; அவையே தம்முள்*
*உட்பகையை வளர்ப்பதெனில் ஒழிதல் நன்று* *(ப. 554)*

என்று தனது ஆவேசத்தை மதத்தின்மீது காட்டுகிறார்.

11. தமிழின் செம்மை, இந்தியத்து மகுடம்

எந்த ஓர் இனமும் சமுதாயமும் தன் பண்டைய பெருமைகளை நினைப்பதும் பேசுவதுமியல்பு. மரத்தின் ஆணிவேர் போன்ற பாரம்பரியம், கடந்த நாட்களின் கணக்கன்று. அது முன்னோர்களின் அனுபவத் தொகுப்பு. இந்த அனுபவங்களெனும் செல்வத்தைத் தொகுத்துப் பாதுகாத்து வைத்திருக்கும் கொள்கலனாக அமைவது ஓர் இனத்தின் மொழி தூண் தாங்கி நிற்கும் கருவூலத்தை அது தலைமுறை தலைமுறையாகப் பாதுகாத்து, வருகின்ற தலைமுறைக்கு விட்டுச் செல்கிறது.

> *ஓர் இனத்தின் பெருமையை அந்த இனத்தின் மொழி பிரதிபலிக்கிறது. மாபெரும் நாகரிகங்கள் மகத்தான மொழியை உருவாக்கத் தவறியதுமில்லை; வரலாற்றுப் பெருமை இல்லாத மக்கள் வளமிக்க மொழியை உருவாக்கியதுமில்லை*[55]

என்று வா.செ. குழந்தைசாமி கூறுகிறார்.

மனித உணர்வுகளையும் சிந்தனைகளையும் வெளிப்படுத்த உதவுவது மொழி. உலகில் இதுவரை 6000 மொழிகள் உள்ளதாக கணக்கிடப்பட்டுள்ளது. இதில் 95% மக்கள் பேசுவது வட்டார மொழிகளாகத்தான் இருக்கிறது. சிந்தனைகளையும் நுண்ணிய உணர்வுகளையும் திருத்தமாகவும் துல்லியமாகவும் உணர்த்தும் மொழியை மனிதனின் அவரவர் தாய்மொழி என்று கூறலாம். அப்படிப்பட்ட தாய்மொழிகளைச் சிறப்பிக்கும் வகையில் ஒவ்வொரு ஆண்டும் பிப்ரவரி 21ந் தேதியை உலகத்தாய் மொழிகள் தினமாக ஐ.நா. சபை கடைப்பிடிக்கிறது.

இந்தியாவில் மட்டும் சுமார் 850 மொழிகள் பேசப்படுகின்றன. இதில், இந்திய மொழிகளில், எதற்குமில்லாத தனிச்சிறப்பு தமிழுக்கு மட்டுமே உண்டு. உலகில் இலக்கிய இலக்கணமுடைய மொழிகள் 300. அவற்றுள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாறுடைய தமிழ் மொழி பிறமொழித் தாக்கமே இல்லாத மொழி என்பதுதான் தமிழின் தனிப்பெரும் தனித்தன்மை. தமிழ் தனக்கென இலக்கண வரைமுறைகளையும் இலக்கியக் கோட்பாடுகளையும் கொண்டு இயங்கி வருகிறது. தென்னக மொழிகளான கன்னடம், மலையாளம், தெலுங்கு மொழிகளுக்கு மட்டுமல்லாமல், பிராயாகு போன்ற ஆதிகுடிமக்களின் மொழிகளுக்கும் தமிழ்மொழி தாய்மொழியாக விளங்குகிறது.

உலகத்து மொழிகளிலே சமயச் சாயலின்றி 2000 ஆண்டு களுக்கு முன்பே மானுடவாழ்வை அறம் - புறம் எனப்பிரித்துச் சங்க

இலக்கியங்களை உருவாக்கிய பெருமை தமிழ்மொழிக்குண்டு. உலக நீதி நூலான திருக்குறளுக்கு இணையாக வேறொன்று இதுவரை தோன்றவில்லை என்பது தமிழுக்குக்கிடைத்த தனிப்பெருமையாகும். தமிழ், இலங்கை மற்றும் சிங்கப்பூரில் ஆட்சிமொழிகளில் ஒன்று. மலேசியாவில் நாடாளுமன்ற மொழி. இத்தகைய சிறப்புகளின் காரணத்தை,

*கருமுகில் தவழும் மலைகள் - நீளக்*
*கடல்கள் கலைகள் மொழிகள்,*
*பெருவல் லரசுகள் எவையும் - காலப்*
*பெருவெள் ளத்தினில் அமிழும்;*
*ஒருபொருள் காலத்தை வென்றே - தழைத்*
*தோங்கி வளர்ந்துள தென்றால்,*
*அருமைத் தமிழ்மொழி அன்னாய் - நீ*
*அன்றோ அணையா ஒளியே* (ப. 338)

செம்மொழித் தகுதி என்பது தமிழின் பெருமையோடும் தமிழர்களின் பெருமையோடும் மட்டும் நிற்பதன்று; அது இந்தியப் பண்பாடு, மொழிவளர்ச்சியில் எட்டியுள்ள உச்சியின் மற்றுமொரு சிகரமாகும். அரசு நிலைநிறுத்த முயலும் இந்தியத் தத்துவத்தின் பெருமைக்கு மற்றொரு மகுடமான தமிழ்மொழி ஆயிரமாயிரம் கண்டங்களைத் (crises) தாண்டி வந்தது. தமிழர்கள் தங்கள் மொழியைப் படையெடுப்புத் தீயிலிருந்தும், பெருகிவரும் பண்பாட்டு வெள்ளத் திலிருந்தும் படைவலிமை கொண்டும், பக்தி மார்க்கத்துணையுடனும், பகுத்தறிவு இயக்கத்தின் வழியும் பாதுகாத்தார்கள்.

இத்தனை பெருமை கொண்ட தமிழ்மொழியைச் செம்மொழியாக (classical) 16.09.2004 இல் மத்திய அரசு தீர்மானித்தது. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் எழுதப்பட்ட படைப்புகளை இன்றைக்கும் படித்து முழுமையாகப் புரிவதற்குக் காரணம் அதனுடைய இலக்கண கட்டமைப்பாகும்.

*உலகமொழிகளில் இத்தகைய மாறாத கட்டமைப்பைக் கொண்டது இரண்டே மொழிகள்தான். ஒன்று தமிழ்; மற்றொன்று ஸ்வாகிலி என்ற ஆப்பிரிக்க மொழி*[6]

என்று மொழியியல் வல்லுநர் நோவாம் சாம்ஸ்கி கூறுகிறார். சாகித்ய அகாடமியிலுள்ள நிபுணர்கள் செம்மொழிப் பட்டியலைத் தயாரித்தனர். அக்குழு,

1. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலான பழமையை ஒரு மொழி கொண்டிருந்தால் அதனைச் செம்மொழியாக அறிவிக்கலாம்.

2. பண்டைய இலக்கியங்களைக் கொண்டதாக அம்மொழி இருத்தல் வேண்டும்.

3. அம்மொழியின் இலக்கணம் சுயமான இலக்கணமாக இருத்தல் வேண்டும்.

என்று விதிகளை விதித்தது. அக்குழு வரையறுத்த விதிகளின்படி, தமிழ்மொழி இப்பொழுது இந்தியாவின் செம்மொழி ஆகிறது. செம்மொழி என்பது ஓர் உயர்ந்த தகுதி. இத்தகுதி கிரேக்க, இலத்தீன், அரபு, பாரசீக, சமஸ்கிருத மொழிகளுக்கு இருந்து வருகிறது. செம்மொழி வரிசையில் தமிழ்மொழியும் இடம்பெற்றிருப்பதை,

*கதலியின் அடியில் தோன்றும்*
*கன்றென, வைய வாழ்வில்*
*முதலொடு முடிவு காட்டும்*
*முறையுள வாழ்வு முண்டு.*
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ....
*இடையறு தொடர்பு கொண்ட*
*இயல்புடை வாழ்வு முண்டு.*
*தடையறு சலனம் மாற்றம்*
*சகலர்க்கும் பொது* (ப. 355)

என்ற கவிஞரின் கூற்றுக்கு ஏற்ப இன்றைய மன்மோகன்சிங் அரசு செய்துள்ளது பாராட்டற்குரிய ஒன்றாகும்.

## 12. பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி

நாடு எனும் எல்லைகளை கடந்து மானுடத்தை மதித்து மனிதநேயத்தை உயர்த்திப் பிடித்து அதன்மேன்மைக்காக வாழ்நாள் முழுவதும் போராடியவர் பெரியார். தனது நீண்ட சமுதாயப் போராட்ட வாழ்வில், போராட்ட வீரர்களிடமிருந்தும், சமதர்மவாதிகளிடமிருந்தும், பொதுவுடைமைவாதிகளிடமிருந்தும் மாறுபட்டு விடுதலையை, பொதுவுடைமைத் தத்துவத்தை, சமதர்மதத்துவத்தின் அடிப்படையை ஆதரித்தவர். எனினும், சுதந்திரம் சமதர்மம் பொதுவுடைமைத் போன்றவைமட்டுமே பிரச்சினைகள் அல்ல என்று பெரியார் கருதினார். பொருளாதார முன்னேற்றம், பொருளாதார நீதி வந்தால் நமது பிரச்சினைகள் தீர்ந்துவிடும் என்று பொதுவுடைமைவாதிகள், சமதர்மவாதிகள் நம்பினார். ஆனால், நமது நாட்டைப் பொறுத்தவரை சமுதாய ஏற்றத்தாழ்வுகளும், சமுதாய அமைப்பில் நிலைத்துநிற்கும் அநீதி, சாதிப்பற்று, அடிமைமுறை, மூடநம்பிக்கைள், அனைத்தும்

ஒழிக்கப்பட்டால்தான் சமுதாயப் பிரச்சினைகள் தீரும் என்று போராடினார்.

சமுதாய அமைப்புக் கொடுமையினால், சமுதாயத்து அடிமட்டத்தில் அழுத்தப்பட்டவர்களும் அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்துபவர்களும் இருக்கின்ற நிலைமையில், மாற்றமிலாது தொடர இந்த நாட்டுக்குச் சுதந்திரம் வருமாயின், அது ஆதிக்கவாதிகள் அனுபவிக்கும் சுதந்திரமாக இருக்குமே தவிரப் பொதுவாக மக்கள் அனுபவிக்கும் சுதந்திரமாக இருக்காது என்றார். எனவே, அவர் சமுதாய நீதிக்கும் சேர்ந்து போராட வேண்டுமென்று வற்புறுத்தினார். அன்று அது ஏற்கப்படாததால் விடுதலை பெற்ற இந்தியாவில் தலைதூக்கி நிற்கும் சமுதாயப் பிரச்சினைதான் இன்றைய அரசியல் கட்சிகளின் தேர்தல் அறிக்கையில் முதலிடம் பெறுகின்றன.

சமுதாயப் பிரச்சினைகள் அனைத்திற்கும் கல்விதான் தீர்வாகும் எனத் தமது பொதுவாழ்வை ஆரம்பித்த காலத்திலிருந்து வலியுறுத்தி வந்தார். 21ஆம் நூற்றாண்டை நாம் கல்வியுகம் என்கிறோம். ஆனால், அனைவருக்கும் ஆரம்பக் கல்வியையாவது கொடுக்க அன்று தவறியதால் இன்னும் வறுமையிலிருந்து விடுதலை பெறவில்லை. கல்வி தொடர்பாகப் பெரியாரின் கருத்தைப் பின்பற்றியிருந்தால் இந்தியப் பொருளாதார நிலை இன்று வேறாக இருந்திருக்கும். எனவேதான் பெரியாரைப் பற்றி,

*வணங்காது நிமிர்ந்த தலை; வாரியன்ன*
*வற்றாத கருத்துக்கள் மலரும் உள்ளம்*
*உணங்காத தாளாண்மை; எதற்கும் அஞ்சா*
*உரங்கொண்ட பெருந்தலைவன்; உழைப்பின் சின்னம்.*
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
*தடம் சொன்னான்; தமிழருக்குக் கண்ணும் காதும்*
*தன்னறிவும் மனவலியும் தந்தான்; என்றும்*
*கடன்பட்ட தமிழுலகம் நன்றி சொல்லும்;*
*காவியங்கள் கலைகள் அவன்பெருமை பேசும்"* (ப. 593)

*" ............................ இந்த மண்ணின்*
*சரிதையிலோர் புதுமனிதர்; இருண்ட வானில்*
*மின்னலெனத் தோன்றியவர்; வளர்ந்து யாங்கும்*
*விரிகின்ற சுடரான வேந்தர்; சூழும்*
*தன்னலத்தின் கோட்டை யெலாம் ஒருங்கு வீழச்*
*சாய்த்திட்டப் பெரியார்* (ப. 317)

என்று குலோத்துங்கன் பெரியாரைப் புகழ்கிறார்.

**13. தமிழரை அடையாளம் காட்டும் சிந்தனை மரபு**

இப்புவி தோன்றியது எவ்விதம் என்பதை அறியமுடியவில்லை என்றாலும் தோன்றிய நாள்முதலாக நெறிவகுத்து வாழ்வது மானிடத்தின் சிறப்புகளில் ஒன்று. இதனை,

*அறிந்த நாள்முதல்*
*நெறியும் வழியும்*
*நிலையும் வகுத்து*
*உயர்வது மானிடம்* (ப. 122)

என்று குறிப்பிடுகிறார். மானிடம் வகுத்துக் கொண்ட நெறிகளால் அன்பு வளர்ந்தது. தன் குற்றம் கண்டு திருத்திக் கொண்டதோடு தனக்காகப் பிறர் தண்டிக்கப்படுதலைப் பொறுத்துக்கொள்ளாத மனம் பெற்றவர்களாகத் திகழ்ந்தமையால் அவர்கள் மானிடம் சூடிய மன்னர்கள் என்று போற்றப்பட்டதை,

*பண்பட்ட நெஞ்சில் பகைமை இலை - எதிர்ப்*
*பாதைகள் அன்பைச் சிதைப் பதில்லை!*
*தன்குற்றம் காணத் தயங்கல்இலை - பிறர்*
*தண்டிக்க வாழ்தல் சகிப்பதிலை!*
*மண்பெற்ற வாழ்விடை மன்னரடா - யாம்*
*மானிடம் சூடிய வாகையடா* (ப. 118)

என்று புகழ்கிறார். மன்னர்கள் என்று போற்றப்படும் இந்த ஆற்றல் மிக்கவர்களால் மனித சாதி உயர்வடையும் என்பதை,

*தக்காரை நெஞ்சாரப்*
*போற்றும் நாடு*
*தகுதியினை வளர்க்கின்ற*
*கழனி: ஆற்றல்*
*மிக்காரால் உயர்வதடா*
*மனித சாதி*
*வேதமிது விதியுமிது*
*விலக்கொன் றில்லை* (ப. 141)

என்கிறார் குலோத்துங்கன். அறுசுவை உணவினாலும், அரண்மனை வாழ்வினாலும் அமைவதல்ல மனிதர் வாழ்க்கை. மானத்தைத் துணியால் காப்பதல்ல மனிதம். சுதந்திர வாழ்க்கையை வாழ்பவனே மனிதன் என்று அழைக்கப்படுகிறான். சிறைபடாத சுதந்திர மனிதனின் புனிதம் போற்றப்படும். இதனை,

*புனிதத்தைப் போற்றுவேன் யான்*
*புகழ் ஒன்றே வய்ய வாழ்வில*
*மனிதனின் உரைக்கல் என்னும்*
*மாண்பினைப் போற்று வேன்யான்* (ப. 273)

என்று போற்றுகிறார். செல்வமும் சித்தாந்தங்களும் செயல்திறமை பெறவில்லையென்றால் வளர்ச்சியிராது. அவற்றால் நாடு பெறுவதும் ஒன்றுமில்லை என்பதை,

*செயற்றிறமை யில்லையெனில், சித்தாந்தங்கள்*
*செல்வங்கள் வளர்ப்பதில்லை; செயல்மு டங்கள்,*
*இயற்றுவதோன் றியலாத இலக்க ணங்கள்*
*ஏடெழுதி நாடடைவ தெதுவு மில்லை* (ப. 556)

என்று வெளிப்படுத்துகிறார். தமிழன், உலகின் எந்நாட்டுக் குடிமகனாக இருப்பினும் அவனுக்கென்று பொதுவான சில தன்மைகள் உண்டு. சுமார் 3000 ஆண்டுப் பண்பாட்டு வளர்ச்சியுள்ளவர்களான தமிழர்களின் நட்பு மனிதப்பண்புகளில் ஒன்று. முன்னோர்கள், நட்புக்கு வகுத்த இலக்கணம் உன்னதமானதும், ஒப்புயர்வற்றதுமாகும்.

*நட்டோர் கொடுப்பின் நஞ்சும்*
*உண்பர் நனி நாகரிகர்*[57]

என்று நட்புக்கு இலக்கணம் வகுக்கிறது சங்க இலக்கியம் நற்றிணை.

*பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்*[58]

என்கிறார் வள்ளுவர். ஊற்றப்படுவது நஞ்சு எனத் தெரிந்திருந்தும் ஊற்றுவது நண்பனாயின் அதை அமைதியாக உண்ணுவதை நட்புக்கு இலக்கணமாகக் குறிக்கிறது தமிழ் நாகரிகம். அந்நாகரிகத்தின் வாரிசுகளாம் தமிழர்கள், தமிழை இழந்தால் அந்நாகரிகப் பாரம்பரியத்தை இழந்துவிட வேண்டிவரும். உலகில், அவ்வப்போது சர்வதேசியம், உலகக்குடிமகன் என்ற தத்துவம் குறித்துப் பேசப்படுகிறது. ஆனால் 2000 ஆண்டுகளுக்கு முன்பே

*யாதும் ஊரே யாவரும் கேளிர்*[59]

எனத் தமிழ் நாகரிகம் பிரகடனப்படுத்தப்பட்டது. இதன்மூலம் அன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் மனவளர்ச்சி வெளிப்படுகிறது. எண்ணற்ற போர்களின் கொடுமைகளில் வாடியும், பஞ்சத்திலும் பட்டினியிலும் அனுபவத்தைக் கண்டும் இவ்வுலகம் நிலைத்து நிற்கிறது; வாழ்கிறது; வளர்கிறது எப்படி என்ற கேள்வியைக் கடலுள் மாய்ந்த இளம்வழுதி தன் மனத்தில் வினாவெழுப்பி விடையும் பகர்கிறான்..

*புகழெனின் உயிரும் கொடுக்குவர்*
*பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலார்.*
..........................................
*............ அன்னமாட்சி அனையராகித்*
*தனக்கென வாழா நோன்றாள் பிறர்க்கென*
*வாழுநர் உண்மையானே*

என்கிறான். அதாவது தனக்கென வாழாது பிறர்க்கென வாழுநர் உள்ளமையால் இவ்வுலகம் நிலைத்திருக்கிறது என்கிறான். கடந்த இருநூறு ஆண்டுகளில்தான் குடியாட்சிமுறை வந்துள்ளது. ஆனால் ஏழாம் நூற்றாண்டிலேயே,

*நாமார்க்கும் குடியல்லோம்*
*நமனை அஞ்சோம்*[61]

என்று திருநாவுக்கரசர் கூறியுள்ளார். அதிலுள்ள கம்பீரமும், தன்மான உணர்ச்சியும், சுதந்திர உள்ளமும் அனைவரையும் பிரமிக்கவைக்கின்றன. நாவுக்கரசர் வாழ்ந்தது குடியரசு நாட்டிலோ சமதர்ம சமுதாயத்திலோ அல்ல; மன்னர்கள் ஆட்சிக்காலத்தில், மன்னரின் ஆணையை எதிர்த்தே 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று கூறினார். அத்துடனில்லாது 'நமனை அஞ்சோம்' என்றும் கூறினார். அம்மரபின் தமிழர்கள் தமிழை இழந்தால் அதன் தன்மைகளனைத்தையும் இழந்துவிடுவர்.

இருபதாம் நூற்றாண்டில் சிகரத்தில் வைத்துச் சிறப்புச் செய்யப்பட்ட பண்பு, மனிதநேயம் (Humanism). இராமலிங்கரின்

*வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்*[62]

என்ற வரிகளுக்கு இணையாக மனிதநேய உள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டும் சொற்களில்லை. தமிழர் தமிழை இழந்தால் இவையனைத்தும் இழந்துவிடும். மரபு, பாரம்பரியம் என்பன ஆழமான சொற்கள். ஒரு சமுதாயத்தின் அன்றாட வாழ்க்கை அரசு இயற்றும் சட்டத்தின் அடிப்படையில் நடைபெறுவதில்லை. கல்விக்கூடங்கள் பாடங்களின் அடிப்படையில் மட்டும் நடைபெறுவதில்லை; ஒருவர் வாழும் சமுதாயத்தின் வாழ்க்கைமுறையிலும், சூழ்நிலையின் அடிப்படையிலும் அமைந்திருக்கிறது. இச்சூழ்நிலை நேற்றுப் பிறந்து இன்று வளர்ந்து உருவானதன்று. அது மரபுகளாலும் பாரம்பரிய விழுமியங்களாலும் உருவானது. மரபுகள், சில கட்டுப்பாடுகளினால் ஆனவை. ஒரு சமுதாயம் தானாக ஏற்றுக்கொள்ளும் கட்டுப்பாடுதான் ஒழுக்கம். இவை நாகரிக வளர்ச்சியினால் வளர்ந்து மாறுபட்டுத் தேவைக்கேற்பப் புதுப்பிக்கப்படக்கூடியவை. நமது அன்றாட வாழ்க்கை, நாம் பிறந்து

வளர்ந்த சமுதாயத்தின் மரபுகளையும் பாரம்பரியங்களையும் ஒட்டியே அமைகிறது.

தமிழ் வளர்ச்சி, தமிழ்ப் பயன்பாடு தொடர்பான முயற்சிகளில் உலகு தழுவி வாழும் தமிழர்கள் பங்குகொள்ள வாய்ப்புகளை ஏற்படுத்த வேண்டும். தமிழ், ஒருநாட்டில் வழங்கும்மொழி என்ற பார்வையை மாற்றி, அது உலகு தழுவி வாழும் தமிழ் மக்களின் தாய்மொழி என்ற எண்ணம் வேண்டும். இப்புதிய பார்வையில், முக்கிய இடம் பெறுவது தமிழ் இணையப் பல்கலைக் கழகம். அயல்நாட்டுத் தமிழர்களும் தமிழ்மொழி, கலை, இலக்கியம், பண்பாடு இவற்றோடு தொடர்பறாது வாழ உதவும் வகையில் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டுடிருக்கிறது. தமிழ் மேம்பாட்டிற்கும் தமிழ் வளர்ச்சிக்கும் உலகத் தமிழர் பங்களிப்பின் சின்னமாக உருவாகி உள்ளது.

1960 இன் பிற்பகுதியில் உலகத்தமிழ் ஆய்வுநிறுவனம் நிறுவப்பட்டது. இதன் தலைமையிடம் பாரீஸ் என்றாலும் சென்னையே செயல்முறைத் தலைமையகமாக உள்ளது. இதன் சார்பில் எட்டு உலகத் தமிழ் மாநாடுகளை நடத்தித் தமிழினம் பரந்து விரிந்து வளர்ந்திருக்கும் ஆலமரம் போன்றது என்பதை நிலைநிறுத்தியுள்ளது. அடிமரம் தமிழகத் தமிழர்கள், அயல்நாட்டுத் தமிழர்கள் இதன் விழுதுகளாவர். தமிழினத்தின் எதிர்கால வாழ்விற்கும் வளத்திற்கும் அடிமரமும் முக்கியம்; விழுதுகளும் முக்கியம். அடிமரமும் விழுதுகளும் சேர்ந்ததுதான் ஆலமரம் எனும் தமிழினம்.

### கருத்துக்களின் முடிவு

➢ சிந்தனையாற்றல் மனிதனை விலங்குகளினின்றும் வேறு படுத்துகிறது. சமுதாயமென்பது விரைந்து செயலாற்றும் கூட்டுத்தொகுதியாகும். சமுதாயம் என்ற சொல் ஒரு கூட்டத்தின் உறுப்பினர்களுக்கிடையே உள்ள உறவின் தொகுதியைக் குறிப்பதால், மனிதஇனத்தின் உறவுநிலை எங்கெங்கு உள்ளதோ அங்கெல்லாம் சமுதாயம் இருக்கும். ஆனால், இச்சமுதாய உறவு நிலை, கண்களுக்குப் புலனாகாது. எனவே சமுதாயம் என்பது ஒரு பண்பியலின் பிழிவாகும்.

➢ குடும்பம் மூலமே மரபுகளும் பழக்கவழக்கங்களும் நிலைநாட்டப்படுகின்றன. இது, பாலின உறவுகளை வரையறை செய்வதுடன் குழந்தைகளைப் பேணி வளர்த்து, பொதுக் குழுமத்தைத் தோற்றுவித்த பின் நாடு என்பது தோன்றுகிறது. எனவே ஒரு நாட்டின் தோற்றத்திற்குக் குடும்பம் எனும் சமுதாய அமைப்பே மூலகாரணம்.

- அரசு என்பது நாகரிகம் அடைந்த ஒரு சமுதாயத்தின் அங்கம். அடிப்படைச் சட்டம், குடிமக்கள், மக்கள் ஒருவரோடொருவர் கொண்டுள்ள தொடர்புகள் ஆகியவற்றை வகுத்துக்காட்டும். நீதிகள், சமுதாய நிலைகள் ஆகியவற்றைக் காட்டுவதுடன் அதன் குறிக்கோள்களை கூறும் ஓர் அமைப்பாகவும் அது அமையும்.

- தான் வாழும் காலத்தையும் சமுதாயத்தையும் தன்னுடைய படைப்புகளில் காட்டும் படைப்பாளி, அரசியலைத் தன் படைப்புகளில் வெளிப்படுத்தாமல் செல்லமுடியாது. ஆக்க நல அரசின் கொள்கை, மக்களுக்குப் போதிய அளவு நலத்தைப் பெறச்செய்து, மனநிறைவுடன் வாழச்செய்வதாகும். மக்களாட்சியில் நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பவர்கள் தலைவர்களாக இருந்தாலும், இன்றைய நிலையில் அரசியல்வாதிகளும் அடங்குகிறார்கள்.

- மனித நேயத்தை மறந்த கலையினாலும், கல்வியினாலும் பயனில்லை. அதேபோல், பசிக்குணவு தராத ஆன்ம ஞான போதனையாலும் பயன் இல்லை. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற வள்ளுவரின் வாய்மொழி, வருணாசிரம தர்மத்தைத் தகர்ப்பதாக அமைகிறது. மதம் மனிதனை வளர்ப்பது. அதற்குமாறாக அது உட்பகையை வளர்க்குமாயின் ஒழிதல் நன்று.

- சமுதாயப் பிரச்சினைகள் அனைத்திற்கும் கல்விதான் தீர்வாகும். ஒற்றுமையின் நலம்பெரிது; மனித சாதி ஒரு குடும்பம் என்பதுவும் உண்மையாக வேண்டும். ஒரு சமுதாயம் தானாக ஏற்றுக் கொள்ளும் கட்டுப்பாடுதான் ஒழுக்கம். மரபுகள் நாகரிக வளர்ச்சியின் அறிகுறிகளாகும்.

## அடிக்குறிப்புகள்

1. பாஸ்கரன், க., சமுதாயத்தத்துவம், ப. 2.
2. மேற்படி, ப. 4.
3. இளம்பூரணர், தொல்காப்பியம் சொல்லதிகாரம் நூற். 1 உரை.
4. வி. உண்ணாமலை, புதுக்கவிதையில் சமுதாயம், ப. 121.
5. மாணிக்கவாசகர், திருவாசகம், அடி 26 - 28.
6. பழனி, பசி எங்கள் உணவு, ப. 24.
7. கா. சிவத்தம்பி, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்,ப. 133.
8. R.M. Maciver and Charles H., pp. 44 – 48.

9. சா. மாரிமுத்து, சமுதாயநிலை (கட்டுரை) வானவில். ப. 26.
10. செ.ரா. பரமேஷ், சமுதாய உளவியல், பக். 7 - 8.
11. ப. கமலக்கண்ணன், இலக்கியம், மொழி குறித்த பெரியாரின் சிந்தனைகள், ப. 149.
12. பாரதியார், பாரதியார் பாடல்கள்.
13. மேற்படி.
14. குறுந்தொகை,பாடல் எண். 167.
15. அ.மு.ப., பக்.75 - 78.
16. இராசமாணிக்கம், மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.14.
17. கமலக்கண்ணன் இலக்கியம், மொழி குறித்த பெரியாரின் சிந்தனைகள், ப.150.
18. அறவாணன், க.ப., முன்நூல்,ப.102.
19. தொல். சொல். அகத்திணையியல், நூ. 31.
20. புறநானூறு, பாட்டு எண். 183.
21. பரிமளா, ச. வாஸந்தி நாவல்கள் ஓர்ஆய்வு, ப. 5.
22. புறநானூறு, பாடல் 187.
23. திருவள்ளுவர், திருக்குறள், எண்: 236.
24. மேற்படி, 239.
25. பாஸ்கரன்.க., சமுதாயத்தத்துவம், ப.50.
26. மேற்படி. ப.69.
27. மேற்படி. ப.70.
28. பாஸ்கரன், ஆர்., அரசியல், ப. 1.
29. கல்பகம், இரா., ப.117.
30. பாஸ்கர் கில்பர்ட், எஸ்.ஜே., (தமிழில் ஜெ. நாராயணன்) மு.க.,ப.139.
31. கல்பகம், இரா., மு.நூ.,ப. 118.
32. பாரதியார், பாப்பா பாட்டு.
33. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம்.
34. பாரதியார், பாஞ்சாலி சபதம்.
35. ராஜாஜி, நாட்குறிப்பு 24.01.1922, வேலூர் சிறைச்சாலை.
36. வா.செ.கு., செவ்வியல் மொழிமுதல் சேதுசமுத்திரம் வரை, ப. 154.

37. பிளாட்டோ, அரசியல், தமிழில் - சாமிநாத சர்மா, ப..226.
38. பாஸ்கரன், கு,. சமுதாயத்தத்துவம், ப.50.
39. Oxford Dictionary, Page : 277.
40. Cambridge Dictionary , Page : 227.
41. திருவள்ளுவர், திருக்குறள் எண். 1042.
42. மேற்படி., எண். 1041.
43. சீத்தலைசாத்தனார், மணிமேகலை.
44. பேராசிரியர், தொல், பொருளதிகாரம். 253. நூற்பா. உரை.
45. வேதாத்திரி மகரிஷி, ஓம்சக்தி தீபாவளி மலர் 2004, ப. 72.
46. பரமசிவானந்தம், அ.மு., சமுதாயமும் பண்பாடும்,பக். 45 _ 46.
47. தொல்காப்பியர், தொல்காப்பியம், களவியல் நூற்பா எண். 1.
48. காஞ்சனா, எஸ்., தினமலர் - வாரமலர். 05.01.1986. ப. 32.
49. சுப்புரெட்டியார். நூ, புதுக்கவிதை நோக்கும் போக்கும், ப. 303.
50. அமிர்தானந்தமயி தேவி, ஓம்சக்தி தீபாவளி மலர் 2004, ப. 56.
51. கல்பகம், இரா., மு.நூ., ப. 120.
52. சோமலெ, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 42.
53. யோகீஸ்வரன், பி, மு. நூல், ப. 89.
54. நடராசன், லெ., தமிழர் பண்டிகைகளும் பண்பாடும்., ப. 42.
55. குழந்தைசாமி, வா.செ., செவ்வியல் மாழி முதல் சேதுசமுத்திரம் வரை, பக்.25 - 26.
56. மகாலிங்கம், நா., தமிழ் செம்மொழி (கட்டுரை) ஓம்சக்தி தீபாவளி மலர் 2004, ப. 33.
57. நற்றிணைப்பாடல்.
58. திருக்குறள், எண்.580.
59. கணியன் பூங்குன்றனார், புறநானூற்றுப் பாடல்.
60. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, புறநானூறு.
61. நாவுக்கரசர், தேவாரம்.
62. திருவருட்பா, இராமலிங்க அடிகள்.

# நிறைவு

- இலக்கியப் படைப்பாளிகள், தம்கால சமுதாயத்தைத் தம்படைப்புகளில் அமைத்துக் காட்டியுள்ளார்கள். இதனைக் கவிஞர் 'குலோத்துங்கன்' கவிதைகளிலும் காணமுடிகிறது.
- அறிவியல் தொடர்புடைய சிந்தனைகள், பண்டைக் காலந்தொட்டு இருந்து வருகின்றன. எனினும், இன்றைய மனித சமுதாய வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைவது நவீன அறிவியல் தொழில்நுட்பம் சார்ந்த 'மனிதவளம்' ஆகும்.
- மக்கள் பின்பற்றும் கல்விமுறையும், அதனடிப்படையில் அமையும் தொழில் நுட்பமுமே அவர்களுடைய உயர்வு தாழ்வுக்குக் காரணிகளாகின்றன.
- நவீன அறிவியல் தொழில்நுட்ப சாதனங்கள் மூலமாகக் கல்வி வழங்கப்படுவதால், வட்டாரத் தன்மை நீங்கி, நாடு முழுமைக்கும் பொதுவானதொரு பாடத்திட்டம் நடைமுறைப்படுத்தப்படும். தொழில்நுட்ப அறிவை, அவரவர் தாய்மொழியின்மூலம் வழங்கினால், இந்திய நாடு வலிமைபெற்ற நாடாகவும், தொழில்நுட்ப நாடாகவும் மாறிவிடும்.
- பெண்ணியம் பெண்களுக்கு மட்டும் சமத்துவம் வேண்டுமென்று கேட்பதன்று, சமத்துவ சமுதாயம் உருவாக வேண்டுமென்பதே அதன் நோக்கமாகும்.
- தொடக்கக்காலத்தில், தமிழகத்தில் தாய்த்தலைமை மரபு நிலவியது. இது, ஆரியர் வருகைக்குப் பின்னர்த் தந்தைவழி மரபாக மாறலுற்றது. ஆண் பெண் சரிநிகர் சமானமாக வாழ்வது நல்ல குடும்பமாகும்.
- தனித்தமிழ் இயக்கம், சமயம், சமுதாயம், தேசியம் ஆகியவற்றால் தமிழ் உணர்ச்சி வளர்ந்தது. மக்களுடைய அரசியல் பொருளாதாரத் தேவைகளைத் தமிழ்மொழி பூர்த்தி செய்ய வேண்டும். இன்றேல் பூர்த்திசெய்யும் மொழியை நாடத் தொடங்கி விடும் நிலையில் தமிழ் புறக்கணிக்கப்படும் நிலை உருவாகிவிடும்.

- எவ்வகை மாற்றத்தையும் ஏற்கும் ஆற்றலுடையது தமிழ். அதனால், அறிவியலானது தமிழ் மயமாகுமானால், அவ்வறிவியல் மக்கள் மயமாகி விடும்.

- உலகம் முழுவதும் வாழ்கின்ற தமிழர்கள், தங்கள் தாய்மொழியாம் தமிழைக் கற்க, தமிழ் இணையப் பல்கலைக்கழகம் வாய்ப்பினை அளிக்கிறது. தமிழ், இலங்கையின் ஆட்சிமொழிகளில் ஒன்று என்ற தகுதியால், தமிழ் ஐக்கிய நாட்டுச் சபையின் அங்கீகாரம் பெற்ற மொழியாக இடம் பெறும் தகுதியைப் பெற்றுள்ளது.

- மாற்றங்களைக் கொண்டது வளர்ச்சி. தமிழ் வளர, காலத்திற் கேற்ற மாற்றங்களை அது ஏற்கவேண்டும். எழுத்துச் சீரமைப்பு, தமிழிலுள்ள ஓர் எழுத்தையும் குறைப்பதன்று. தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 247 எழுத்துக்களை, எழுதப் பயன்படும் குறியீடுகளான 107 குறியீடுகளிலிருந்து 39 ஆக குறைக்கும் முயற்சியாகும். இதனால், அனைவரும் எளிதில் தமிழைக் கற்கமுடியும்.

- சமுதாய நீதி எனும் இட ஒதுக்கீட்டுக்குக் காரணமாகச் சாதிகளிடையே உள்ள ஏற்றத்தாழ்வுகள் ஓரளவு ஒழிந்ததாலும், சாதி மறுபிறவி எடுப்பதற்குக் காரணமாகவும் அமைந்துவிட்டது.

- மனிதநேயத்தை மறந்த கலையினாலும், கல்வியினாலும் பயனில்லை. அஃதேபோன்று, பசிக்குணவு தராத ஆன்ம ஞான போதனையாலும் பயனில்லை. பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்னும் வள்ளுவரின் வாய்மொழி, வருணாசிரம தர்மத்தைத் தகர்ப்பதாக உள்ளது. மதம் மனிதனை வளர்ப்பது. அதற்கு மாறாக அது உட்பகையை வளர்க்குமாயின் ஒழிதல் நன்று.

'குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம்' என்ற இந்நூலில் அனைத்துக் கூறுகளும் பொதுமை நோக்கில் விளக்கப்பட்டுள்ளன.

# துணை நூல்கள்

முதன்மைச் சான்று

1. குழந்தைசாமி, வா.செ., குலோத்துங்கன் கவிதைகள், பாரதி பதிப்பகம், 126/108 உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை – 17, சூலை 2002.

துணைமைச் சான்றாதாரங்கள்

2. அகத்தியலிங்கம், சு.பெ., மனித உரிமைகள் வரலாறும், அரசியலும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை – 17, 1998.
3. அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க் கோட்டம், புதுச்சேரி – 5, 1994.
4. ஆரோக்கியநாதன், எஸ்., மொழியில் (கிளை மொழிகள்), முத்துப் பதிப்பகம், விழுப்புரம், 1987.
5. ஆனைமுத்து, வே., பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொகுதி 1, சிந்தனையாளர் கழகம், தெப்பக்குளம், திருச்சி – 2, 1974.
6. இந்திரா சோமசுந்தரம், கட்டுரைக்கோவை, அணியகம், 5 செல்லம்மாள் தெரு, சென்னை – 30, மு.ப. 1992.
7. இராசமாணிக்கனார், மா., தமிழ் நாகரிகமும் பண்பாடும், பாரி நிலையம், சென்னை – 1, 1971.
8. இராமலிங்கம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் பாடல்கள், (நாமக்கல் கவிஞர்) மணிமேகலை பிரசுரம், தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை – 17.
9. உண்ணாமலை, வீ., புதுக்கவிதையில் சமுதாயம், செல்லம்மா, 2 சிவன்கோயில் தெற்குத் தெரு, சிவகங்கை, மு.ப. ஆகஸ்டு 1991.
10. ஊரன் அடிகள் (ப.ஆ.) திருவருட்பா, சமரச சுத்த சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1987.
11. ஏங்கல்ஸ், குடும்பம், சொத்துரிமை, அரசு ஆகியவற்றின் தோற்றம், அயல்மொழிப் பதிப்பகம், மாஸ்கோ.

12. கண்ணதாசன், கண்ணதாசன் கவிதைகள், தொகுப்பு 5, கண்ணதாசன் பதிப்பகம், சென்னை

13. கமலக்கண்ணன், ப., இலக்கியம் மொழி கலை குறித்த பெரியாரின் சிந்தனைகள் – ஒரு மதிப்பீடு, சமூக நீதி நூற்பதிப்பகம், 2/48ஏ காந்திநகர், தாதம்பட்டி, சேலம் – 14, மு.ப. 2001.

14. குடந்தையான், தமிழர் பண்பாடு அன்றும் இன்றும், பல்லவநாதம், 8ஏ, முத்தமிழ் நகர் முதல் தெரு, பூந்தமல்லி, சென்னை – 65.

15. குப்புராஜ், சி.எஸ்., ஏழைகள் வாழும் பணக்கார நாடு (கட்.), தினமணி, 25.04.2000 சென்னை.

16. குமரவேல், (ப.ஆ.), வானவில், தமிழ் ஆய்வுக் கழகம், அண்ணாநகர் கிழக்கு, சென்னை–102.

17. குமாரசாமி, இ.என்., பெண்ணிய நோக்கில் பாரதி, தமிழ்ப் புத்தகாலயம், மாசிலாமணித் தெரு, பாண்டி பஜார், தி.நகர், சென்னை – 17, நவம்பர் 2001.

18. குழந்தைசாமி, வா.செ., பாரதியின் அறிவியல் பார்வை, பாரதி பதிப்பகம், தி.நகர்,சென்னை– 17.

19. குழந்தைசாமி, வா.செ., செவ்வியல் மொழிமுதல் சேது சமுத்திரம் வரை, பாரதி பதிப்பகம், தி.நகர், சென்னை – 17, மு.ப. 2004.

20. குழந்தைசாமி, வா.செ., இது கல்வியுகம், பாரதி பதிப்பகம்,தி.நகர், சென்னை –7, மு.ப.2001.

21. கோதண்டராமன், பொன்., தொல்காப்பிய அறிமுகம், (பொற்கோ), வானதிப் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17,1994.

22. கோமேதகவேலு, எம்.கே., சிந்தனையாளர் ரூசோ, பிரேமா பிரசுரம், 35 ஆற்காடு சாலை, சென்னை – 24. ஆகஸ்டு 1994.

23. சக்திக்கனல், நீங்கள் கேட்டவை, பூக்கூடைப் பதிப்பகம், சென்னை, மு.ப. 1982.

24. சாலை இளந்திரையன், புரட்சி முழக்கம், பூம்புகார் பதிப்பகம், சென்னை – 17, 1978.

25. சிவத்தம்பி, கா., தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், அன்னை அஞ்சுகம் அச்சகம், சென்னை, மு.ப. 1983.

26. சிற்பி, ஒளிப்பறவை, செந்தமிழ் அச்சகம், கோவை, இ.ப. 1976.

27.சுத்தானந்தபாரதி, யோகி., தமிழ் உணர்ச்சி, புதுக்கோட்டை., மு.ப. 1974.

28.சுந்தரம்பிள்ளை, மனோன்மணியம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை.

29.சுந்தரராஜன், மரு. அ., சித்த மருத்துவ கைமுறை வைத்தியம், (அணிந்துரை), இந்திய மருத்துவ மற்றும் ஓமியோபதித் துறை, சென்னை – 30,செப்டம்பர் 1991.

30.சுப்புரெட்டியார், நா., புதுக்கவிதை போக்கும் நோக்கும், நாவல் ஆர்ட் பிரிண்ட்டர்ஸ், சென்னை.

31. சுப்ரமணிய அய்யர், ஏ.வி., தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பாரி நிலையம், பிராட்வே, சென்னை.

32.சோமலெ, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், நேஷனல் புக் டிரஸ்ட் (இந்தியா), புதுடெல்லி, மு.ப. 1985.

33.ஞானன், செ., தத்துவ தரிசனங்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.

34.ஞானி, (தொ.ஆ.) பெண்களும் வாழ்வியல் படைப்பும், தமிழ் நேயம்,23 காளீசுவரர் நகர், கோவை – 9,மு.ப. 2003.

35.தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள், பச்சைபசேல் பதிப்பகம், பாண்டிச்சேரி.

36.தேவநேயன், ஞா., ஒலியல் மொழிநூல், சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 79 பிரகாசம் சாலை, சென்னை – 1, 1965.

37.நடராஜன், வெ., தமிழர் பண்டிகைகளும் பண்பாடும், வானதி பதிப்பகம், சென்னை, மு.ப. 1972.

38.நன்னன், மா., பெரியார் கனினி–தொகுதி 2, பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை, சைதாப்பேட்டை, சென்னை – 108, மு.ப. 1993.

39.பரமேஷ், செ.ரா., சமூக உளவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மு.ப. 1973.

40.பரிமளா, ச., வாஸந்தி நாவல்கள் ஒரு ஆய்வு, மதி பதிப்பகம், 2 முட்டா தோட்டம், மூலக்கரை, பசுமலை, மதுரை – 4, டிசம்பர் 1991.

41. பழனி, பசி எங்கள் உணவு, தமிழ்ப் புத்தகாலயம், பாண்டி பஜார், சென்னை – 17, மு.ப. 1979.

42.பாஸ்கர், க., சமுதாயத் தத்துவம், தத்துவ மையம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

43.பாஸ்கரன், ஆர்., அரசியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மறுபதிப்பு 1971.

44.பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் (முழுத் தொகுப்பு), அருள் சுடர் பதிப்பகம், 7, கடம்பாடி அம்மன், கோவில் தெரு,வளசர வாக்கம், சென்னை –87.

45.பாரதியார், பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், சென்னை,1976.

46.பார்த்தசாரதி, நா., மொழியின் வழியே, தமிழ்ப் புத்தகாலயம், பாண்டி பஜார், தி.நகர், சென்னை – 17, இ.ப. மே 2002.

47. பிளாட்டோ, பிளாட்டோவின் அரசியல் அல்லது நீதியைப் பற்றிய ஆராய்ச்சி, (தமிழில்) சாமிநாத சர்மா, பிரபஞ்ச ஜோதி பிரசுரம், புதுக்கோட்டை, நா.ப. 1964.

48.பிரேமா, இரா., பெண்ணியம் – அணுகுமுறைகள், தமிழ்ப் புத்தகாலயம், தி.நகர், சென்னை.

49.பெரியார், எழுத்துச் சீர்திருத்தம், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம், ஈ.வெ.கி. சம்பத் சாலை, சென்னை – 7, நா.ப. 1978.

50.மறைமலையடிகள், அறிவுரைக் கொத்து, முல்லை நிலையம், 9, பாரதி நகர் முதல் தெரு, தி.நகர், சென்னை – 17, மு.ப. 1997.

51. மித்ரா, (உண்ணாமலை, வீ.,) பாவேந்தரின் புதியதோர் உலகம் செய்வோம், மணிமேகலைப் பிரசுரம், தி.நகர், சென்னை – 17, மு.ப. 1999.

52.மீனாட்சி, இரா., தீபாவளிப் பகல், அகரம் வெளியீடு, சிவகங்கை, மு.ப. 1983.

53.மீனாட்சிசுந்தரன், தெ.பொ., எழுத்துச் சீர்திருத்தம், சேகர் பதிப்பகம், சென்னை – 1,1979.

54.முகம்மது பரூக், தமிழமுது, நன்னெறிப் பதிப்பகம், திருநெல்வேலி – 11, 1991.

55.முத்துச்சிதம்பரம், பெண்ணியத் தோற்றமும் வளர்ச்சியும், தமிழ்ப் புத்தகாலயம், தி.நகர், சென்னை – 17, மு.ப. 1999.

56.முத்து, சு. நெல்லை., முக்கோணத் தமிழ் வளரட்டும் (கட்), 4.2.2000, தினமணி, சென்னை.

57.யோகீஸ்வரன், பி., தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், நீலா பதிப்பகம், சென்னை.

58.ராஜ், ஐ., சக்தி திரண்டால், வைகறை பதிப்பகம், மதுரை.

59.ராஜதுரை, எஸ்., கீதா.வ., பெரியார் சுயமரியதைச் சமதர்மம், விடியல் பதிப்பகம், 3, மாரியம்மன் கோவில் வீதி, உப்பிலிபாளையம்,கோவை –5, மு.ப. டிசம்பர் 1996.

60.ராஜம்கிருஷ்ணன், காலந்தோறும் பெண், தாகம், 58, டி.பி.கோவில் தெரு, சென்னை – 5, 1989.

61. ராமதேசிகன், அறிவியலின் முன்னோடி ஆயுர்வேதம் (கட்.), 28.1.2000, தினமணி, சென்னை.

62.லெனின், மகளிர் விடுதலை பற்றி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மு.ப. 1978.

63.வரதராசன், மு., மொழி வரலாறு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை, சென்னை –1, 1981.

இலக்கியங்கள்

64.குறுந்தொகை, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

65.புறநானூறு, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

66.பதிற்றுப்பத்து, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

67.நெடுநல்வாடை, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

68.மதுரைக்காஞ்சி, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

69. திருக்குறள், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை – 1.

70.சிலப்பதிகாரம், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு 28, தஞ்சாவூர், நவம்பர் 1985.

71. மணிமேகலை, வர்த்தமானன் பதிப்பகம், தி.நகர், சென்னை – 17.

72.திருமந்திரம், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை – 17.

73. மூவர் தேவாரம் : தலைமுறை (தொ. ஆ. மகாதேவன், வெ.,) காமகோடி ஆய்வு மையம், கீதா.வ.,46ஏ, கல்யாணராமன் தெரு, கும்பகோணம், மு.ப. 1988.

74. மேருமந்திர புராணம், பிரேமா பிரசுரம், 35, ஆற்காடு சாலை, சென்னை –24.

இலக்கணங்கள்

75. தொல்காப்பியம், திருநெல்வேலித் தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை –1, இ.பதி. 1954.

76. நன்னூல், (காண்டிகையுரை), தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு 7, தஞ்சாவூர், மே 1984.

ஆய்வுக்கோவைகள்

77. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழ் ஆசிரியர்கள் மன்றம், ஆய்வுக்கோவை 1999 தொகுதி 1 மற்றும் 2, மனோன்மணிய சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி – 627 012.

களஞ்சியங்கள்

78. கலைக்களஞ்சியம் தொகுதி 4, தமிழ் வளர்ச்சிச் கழகம், சென்னை, 1956.

79. வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 1, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர்.

80. வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 2, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர்.

இதழ்களும் மலர்களும்

81. அறவாணன், க.ப., தேடல் (தொகுதி 2), தமிழியல் துறை, புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி – 14,1991.

82. தினமலர் – வாரமலர், 05.01.1986, சென்னை.

83. தினமணிக்கதிர், 16.05.1999, சேலம்.

84. ஓம் சக்தி (மாத இதழ்), மாரியம்மாள் மகாலிங்கம் மன்றம், 69 ஆரோக்கியசாமி சாலை, ஆர்.எஸ்.புரம், கோவை – 3.

85. செந்தமிழ்ச் செல்வி, (மாத இதழ்), திருநெல்வேலி, சைவச் சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 522, டி.டி.கே. சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை – 18.

86. ஓம் சக்தி – தீபாவளி மலர் 2004, 69 ஆரோக்கியசாமி சாலை, கோவை –2.

87. தினமணி சுதந்திரப் பொன்விழா மலர் ஆகஸ்ட் 1997, தினமணி, சென்னை.

88. குடியரசு, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம், ஈரோடு.

நாளிதழ்கள்

89. தினமணி நாளிதழ்கள், 20.07.2000, 07.02.2001, 11.10.2002, 02.08.2005,11.10.2005.

90. விடுதலை, வேப்பேரி, சென்னை.

ஆங்கில நூல்கள்

91. Ambedkar, Who were the Shudras. Learning to be, UNESCO Publication, 1972.

92. Peter F. Drucker, Managing of Future, Tata Mc GrawHill, New Delhi.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை - 600 113

# அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெபொமீயும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | **65.00** |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |

---

**622 குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் 70.00**